# THE
# BHAGAVAD GITA.

## A METRICAL TRANSLATION INTO TAMIL.

BY

**S. MUTHU IYER, B. A.,**

*Head Master, Hindu High School,*

**Masulipatam.**

## ஸ்ரீ பகவத்கீதை வெண்பா.

இஃது

திரிசிரபுரம் ஜில்லாவைச் சார்ந்த

திருநயம். ஸா. முத்து ஐயரால்

இயற்றப்பட்டது.

**Madras:**

**Printed at the Ripon Press.**

**1907.**

**Price Re. 1-0-0.**  விலை ரூபா 1-0-0.

# விளம்பரம்.

இப்புத்தகம் வேண்டுவோர் அடியிற்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| பிரதி ஒன்றுக்கு விலை... | ... ரூபா. | 1 0 0 |
| மொத்தமாக வாங்குகிறவர்களுக்கு | | |
| 10-முதல் 20-காபிவரையில் காபி யொன்றுக்கு | ரூபா. | 0 12 0 |
| 20-முதல் 50-வரை ... | ... ,, | 0 10 0 |
| 50-க்கு மேல் ... | ... ,, | 0 8 0 |

தபால்கூலி இதில் அடங்கவில்லை.

எஸ். முத்து ஐயர்,

ஹிந்து ஹைஸ்கூல்,

மசூலிபட்டணம்.

# PREFACE.

In offering this Translation of the Bhagavad-Gita to the public, it is my object to supply a real want. The study of the Gita has, of late, become very popular among all the educated classes of our countrymen, and it is no longer confined to the learned and leisured few among the Brahmans, as it once used to be. But the original Sanskrit must be felt as a great stumbling-block by many who are not acquainted with that language, and the need of a good and reliable translation in our vernacular must be greatly felt by them. Hence, I hope that my humble effort to supply that need will be acceptable to them.

It is true that there are already in existence, several translations, of the book in Tamil, and some of them are, no doubt, excellent in their own way. Most of these, of course, are in prose, and I have come across only two metrical versions of the book. One of these does not strictly adhere to the orginal, and the other bearing the same title as the present

volume, though written hundreds of years ago by an eminent author, was only very recently published, its very existence having been unknown hitherto. The book has been published only in part as yet, and it does not follow the original, verse by verse, and, I fear, the style too is in many places far above the comprehension of the ordinary reader. At any rate, I thought there would be no harm in contributing one more version of the immortal Lay of our Lord, on a different plan from the other two.

A metrical translation, it will be admitted, has its own worth and advantage, and it is unnecessary to dwell at great length upon them. The sweetness and harmony of the numbers, the terseness of the language, the elegance of the diction, and above all, the facility it affords for easily committing the verses to memory and thus calling back the thoughts at will, have induced many writers to adopt a metrical style as the best medium of translation, especially when the original itself happens to be in a metrical form. I have, therefore, adopted it for my translation also. But the language of poetry, however plain and simple it may be, is not easily understood by the ordinary readers. I have, therefore, prefixed to

each stanza, as a heading, its purport in a few words so as to suggest its meaning very easily, and also added brief notes to most of the stanzas, wherever I found any real difficulty to be explained. Another advantage that the book can claim for it, is that the kind of metre adopted is a short simple and sonorous one much appreciated by writers and readers, and also one separate stanza is invariably allotted to each *sloka* of the original. This plan will enable the reader to connect easily the translation with the original, and thus facilitate its study side by side with the original. The careful reader will find that the original Ṣanskrit text is very closely followed throughout, and wherever there may appear to be any addition or alteration, he will find that it has its authority in Sri Sankara's commentary, which I have followed for the correct interpretation of the text.

In the preparation of this book, I have consulted several translations of the Gita and its commentaries both in English and in Tamil, and my obligations are particularly due to Messrs. Mahadeva Sastri and Sundararaja Sarma, Mrs. Annie Besant, and the late Mr. Dorasawmy

Muppanar, whose excellent works have all helped me not a little in executing this arduous task.

In conclusion, I hope that the book will be found eminently suitable for being introduced as a text-book for the teaching of religion in all the schools in the Tamil districts, in which an attempt has been made to impart religious instruction to the pupils, and that the heads of such schools will be pleased to help me as much as it may lie in their power by introducing it as a text-book.

All suggestions for improvements will be most gratefully received and adopted in the next edition.

MASULIPATAM, 10TH MAY 1907.

S. Muthu Iyer,
*Author.*



# முகவுரை.



பகவத்கீதை யென்பது பாரதயுத்தம் தொடங்கிய போது குருக்ஷேத்திர யுத்தபூமியிலே பாண்டவதிலகனாகிய அர்ச்சுனனுக்கு ஸ்ரீகண்ணபிரானால் கூறப்பட்ட ஞானோபதேசம் ஆகும். அவ்வருச்சுனன் துரோணாசாரியரிடத்தில் நெடுங்காலம் வித்தைகள் அப்யஸித்து அநேகவிஷயங்களை அறிந்தவனாயிருந்தும், போர்தொடங்கும் அச்சமயத்தில் பீஷ்மத்ரோணாதி பெரியோர்களையும் துரியோதனாதி பந்துவர்க்கங்களையும் போர்க்களத்தில் கண்டபோது மனங்கலங்கித் துணிவிழந்து "இவர்களோடு எங்ஙனம் போர்புரிவேன்? இவர்களை எவ்வாறு கொல்வேன்? கொல்வேனாயின் பாவமும் பழியும் உண்டாமே" என்று கருணையும் சோகமும் மேலிட்டு, தனக்குச் சாரதியாய் எழுந்தருளியிருந்த பகவானை நோக்கி, 'நான் போர்செய்ய மாட்டேன்' என்று தான் மேற்கொண்ட காரியத்தைத் துறந்து பின்னிடலாயினான். அவ்வாறு பின்னிடுதல் அவிவேகமும் அதர்மமும் அநுசிதமுமாயினும், அவன் அப்போது அளவிடற்கரிய சோகத்தில் ஆழ்ந்திருந்ததனாலே யுக்தாயுக்தம் தெரிந்துகொள்ளத் திறமில்லாதவனாய் மயங்கினான். அதுகண்டு, நோயாளியின் வியாதிக்குக் காரணம் தெரிந்து உரிய சிகிற்சை செய்யும் நல்வைத்தியன் போல, பகவானும் அவன் அறிவைக் கலக்கிய சோகமோஹங்கள் அஜ்ஞா

னத்தால் உண்டானவைகளென்று தெரிந்து, அதனை நீக்கு தற்குரிய ஆத்மஞானோபதேசத்தைச் செய்யலானார். இவ்வாறு இந்நூல் தொடங்கப்பட்டு, பின்பு அருச்சுனனுக்குண்டாகிய பலவகைச் சங்கைகளையும் நீக்கும்பொருட்டு ஒன்றின்மேல் ஒன்றாக அநேக விஷயங்களைப் "போதிக்க வேண்டி வந்ததனால், குரு சிஷ்ய ஸம்வாதத்தால் பெருகக முற்று முடிந்ததென்பது இதனை ஊகித்துப் படிப்பவர்களுக்கு வெள்ளிடை மலைபோல விளங்காநிற்கும்.

இந்நூல் இந்துமதத்தைத் தழுவிய அதிமுக்யமான மதக்கிரந்தங்களுள் ஒன்று என்பது பலரும் ஒப்பிய, விஷயமே. இஃது அத்வைத விசிஷ்டாத்வைத த்வைதங்களாகிய திரிமதத்தாராலும் பொதுவாகக் கொள்ளத் தக்கதென்பது அவ்வம்மதாசார்யர்கள் தத்தம் கொள்கைக்கேற்பப் பாஷ்யம் எழுதித் தத்தம் மதங்களுக்கு ஆதாரமாக இதனைக்கொண்டிருத்தலாலேயே விளங்கும். இதன் சிறப்பைப்பற்றிப் பரக்கக் கூறுதல் அநாவசியம். இஃது ஸர்வமத ஸமரஸமாக்கிக் கொள்ளத்தக்கதென்றும், ஸகல வேத சாஸ்த்ரங்களின் பொருளையும் ஆடியுள் மலைபோல அடக்கிக் காட்டுவதென்றும் இந்நூலை ஐயந்திரிபறக் கற்பவர் அறியாமற் போகார். பாரதம் பஞ்சமவேதம் என்று கொள்வதனால் அதனுட்சாரமாகிய கீதையை வேதஸாரமென்பதில் யாது ஆக்ஷேபனை? இதுவே இந்துமதத்துக்குரிய வேதஸாரமாகக் கொள்ளத் தக்க நூல்.

இந்நூலைப்பற்றி முன்னோர்கள் புகழ்ந்து கூறியவற்றுட் சில பின்வருமாறு:—

சீரா ருபநிடதம் சேதாவாம் தேவர்பிரான்
பாராருமீ ஆயனும் பார்த்தனோர் – நீரார்
இளங்கனமும் கீதையே இன்னமுதாம் உண்பார்
களங்கமில்உள் ளத்தவராம் காண்.

தெள்டி நலிற் சென்று தினம்தோறும் ஆடுதலால்
விள்ளுமுடல் மாசே விலகுறுமால் – எள்ளரிய
கீதையெனும் வண்புனலால் கேளீர் சமுசாரத்
தீதார் மலம்தவிரும் சென்று.

நூலெல்லாம் கீதையெனும் நுண்ணூலின் உள்ளடங்கும்
மாலுள் அடங்குவர்காண் வான்தேவர் – மேலாம்
வாநதியுட் புண்ணியநீர் மாமநுநூல் உள்ளே
மருவறமெல் லாம்அடங்கும் மற்று.

கீதையொன்றே கற்றற் குரித்தாகும் மற்றவற்றால்
யாதும் பயனில்லை என்னென்னில் – தாதவிழும்
தாமரைக்கொப் பூழுடையான் தண்கமல வாண்முகத்தில்
தோமறவே தோன்றிடலால் ஆங்கு.

இத்துணைப் பெருமைவாய்ந்த நூலைப் பொருளறியா மற் பாராயணம் செய்வதும்கூடப் புண்ணிய மாகுமெனில், அதன் பொருள் தெரிந்து விவேகித்துப் படிப்பவர்களுக்கு உண்டாகும் நன்மையை அளவிடவும் கூடுமோ? ஆதலின், இந் நூற்பெருமையை அறிந்து பலரும் இதைப்படிக்க விரும்புகின்றார்களாதலின் இதைத் தமிழில் மொழிபெயர்க்கின் ஸம்ஸ்க்ருத பாஷையில் தேர்ச்சியில்லாத பலருக்கும் பயன்படுமென்றுகருதி இவ்வாறு மொழிபெயர்க்க லானேன். செய்யுள் நடையான்று, விரிந்த விஷயங்களைச் சில மொழிகளில் அடக்

கிக்கொள்வதாய் இசைநயமும் பாநயமும் பெற்றுப் படிக்தற் கினிமையாய்ப் பாடம்பண்ணுதற்கும் ஸுலபமாகிப் பலவகையாலும் வசனநடையினும் சிறப்புடைத்தாதல்பற்றி அதனை இங்குக் கைக்கொள்ளலாயினேன். பெரும்பாலும் நேரிசை வெண்பாவாலும் சிறுபான்மை பஃறொடை வெண்பாவாலும் இன்னிசை வெண்பாவாலும் இயற்றப்பட்டுள்ளதுபற்றி இந்நூலுக்குப் பகவத்கீதை வெண்பா என்று பெயரிடல் ஆயிற்று.

இன்னமும், இதுவரையில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளவற்றில் ஒன்றிலும் இல்லாத பல விசேஷங்கள் இதில் உள்ளன. அவை பின்வருமாறு:—

(1) முக்கியமான விஷயங்களில் மூலத்தின் பொருள் கூட்டல் குறைத்தல் திரித்தல் இன்றி ஆடியிற் சாயைபோல் மாறாமல் காட்டப்பட்டுள்ளது. அப்பிரதானமான விளித்தொடர்களில் மாத்திரம் செய்யுட்பாங்கை அநுஸரித்து அதற்கியன்றபடி மாற்றியுள்ளேனேயன்றி மற்றை முக்ய விஷயங்களில் மாற்றவேயில்லை. ஆயினும் ஸாத்தியமானவரையில் வடமொழிகளையும் வடமொழிப் புணர்ச்சிகளையும் சேர்க்காமல் தமிழ் மொழிகளையே பிரயோகித்துள்ளேன். இவ்வளவுதூரம் முதனூலோடு பொருள் ஒற்றுமைபடச் சொல்லிய மொழிபெயர்ப்புகள் செய்யுளில் வேறில்லை யென்பதே எனது துணிபு.

(2) இதனுள் முதனூல் சுலோகம் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே ஒவ்வொரு பாடல் கொடுக்கப்பட்டுள்ளது.

இதனால், முதனூலை ஒட்டிப் படிப்பவர்களுக்கு இன்னசுலோகத்தின் பொருள் இன்ன செய்யுளில் அடங்கியிருப்பதென்று உடனே கண்டுகொள்ளலாகும். அங்கு 10-வது சுலோகத்தில் சொல்லிய விஷயத்தை இங்கும் 10-வது பாடலிலே காணலாகும். இதன் அநுகூலம் புஸ்தகத்தைப் படிக்கும்போது தெரியவரும்.

(3) ஒவ்வொரு அத்தியாயத்தின் முதலிலும் அவ்வவ் விஷயங்களை நன்கு விளங்கும்படி தெளிவான பொருளடக்கமும், ஒவ்வொரு பாடலின் தலையிலும் அவ்வப்பாடலின் பொருள் எளிது விளங்கும்படி அதன் தாத்பரியமும், வேண்டிவரும் இடங்களிலெல்லாம் பொருள் நன்கு விளங்கும்படி குறிப்புரைகளும் சேர்த்துப் படிப்பவர்களின் அநுகூலத்தையே நோக்கமாகக்கொண்டு எழுதியுள்ளேன். இக்காரணம் பற்றியே பாடல்களும் சாத்தியமான வரையில் சந்திபிரித் தெழுதப் பட்டுள்ளன.

இப்புத்தகம் பொதுப்பட எல்லாருக்கும் உபயோகமாதலன்றி இந்துமதத்தைப் போதிக்கும் பாடசாலைகளில் முக்கிய புஸ்தகமாக (Text-book) நியமித்துப் போதித்தற்கு மிகவும் தக்கதாகும். ஆதலின், ஸ்கூல் அதிகாரிகள் இதைத் தத்தம் ஸ்கூல்களில் உபயோகப்படுத்துவாராயின் அவர்கள் தாமும் நன்மையடைவதன்றி எனக்கும் பேருபகாரம் செய்து ஊக்கம் அளிப்பவராவர். ஆகையால் ஸ்கூல் அதிகாரிகளை அவ்வாறு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பகவத்கீதையைவிட நமது மதத்தைப் போதிப்பதற்குச் சாதகமான புத்தகம் வேறில்லை.

முடிவில் இந்நூலில் அநேகம் குற்றம் குறைவுகள் இருப்பினும் அவற்றைப் பெரியோர்கள் எடுத்துப் பாராட்டாமல் எனது நன்முயற்சியையே கருதி இதனை அன்போடு ஆதரித்தல் வேண்டுமென்று அவர்களை மிகவணங்கிக் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

"நல்லார் பிறர்குற்றம் நாடார் நலம்தெரிந்து
கல்லார் பிறர்குற்றம் காண்பரோ - அல்லாத
என்போல்வார் என்னை இகழ்வரோ என்கவிக்குப்
பின்பாரோ காண்பார் பிழை".

மகுலிபட்டணம்
1907-ம் ஷு மேமீ.

இங்ஙனம்
சா. முத்து ஐயர்.

# சாத்துகவிகள்.



தஞ்சாவூர் ஜில்லா விஷ்ணம்பேட்டை கிராமம்

நாராயணய்யர் புத்திரர்

மஃா-ா-ஸ்ரீ சேதுராமய்யர் அவர்கள்

இயற்றியது.

நேரிசை வெண்பா.

சீரிருக்கும் சோலைச் செறிவிருக்கும் செந்தமிழின்
ஏரிருக்கும் பாவின் இசையிருக்கும் - காரிருக்கும்
கண்டன் அருளிருக்கும் காவிரிசேர் நன்னாட்டில்
உண்டு திருநயமாம் ஊர். (க)

இவ்வூர் மறையோர் இனத்துதித்தோன் இன்தமிழைச்
செவ்வையுட னேவளர்க்கும் சீர்மையோன் - எவ்வமறப்
போதிக்கும் சாமிஐயன் புத்திரன்முத் துப்புலவன்
நாதிக்கும் நல்லிசையோன் நன்கு. (உ)

வேதமுடி வென்றே வியனுலகெ லாம்துதிக்கும்
கீதையினை வெண்பாவாற் கேண்மையுடன் - பூதலத்தோர்
உய்ய உரைத்திட்டான் உண்மைப் பொருளனைத்தும்
கையிற் கனியெனவே கண்டு. (௩)

சொன்னயமும் தூய சுவைநயமும் மோனைமுதல்
நன்னயமும் நல்லோர் நவில்கின்ற - பன்னயமும்
தோன்ற மொழிந்திட்டான் தொல்புவியி லேதுகள்தீர்
ஆன்ற அறிவுடையோன் ஆய்ந்து. (௪)

சாத்துகவி முற்றிற்று.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | பாடல். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 23 | காப்பு | கன்மனத்தின் | கன்மனத்தன் |
| 27 | 16 | சசியறிந | நசசியறிந |
| 40 | 62 | அடித்திடுமே | அடுத்தீடுமே |
| 46 | 4 | நிலையைன் | நிலையை |
| 49 | 13 | விளக்கும் | விளைககும் |
| 67 | 23 * | சோருமெய் | சேருமெய |
| 69 | 29 | சிலர்ஓமம் | சிலர்பிராணாயாமம் |
| 77 | 4 | ஒரேபயளை | ஒரேபயனை |
| 80 | 12 | கர்மம் | காமம் |
| 94 | 23 | சொல்லும் | சொல்லும்இது |
| 105 | 5 | உள்ளதைத | உளளதைத |
| 108 | 17 | மற்றஅவன் | மன்னஅவன் |
| 110 | 24 | நாறு | நரறு |
| 114 | காப்பு | றம்புவியியில் | றம்புவியில் |
| 121 | 25 | யாரும் | மாரும் |
| 172 | 12 | க்ஷசாதன | மோக்ஷசாதன |
| 191 | 34 | விளங்குவது | விளக்குவது |
| 200 | 23 | காரணங்களாகிய | காரணங்களாக |

* பிழை பாடலில் இல்லாவிடில், பாட்டின் தலைப்பிலாவது, உரையிலாவது உள்ளது.

# பொருளடக்கம்.

உ

ஸ்ரீ கிருஷ்ணாயநம:

# ஸ்ரீ பகவத்கீதை வெண்பா.



## பாயிரம்.



### கடவுள் வாழ்த்து.

#### விநாயகக் கடவுள்.

*திண்பார் புகழ்பகவற் கீதையினைச் செந்தமிழில்*
*வெண்பாவால் நன்கு விளம்பவருட் - கண்பாராய்*
*மஞ்சிருக்கும் மால்வரைக்கண் வந்த மடப்பிடியின்*
*குஞ்சரக்கன் றேமகிழ்ச்சி கூர்ந்து.* (க)

வந்த - பர்வதராசனுக்குப் புத்திரியாகத் தோன்றிய.

#### சிவபெருமான்.

*இழைவகிரும் நுண்ணிடையாள் இன்பினமர் பாகன்*
*பழமறையும் தேடரிய பாதச் - செழுமலர்கள்*
*சிந்திப்பார் சிந்தைத் திருமலியோ டைத்தடத்தா*
*னந்தத்தே னைப்பெருக்கும் நன்கு.* (உ)

### உமாதேவியார்.

மணியிலொளி போலும் மலரில்மணம் போலும்
தனைவிறவி சன்றனெறி சார்ந்து - அனிதிகழும்
ஐந்தொழிலும் ஆற்றும் அருள்வடிவெம் அம்மைபாதம்.
சிந்தையுறு தாரும் சிறந்து. (௩)

### சுப்பிரமணியர்

ஆறு முகமும் அருள்விழியும் அபயக்கை
மாறில்வரை மைந்தனைத்தந்த மையேறும் - சீறணியும்
மேனியுமென் உள்ளில் விளங்கி வினைத்திமிரம்
தானகலத் தேசு தரும். (௪)

### ஸ்ரீ கிருஷ்ணபகவான்.

வைகுந்தம் நீத்து வசுதேவர் இறபிறந்து
பொய்யடையார் ஆய்ச்சியர்வாழ் பூம்பாடி - எய்திவிளாந
திப்புவியும் வானுலகும் ஈண்டுய்யா திர்ந்தருளும்
மைப்புயல்வண் ணன்தாள் மலர். (௫)

திருவளிக்கும் ஞானந் திகழ்வளிக்கும் தேசார்
உருவளிக்கும் உற்றவினை ஒப்பில - மருவரிய
மாண்பொருளைத் தந்து மயங்காது வாழ்விக்கும்
காண்பரிய கண்ணன் கழல். (௬)

### கலைமகள்.

வானோர் பெருமான்தன் மைத்துனற்குச் சொற்றதொரு
ஞான கரநூலை நானோத - ஊனம்
தவிர்த்தருளும் தாதுகெழும் தண்கமலப் பூவிற்
பவித்தருளும் அம்மை பதம். (௭)

## அவையடக்கம்.

கண்ணன் கடைந்தளித்த கற்பரிய ஞானமெனும்
தண்ணமுதை உண்டார்க்குச் சன்மநோய் - நன் றுதலின்
றென்பதனை உட்கொண் டியம்பப் புகுந்திட்டேன்
மன்புவியீ தின்னதனை மற்று. (௮)

மேருவினைச் சேருமொரு வெங்கொடியும் மேவுறுபொன்
ஆருமதிப்பாய் ஆகும் அதுபோலச் - சீருபரும்
தேவர்பிரான் செப்பும் செழும்பொருளைச் சேர்தலினால்
மேவுமெளி யேன்உரையும் வீறு. (௯)

## நூற்சிறப்பு.

ஆன்மவியல் தேற்றி அறிவைப் புகட்டுமநூல்
தான்மகியில் வேறிதுபோற் சாற்றுவரோ - வான்மிசையூர்
செங்கதிர்போல் வேறு திமிரம் துடைத்தொளியை
இங்களிப்ப துண்டோ இசை. (௧௦)

## நூற்பயன்.

பண்ணுறுபா நூறு யிரம்பெறுமா பாரதத்தின்
கண்ணுறுநற் கீதையெனும் கண்ணனருள் - எண்ணுமறை
உட்பொருளாய் ஒண்பிரம வித்தையுமாம் யோகநூல்
பெட்புறுவார்க் கில்லை பிறப்பு. (௧௧)

சேரதிரும் வீதித் திருநயத்தில் வாழ்கிருஷ்ண
பாரதிதன் பாலுதித்த பாவலனன் - னீரதமோர்
முதநுவையன் சொற்ற முதுநூலை ஆய்வார்க்கு
நித்தனருள் நீடும் நிசம. (கஉ)

திருநயம் - இஃது திரிசிரபுரத்துக்கு இருகாதம் கிழக்கில், திருவன்பில் என்னும் ஸ்தலத்துக்கு ஒன்றரை மைல் வடக்கில் உள்ளது. கிருஷ்ணபாரதி - இவர் திருவிளையாடற் கீர்த்தனை முதலிய அநேக நூல்களை இயற்றிய சிறந்த வித்வான். பால் உதித்த - இவர் பௌத்திரனுக்குப் புத்திரனாய்ச் ஜனித்த. நீரதம் - மேகம்; தான் கற்றவித்தையைக் கைம்மாறு கருதாமல் உலகுக்கு அளித்தலினாலே மேகம்போலும் என்னப்பட்டது. முதுநூல்-பழமையாகிய இக் கீதா சாஸ்திரத்தை. ஆய்வார்க்கு - பொருளறிந்து படித்து அநுஷ்டிப்பவருக்கு. நித்தன் - பரப்ரஹ்ம ஸ்வரூபியாகிய ஸ்ரீ வாசுதேவன். நீடும் - நாளுக்கு நாள் ஓங்கும்.

பாயிரம் முற்றும்.



முதல் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1. சஞ்சயனை நோக்கித் திருதராஷ்டிரன் கேட்டல்.

2. அக்கேள்விக்குச் சஞ்சயன் மறுமொழி சொல்லத் தொடங்கல்.

3-11. யுத்தத்தில் சகாயம் செய்யும்பொருட்டுத் துரியோதனன் துரோணாசாரியரைப் பிரார்த்தித்தல்.

12-13. துரியோதனனுக்குச் சந்தோஷம் உண்டாக்கும் பொருட்டு பீஷ்மர் முதலானோர் சங்கநாதம் செய்தல்.

14-18. சேனைகளுக்கு உற்சாகம் உண்டு பண்ணும்பொருட்டு ஸ்ரீ கிருஷ்ணன் முதலானோர் சங்கநாதம் செய்தல்.

19. பாண்டவர்களின் சங்கநாதத்தால் துரியோதனாதியர் மனம் கலங்குதல்.

20-23. பகைவர் சேனையைக் கிட்டி நோக்கும்பொருட்டுத் தேரை இருசேனைகளும் நடுவில் நிறுத்தும்படி அருச்சுனன் ஸ்ரீகிருஷ்ணனை வேண்டல்.

24-25. திருதராஷ்டிரனை நோக்கிச் சஞ்சயன் கூறுதல்.

26-27. போர்க்களத்தில் புத்திரர் முதலானோரைக் கண்டு அருச்சுனன் வியசனித்தல்.

28-46. ஸ்ரீகிருஷ்ணனை நோக்கி அருச்சுனன் தன் வியசனத்தைக் கூறுதல்.

47. சோகத்தால் அருச்சுனன் இரதத்தில் சோர்ந்திருத்தல்.

உ

ஸ்ரீ கிருஷ்ணாயநம:

# ஸ்ரீ பகவத்கீதை வெண்பா.

## முதல் அத்தியாயம்.

## அர்ஜுந விஷாத யோகம்.

### காப்பு.

ஆரணத்தின் சென்னியிலும் அன்பாரு நெஞ்சமெனும்
சீரணவு செங்கமலத் தும்திகழும் - வாரணமன்
முதியே என்றழைப்ப ஆரிடரைத் தீர்த்தபிரான்
சோதிமலர்ப் பாதத் துணை.

### பாயிரம்.

குருநிலத்தி லேவிசயன் கூடியதன் பாட்டன்
வருகுரவர் மாமன்முதல் மற்றும - அரியதமர்
யாவரையும் கண்டிவரை எவ்வாறு கொல்வனென
மேவுதுயர் கூறுமிரு மிக்கு.

## நூல்.

### எம்மவரும், பாண்டவரும், குருக்ஷேத்திரத்தில் யாதுசெய்தா ரென்று திருதராஷ்டிரன் சஞ்சயனைக் கேட்டல்.

*சீர்திகழும் தூய குருநிலத்தில் தெண்டிரைசூழ்*
*பார்புகழும் எம்மவரும் பாண்டவரும - போர்கருதிச்*
*சென்றொருங்கு கூடியபின் செய்ததெவன் சஞ்சயவிங்*
*கொன்றொழியா தெல்லாம் உரை.* (க)

### துரியோதனன் பகைவர் சேனையைக்கண்டு துரோணா சாரியரோடு கூறினனெனல்.

*அண்ணல்துரி யோதனனங் காடற் கணிவகுத்த*
*நண்ணலர்பா சேனை நலம்கண்டு - வண்ணமலி*
*ஆசிரியன் தன்பால் அணைந்தன் றறைந்திட்டான்*
*நேசமுடன் இன்னவுரை நேர்ந்து.* (உ)

### துரோணாசாரியரே, பாண்டவர் படையைப் பாரீரெனல்.

*ஆரியனே காணாய் அடையார் பெரும்படையைத்*
*தேருமதி வல்லானின் சீடனும் - தாரார்*
*துருபதற்குச் செல்வனுமாம் தோன்றலவன் ஆங்குப்*
*பொருமணிசெய் துய்த்ததனைப் போந்து.* (ங)

### பாண்டவர் சேனையில் அநேக சூரர்கள் இருக்கின்றார்கள்; அவர்கள் யாவரெனில், யுயுதானன், த்ருபதன், விராடன் எனல்.

*ஈங்குறுவர் சூரரவர் வணார் இருஞ்சிலையைச்*
*தாங்குறுவர் வீமன் தனஞ்சயனை - ஓங்கமரில்*
*ஒப்பார்கள் அன்னார் உயுதானன் ஒண்டுருபதன்*
*செப்பார் விராடனெனத் தேர்.* (ச)

வணார் - வலிநிரம்பிய. செப்பார் - புகழ் நிரம்பிய.

**திருஷ்டகேது, காசிராஜன், சேகிதானன், புருஜித் குந்திபோஜன், சைப்யன் எனல்.**

*கேழ்செய்மணிப் பூண்டிட்ட கேதுவொடு காசிமன்*
*தாழ்வில் புகழ்சேகி தானனும் - பாழிய*
*புருசித னொடுகுந்தி போசனெனும் மன்னும்*
*நரபதிசை யிப்பியனும் நாடு.* (௫)

**யுதாமந்யு, உத்தமௌஜன், அபிமந்யு, உபபாண்டவர்கள் எனல்.**

*திறலார் யுதாமநுவும் தெவ்வினையில் வல்ல*
*விறல்உத்த மௌசனெனும் வேந்தும் - அறைகழல்சேர்*
*சோபத் திரனும் துரோபதையின் மைந்தர்களும*
*யாவருமே மாரதர்காண் ஈங்கு.* (௬)

*தெவ்வினை - போர்த்தொழில்.*

**நமது போர்வீரர்களையும் சொல்லுவேனெனல்.**

*நந்திறத்தும் வல்லவராய் நாயகராய் என்படைக்கு*
*முந்துறுவார் தம்மை மொழிகிற்பன் - எந்தாய்*
*தெரிந்திடநீ அந்தணர்தம் செம்மலே ஈதும்*
*பரிந்துளது நன்மதியிற் பற்று.* (௭)

**தேவரீரும், பீஷ்மரும், கர்ணனும், கிருபரும், அசுவத்தாமனும், விகர்ணனும், ஜயத்ரதனும், பிறரும் எனல்.**

*நீயும்விறல் வீட்டுமனும் கன்னனும் நேரலரைச்*
*சாயவடும் ஓர்கிருபா சாரியனும் - தூயபரித*
*தாமா விகன்னனும் சௌமதத்தி யும்விசயத்*
*தேமாலைத் தேரோனும் தேர்.* (௮)

**என்பொருட்டு உயிர்விடத் துணிந்த சூரர் அநேகர் இன்னமும் இருக்கின்றார் எனல்.**

*வேறுபல சூரருளார் வெஞ்சமரத்தில் என்பொருட்டு*
*மாறிலுயிர் விட்டவர்கா ளான்படையோர் - சீறும*
*முனைநிலத்தில் ஒன்னலரை மோதிவயம கொள்வார்*
*அனையவரெல் லோரும் அறி.* (௯)

*விட்டவர் - விடத்துணிந்தவர்.*

**பகைவர் சேனையினும் நம் சேனை பெரிதெனல்.**

*கற்பசூதோள் வீட்டுமனாற் காவலினுள் மேவுறுநம்*
*சொற்படுதா னைகளெல்லை சொல்லரிதே - மற்புயந்து*
*வீமனல் ஆங்கு மெலியாறு போற்றனுறும*
*நாமநெடுந் தாரமிதமாம் நாடு.* (௧0)

*தார் - சேனை.*

**ஆதலின் அதைரியங்கொள்ளாமல் யாவரும் வீட்டுமரைக் காக்கவேண்டுமெனல்.**

*ஆதலினால் எல்லீரும் ஆங்காங் கவர்நிலைக்கண்*
*ஏதமற வேவகுத்த இடபடையில் - மோதமொடு*
*பல்பிரிவில் நின்று பரிவோடு காத்திடுவீர்*
*ஒல்லும்வகை வீட்டுமனை உற்று.* (௧௧)

**அப்போது பீஷ்மர் சங்கைமுழக்கிச் சிங்கநாதம் செய்தாரெனல்.**

*என்னுமவற் குண்மகிழ்ச்சி ஈயவிருங் கௌரவரில்*
*முன்னுறுநர்க் கெல்லாம் முதியோனும் - மன்னவன்மூ*
*தாதையுமாம் வீரன் தனியரிபோல் ஆர்ப்பரித்து*
*நாதமலி சங்கொலித்தான் நன்கு.* (௧௨)

கௌரவர் சேனை யெங்கும் சங்கமுதலிய வாத்தியங்கள் முழக்கப்பட்டன எனல்.

சங்கமிதிர் பேரி தழங்குபறை கொம்புமிரு
தங்கமுதற் பல்லியங்கள் தானையணி - எங்கும்
முழங்கினவால் எண்டிசையும் முந்நீர்போல் மூண்டு
தழங்கினதப் போரொலியும சார்ந்து. (கந)

கண்ணனும் அருச்சுனனும் சங்கநாதம் செய்தாரெனல்.

அன்னதன்பின் வெண்பரிகள் ஆர்ந்த கொடிஞ்சித்தேர்
முன்னிருந்த பாண்டவனும மாதவனும் - மின்னொளிசெய்
திவ்வியவெண் சங்கெடுத்துச் செம்பவள வாய்வைத்துக்
கவ்வைமுகில் போலொலித்தார் கண்டு. (கச)

கவ்வைமுகில் - முழங்கும் மேகம்; கவ்வை - ஒலி.

அவர்களோடு வீமனும் சங்கத்தொனி செய்தானெனல்.

பாஞ்சசன் யுதனோடு பற்குனனும் பற்றலர்பால்
வெஞ்செயல்செய் வீமனும வெவ்வேறு - விஞ்சுபுகழ்ப்
பாஞ்சசநி யம்தேவ தத்தம பவுண்டரமென்
வான்செய்வளை ஊதினார்வாய் வைத்து. (கரு)

வான்செய்வளை - தெய்வத்தன்மையையுடைய சங்கங்களை.

யுதிஷ்டிரனும், நகுலனும், சகதேவனும் சங்கநாதம் செய்தாரெனல்,

அநந்தவிச யத்தையொலித் தானரசர் ஏறும்
சினந்தவிர்உ திட்டிரனச சேயே - எனுமதனைமை
சேர்நகுல னொடுசக தேவன் சுகோடத்தோ
டேர்கொள்மணி புட்பகத்தை ஏய்ந்து. (கசு)

'மணிபுட்பகத்தை ஒலித்தார்' என்று வருவித்துமுடிக்க. சேய்-முருகக்கடவுள்.

**காசிராஜாவும், சிகண்டியும், த்ருஷ்டத்யும்நனும், விராடனும், சாத்யகியும் தத்தம் சங்கங்களை ஊதினரெனல்.**

மேலான காசிநகர் விற்படைவல் வேந்தனும்
தோலாச் சிகண்டி திட்டத் துய்மனும் - மாலேய்யும்
சீரார் விராடபுவிச செம்மலும் சாத்தகியும்
போரார்வெண் சங்கொலித்தார் போந்து. (கள)

மாலேயும் - திருமாலையொத்த.

**பாஞ்சாலனும், உபபாண்டவரும், அபிமன்யுவும், மற்றவர்களும் சங்கநாதம் செய்தாரெனல்**

பாஞ்சாலர் கோனுமவன் பாவைதரு பாலகரும்
நீளுசொற் சுபத்திரையின் செல்வனும் - ஆஞ்சமரில்
வல்லுநராம எல்லோரும் தந்தம் வளையெடுத்து
வெல்லும்வகை ஊதினர்வெவ் வேறு. (கஅ)

**அச்சங்கத்தொனிகளால் கௌரவர் மனங் கலங்கிய தெனல்.**

அந்தவொலி விண்ணுக்கும் அம்புவிக்கும் மாறொலியைத்
தந்தரச நின்னுடைய சார்பினராம் - வெந்தறுகண்
வீரரது நெஞ்சத்தை விருப பிளந்தது காண்
சீரதனைச் செபபலெவன் தேர்ந்து. (கக)

'அரச' என்றது திருதராட்டிரனைக்குறித்தது. சீரதனை-அதன் பெருமையை வேறு உரைத்தல் வேண்டாவென்னல்.

**அப்போது அருச்சுனன் பகைவரைப் பார்த்துக் காண்டீவத்தைக் கையில் எடுத்தானெனல்.**

படைவழங்கி வெம்போர் தொடங்குதலும் பண்பால்
தொடைபுனைந்து வெஞ்சமர்க்குத் துன்னும்-அடையலரைக்
கண்டான் கவித்துவசன் கார்முகத்தைப் போர்முகனாய்
கொண்டான்தன் செங்கரத்திற் கூர்ந்து. (உ0)

### அருச்சுனன் தேரை இரண்டு சேனைக்கும் நடுவில் நிறுத்தும்படி கண்ணபிரானை வேண்டினன் எனல்.

மாயோன் செழுங்கமல வாண்முகத்தை நோக்கினனத்
தூயோன் உரைத்திட்டான் தோன்றல்கேள் - சாயாத
தேரிதனை எந்தாயிச சேனையிரண் டிற்குமிடை
ஆர நிறுத்திடுகென் றங்கு. (உக)

'தோன்றல்' என்றது திருதராட்டிரனைக்குறித்தது. 'என்று உரைத்திட்டான்' என்று கூட்டுக.

### பகைவரைக் கிட்டி நோக்குதற்குத் தேரைச் செலுத்துவீரெனல்.

போர்விழைந்து முன்னின்ற புல்லாருள் யாவரொடு
நேரெதிர்த்திவ் வெஞ்சமர்க்கண் நின்றுநான் - வீரமுடன்
போர்புரிதல் வேண்டுமெனப் புந்தியுறத் தேருதற்குத்
தேரிதனைத் தாவென்றான் தேர்ந்து. (உஉ)

### துரியோதனனுக்குத் துணையாக வந்தவர்களைப் பார்க்கவேண்டுமென்றனனெனல்.

துன்மதியோன் ஆய துரியோ தனற்கிகலில்
நன்மைசெயத் தம்முளத்தில் நாடினராய் - வன்மமுடன்
போர்புரியப் போதும் பொருநரிவர்க் காணமனத்
தார்வமுளேன் என்றுரைத்தான் ஆங்கு. (உங)

### கண்ணபிரான் அவ்வாறே தேரை இருபடைக்கும் நடுவில் நிறுத்தினரெனல்.

இவ்வாறு பார்த்தன் இசைத்தலுமீ ரேழுலகும்
செவ்வாயின் உண்டுமிழ்ந்த தேவர்பிரான - அவ்வா
றிருபடைக்கும் நாப்பண் இருத்தினான் காணும்
திருமலிபொற் றேரதனைத் தேர்ந்து. (உச)

நாப்பண் - மத்தியில்.

பீஷ்மத்ரோணாதி வீரர்களுக்கெதிரே நிறுத்திப் பாரென்றானெனல்.

வீட்டுமற்றும் வென்றித் துரோணற்கும் வேறுள்ள
ஈட்டின்மிகு வேந்தரவர் எல்லோர்க்கும் - பீட்டின
எதிர்நிறுத்திப் பாராயிங் கென்றுநிற்பார் தம்மை
அதிர்கழலாய் என்றான் அவன். (உரு)

அருச்சுனன் தன் பந்துமித்திரர்களை அச்சேனையில் கண்டானெனல்.

ஆயிடையே கண்ணுற்றான் ஐயரைமுன் தாதையரை
நேயமலி நீள்குரவர் மாதுலரை - வேய
உடன்பிறந்தார் புத்திரரைப் பேரர்தமை உற்று
விடும்பரிசில் மித்திரரை வேந்து. (உசா)

இதுவுமது.

மற்றுமவன் மாமன்மார் மாண்பார் அருந்தோழர்
பற்றுமுதிர் பந்துக்கள் பல்லோரைக் - குற்றமறு
சிந்தையான் குந்திமகிழ் செல்வனிரு சேனைகளும்
அந்தரத்து நின்றுகண்டான் ஆங்கு. (உஎ)

அந்தரத்து - நடுவில்.

அருச்சுனன் துயரடைந்து கண்ணனோடு கூறினான் எனல்.

பேரருளன் ஆகிய பிழைபடாநற் சிந்தையினன்
ஆருயிட ரோடறைவான் அண்ணலொடு - காருகந்த
மேனியாய் போர்புரிதல் மேவிவரும் சுற்றத்தை
யானெதிரிற் காண்கின்றேன் ஈங்கு. (உஅ)

**மெய்த்தளர்ச்சிமுதலிய சோகக்குறிகளையடைகின்றேனெனல்.**

கண்டிவமும் அங்கமெல்லாம் கைதளரும் காலத்தி
லுண்டாந்துபோல் வியரும் உலர்ந்திடுமே - கொண்ட
உடலநடுக்கம் உற்றிடுமே உண்மயிர்க்கால் தோறும்
கடிது பொடிப்பெழுமே காண். (௨௯)

பொடிப்பெழும் - மயிர்க்கூச்சுண்டாகும்.

**உடல் வெதும்பி மனச்சுழற்சியுற்றேனெனல்.**

காண்டீவமும் கைநழுவும் கன்றியதென் மேனியெலாம்
மூண்டழல் போலெரியும் முன்றேனே - ஈண்டு
வலியிலலேன் நின்றிடற்கும் வல்லாலேன் நெஞ்சம்
உலையும் சுழற்சியினால் ஊங்கு. (௩௰)

உலையும் - கலங்கும். ஊங்கு - மிகுதி, முன்னிலையிடமுமாம்.

**பந்துக்களைக் கொன்றடையும் பயனைக்காணேனெனல்.**

துன்னிமித்தம் தோன்றிடவும் தாபோனே காண்கின்றேன்
என்னிமித்தம் கொல்லுவனயான் இத்தமரை - இன்னலுற
வெஞ்சமரிற் கொல்லுதலால் மேவுபயன் யான்காணேன்
கஞ்சமலர்க் கண்ணநீ காண். (௩௧)

நிமித்தம் - சகுனம். தமர் - உறவினர்.

**இராச்சியம் முதலானவற்றை வேண்டேனெனல்.**

வேண்டேனே வெற்றி விரும்பேன் வியனரசும்
நீண்டபல இன்பமுமநான் நேடேனே - ஈண்டுபயன்
என்னாகும் நல்லரசால் இன்பாலென் வாழ்வாலென்
பொன்னாரும் மார்ப புகல். (௩௨)

**பந்துக்களைக்கொன்று பெறும் வாழ்வினால் பயனில்லையெனல்.**

*திருநாடும் செல்வமும் தேடரிய இன்பும்*
*அரிதா எவர்பொருட்டிங் கார்வேம் - உரியவ்வர்*
*தாமேமுன் நின்றனர்காண் தம்பொருளும் ஆவியும்விட்*
*டாமா றமர்க்கெழுந்தே ஆங்கு.* (௩௩)

**ஆசிரியர் முதலானோர் நான் மனம்கலக்கும்படி எதிர்நிற்கின்றார்களெனல்.**

*ஆசிரியர் தாதையர்கள் அன்புடைய புத்திரர்கள்*
*மாசில் பிதாமகர்கள் மாதுலர்கள் - நேசமுறு*
*மாமனார் பேரரொடு மைத்துனர்சம் பந்திகளும்*
*ஏமுறமுன் நின்றனரே ஈங்கு.* (௩௪)

**மூன்றுலோகமும் பெறினும் பந்துக்களைக் கொல்லேனெனல்,**

*என்னையிவர் கொல்லுகினும் யானிவரைக் கொல்லமனம்*
*உன்னலனே மூவுலகும் உற்றாலும் - பின்னையவன்*
*மண்ணுலகம் ஒன்றைப் பெறற்பொருட்டு மாய்ப்பேனோ*
*கண்ணகரு தேனதனைக் காண்.* (௩௫)

**அவர்களைக் கொல்வதனால் பாவமே உண்டாமெனல்,**

*துரியோ தனன்குழுவைச் சுட்டதன்பின் துன்னும்*
*அரியநலன் யாதெமக்குண் டைய - பெரியகொடும்*
*பாதகரே ஆயினுமிப் பற்றலரைச் செற்றிடினீன்*
*றோதகமே சூழுமெமை உற்று.* (௩௬)

*ஓதகம் - ஓது + அகம்: கொடிதாகச் சொல்லப்பட்ட பாவம்.*

கொல்லுதல் தகாது; கொன்றடையும் சுகம் இல்லையெனல்.

ஆதலினால் எங்கட் கருந்தமர்கள் ஆனதுரி
யோதனன்முன் ஆனவரை உற்றொழித்தல் - நீதியன்
றுற்றுரைக் கொன்றதன்பின் உத்தமனே எப்பரிசு
பெற்றிடுவேம் நற்சுகத்தைப் பேசு. (நஎ)

துரியோதனாதியர் குலநாசம் முதலான குற்றங்களை உணராரெனல்.

ஆசைமுதிர்ந் துள்ளத் தறிவழிந்தோர் ஆகலினால்
பேசுகுல நாசப் பெரும்பழியும் - நேசர்ப்
பிழைத்தலினும் பாதகமும் பேணாது பெட்பால்
இழைத்திடுவர் தீமை இவர். (நஅ)

பேணாது - செய்யாது தம்மைத் தடுத்துக் காத்துக்கொள்ளாமல்.

நாங்கள் உணர்ந்திருத்தலின் அப்பாவத்தைச் செய்தல் தகாதெனல்.

ஆயினுமவ் வெய்யகுல நாசத்தால் ஆர்பவத்தை
ஏயவே காணுதலால் யாமின்று - தீயசெயல்
அன்னதனில் நீங்கவறி யாதிருத்தல் ஆகுமோ
பின்னைவளர் மார்ப பிறழ். (நகூ)

பின்னை - லக்ஷ்மி. பிறழ் - சொல்லுக.

குலநாசத்தால் தர்மம் கெட்டு அதர்மம் மேலிடுமெனல்.

குலமொடுங்கும் போது குலைந்திடுமே நீணாள்
இலகுமறம் யாவையுமற் றின்ன - நலிதலினால்
அக்குலத்தில் முற்றும் அதன்மம் செறிந்திடுமால்
மைக்கடல்நேர் வண்ண மதி. (சo)

அதர்மம் மேலிடலால் பெண்கள் கற்பிழந்து
வர்ணசங்கரம் உண்டாமெனல்.

அதன்மம் செறிந்திடலால் அக்குலத்தரு பெண்கள்
முதன்மைதரு கற்பிழப்பர் முற்றும் - இதன்பயனல்
நல்வருணம் நான்கும் நலமிழந்தொன் றேடொன்று
பல்விதமா கக்கலக்கும் பார். (சக)

வர்ணசங்கரத்தால் குலத்தைக் கெடுத்தவர்க்கேயன்றி
அவர்கள் பிதிர்க்களுக்கும் தீங்குண்டாமெனல்.

சாதிக் கலப்பதனாற் சாரும் குலம்சிதைத்த
பாதகர்கு லத்துக்கும் பாழ்நரகு - யாதனைசெய்
வெந்நிரயத் துள்விழுவர் வெய்யவவர் தம்பிதிர்க்கள்
உன்னியபிண் டோதகமின் றாங்கு. (சஉ)

அதனால் ஜாதி குலதர்மங்களெல்லாம்
கெட்டுப்போமெனல்.

சாதிக் கலப்புவரச் சார்ந்திழைத்த வெய்யகுல
காதகரின் இக்கொடிய கன்மத்தால் - வதமறு
தொன்றுதொட்ட சாதிகுலச் சோரா ஒழுக்கமெலாம்
பொன்றிடுமே தீமையுறப புக்கு. (சங)

குலதர்மம் கெட்டவர்க்கு நரகப்ராப்தி யுண்டாமெனல்.

குலவொழுக்கம் கெட்டுக் குலைந்தார்க்குக் கூடும்
நிலையுடைய நீணிரய வாழ்க்கை - இலையொழிதல்
என்றுபகர் உண்மையினை யாமறியக் கேட்டுள்ளேம்
நன்றுகுணி லாவெறிந்தாய் காண். (சச)

அவ்வளவு கோரபாவத்தைச் செய்ய
நினைந்தோமெனல்.

அநதோ பெரும்பவத்தை ஆற்றத் துணிநதோமே
இநதநிலை யில்லா இராச்சியத்தால் - முந்துபயன்
வேண்டியருஞ் சுற்றத்தை வீட்ட முயன்றதனல்
நீண்டவனே என்னினைநதேம் நேர்நது. (சரு)

நூற்றுவர் என்னைக் கொல்லினும் எனக்கு நல்ல தெனல்.

ஆயுதங்கள் ஏந்தி அடர்த்திடுமிந் நூற்றுவர்தாம்
ஏயபடை யேலா தெதிர்க்காமல் - ஓயுமெனைப்
போர்க்களத்திற் கொல்லுவரேற் பொன்றுவது மற்றிதனிற்
சீர்கருரிய தாமே தெரி. (சசா)

இவ்வாறு கூறி அருச்சுனன் ஓய்ந்திருந்தானெனல்.

போர்விசயன் இன்ன புகன்று பொருகளத்தில்
கூர்சரமும வில்லும்கைக கொள்ளாமல் - தேரின்
மிசையே எறிந்திருந்தான் வீங்குதுய ராலே
அசையா மனம்துடிபப ஆங்கு. (சஎ)

அர்ஜுந விஷாதயோகம் முற்றிற்று.



## இரண்டாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1. சஞ்சயன் திருதராஷ்டிரனுக்குச் சொல்லுதல்.

2-3. வியசனாக்ராந்தனாகிய அருச்சுனனைப் பார்த்து, அவன் வியசனத்தைப் போக்கி யுத்தம் செய்விக்கும்பொருட்டுக் கண்ணன் கூறுதல்.

4-8. ஆசிரியர் முதலானோரோடு யுத்தம்செய்தல் தகுதியன்றென்று கூறி அருச்சுனன் தனக்கு சிரேயஸ்கரமானதைச் சொல்லவேண்டுமென்று வேண்டுதல்.

9-10. சஞ்சயன் திருதராஷ்டிரனுக்குச் சொல்லுதல்.

11-30. அருச்சுனனது சோகமோகங்களை நீக்கும்பொருட்டு ஸ்ரீபகவான் உபதேசித்த சம்சாரத்தைப் போக்குதற்குரிய ஆத்மதத்வஞானோபதேசம்.

31. யுத்தம் அரசர்க்குரியதாதலின் அவசியம் செய்யவேண்டு மெனல்.

32. யுத்தத்தால் சுவர்க்கம் பெறலாகு மெனல்.

33. சுவதர்மமாகிய யுத்தத்தைச் செய்யாவிடின் பழியும் பாவமும் உண்டாமெனல்.

34. புகழைப் பெற்றவனுக்குக் கீர்த்தி நாசனம் மரணத்திலும் கொடிதாமெனல்.

35-36. பயத்தால் பின்வாங்கினனென்று சொல்லக் கேட்பதைவிட வியசனகரமானது சூரனுக்கு வேறில்லையெனல்.

37. வென்றால் இராச்சியமும் மாண்டால் சுவர்க்கமும் பெறலாமாதலின் நீ யுத்தம்செய்வா யெனல்.

38. ஜயாஜயயுத்தில் சமபுத்தியோடு போர்செய்யின் தோஷமில்லை யெனல்.

39-53. ஆத்மதத்வ ஞானத்துக்குக் காரணமாகிய நிஷ்காம கர்மாநுஷ்டானத்தையும் சமாதி யோகத்தையும் உபதேசித்தல்.

54. ஸ்திதப்ரஜ்ஞனின் லக்ஷணம் யாதென்று அருச்சுனன் கேட்டல்.

55-58. ஸ்திதப்ரஜ்ஞனது லக்ஷணம் கூறுதல்.

59. இந்த்ரியங்களை விஷயங்களினின்று மீட்பினும் அவற்றில் உள்ள ஆசை எவ்வாறு நீங்கு மென்னும் சங்கைக்கு உத்தரம் கூறுதல்.

60. பிரயத்நம் செய்யும் மனசை இந்த்ரியங்கள் இழுத்துச் செல்லுமெனல்.

61. இந்த்ரியங்களைச் செயித்தவனுக்கு ஸ்திரமான ஞானம் உண்டாமெனல்.

62-63. விஷயங்களை நினைத்தலினாலே அவற்றில் ஆசையுண்டாகி ஞானம் உண்டாகாதெனல்.

64-65. மோக்ஷகாரணம் கூறுதல்.

66. மனோநிக்ரஹம் இல்லாதவனுக்குச் சுகமில்லை யெனல்.

67. இந்த்ரிய நிக்ரஹம் செய்யாதவர் மனம் ஞானத்தைக் கவருமென்பதற்கு திருஷ்டாந்தம்.

68. இந்திரியங்களைச் செயித்தவனுக்கு ஞானம் ஸ்திரமாயிருக்குமெனல்.

69. எல்லா உயிர்களுக்கும் இரவாயிருக்கும் பரமாத்மதத்வத்தில் யோகி விழித்திருப்பனெனல்.

70. ஈஷணாத்ரயங்களையும் விட்டவனுக்கே மோக்ஷம், அல்லாதவனுக்கில்லை யென்பதற்கு திருஷ்டாந்தம்.

71. எல்லா ஆசையையும் விட்டவனுக்கே சாந்தி யுண்டாமெனல்.

72. ஞானநிஷ்டையை வியத்தல்.



# இரண்டாம் அத்தியாயம்.

# சாங்க்ய யோகம்.



## காப்பு.

என்மனத்தில் என்றும் இருப்ப இரக்கமிலாக்
கன்மனத்தின் ஆகியநா கக்கொடியோன் - பொன்மனைக்குத்
தாதளைந்து வண்டிமிரும் தார்மார்பர் ஐவர்க்காத்
தூதலைந்த பாதத் துணை.

## பாயிரம்.

சோகமுறு பாரதன் துயரொழியப் பேரருளால்
தேகமொடு தேகியியல் தேற்றியவன் - மோகம்
களைந்தருளும் கண்ணன் கனிவாய்ச்சொல் கற்பார்
உளந்தடுமா றுதுயர்வார் ஊங்கு.



## நூல்.

**வியசனாக்ராந்தனாகிய அருச்சுனனை நோக்கிக் கண்ணன் கூறினான் எனல்.**

கண்ணீர் விழிநிரம்பக் காருணியம் உள்நிரம்ப
எண்ணீர்மை இல்லா திடருறுமத் - தண்ணீரன்
தன்முகத்தை நோக்கியிது சாற்றினான் தண்கருணை
நன்முகத்திற் பூத்தருள்வான் நன்கு. (௧)

இம் மனமெலிவு உனக்குத் தகாதெனல்.

*செவ்வேளை ஒப்பாய்நிற் கிம்மெலிவு தெவ்வரெதிர்
இவ்வேளை எவ்விடைநின் றெய்தியதிற் - கொவ்வாது
பேதையர்கைக் கொள்வதிது பீடில்வசை யைத்தருவ
தோதுகதிக் கூறுவ தோர்.* (உ)

கதி - சுவர்க்கம்.

இம் மனமெலிவை நீக்கித் தைரியமாய்ப் போருக்
கெழுந்திரு எனல்.

*ஆணல் அலித்தனத்துக் குள்ளாகேல் ஆண்டகைநீ
பேணல்முறை அன்றிதனைப் பேசினேன் - மாணில்
மனத்தளர்வு மற்றிதனை முற்றொழித்து மல்கும்
சினக்களிறு போலெழுக தேர்ந்து.* (ங)

பூசித்தற்குரிய பெரியோர்களோடு எவ்வாறு போர்செய்வே
னென் றருச்சுனன் சொல்லுதல்.

*விற்பிடித்து வீட்டுமரை வென்றித் துரோணர்தமை
எப்படிநான் போர்புரிவேன் எம்மானே - பொற்பிணிவர்
பாதமுடி சூடிப் பரவத் தகும்பரிசார்
மேதகையர் ஆகுவரே மிக்கு.* (ச)

ஆசிரியரைக்கொல்லாமல் இரந்துண்ணுதலும் இனிதெனல்.

*மேதகவார் ஆசிரியர்க் கொல்லாது மேதினியில்
ஏதிலர்போல் ஐயம் எடுத்துணலும் - தீதிலதே
ஆரியரைக் கொன்றுலகில் ஆர்திருவும் இன்புமிகு
சோரிதனிற் றோய்ந்தனவாம் துய்ப்பு.* (ரு)

துய்ப்பு - போகம்; தோய்ந்தனவாம் துய்ப்பு - தோய்ந்தனவா
கிய போகங்களாம்.

**எவர்களைக்கொல்லின் எமக்கு உயிர் வாழ்க்கையில் இச்சை யிராதோ அவர் முன்னின்றனரெனல்.**

இவ்விரண்டுள் யாதொன் றெமக்குமேல் என்றறியேம்
தெவ்வரெமை வெல்லுவரோ தெவ்வரையாம் - எவ்வமற
வென்றிடுவ மோவெவரை வீட்டியபின் வாழ்வுகவேம்
நின்றனர்காண் அத்தமர்தாம் நேர்ந்து. (சு)

இவ்விரண்டுள் - பிச்சையெடுத்துப் பிழைத்தல், ஸ்வஜாதி தர்ம மென்று போர்புரிதல் ஆகிய இந்த இரண்டுள். மேல்-நன்மையானது. வீட்டியபின் - கொன்றபின்.

**என்னை சிஷ்யனாகக்கொண்டு என்திகைப்பை நீக்கியருள வேண்டுமெனல்.**

சிந்தையழி வுற்றுச் செயற்குரிய தன்மத்தில்
புந்திதிகைத் துற்றேனின் பொன்னடியை - எந்தாய்
நலக்குரிய தொன்றை நவின்றருள்வாய் நானுன்
மலர்க்கழல்சேர் மாணுக்கன் மற்று. (எ)

**இந்திரபதவியை அடைந்தபோதிலும் இந்தத் துக்கம் நீங்காதெனல்.**

இப்புவியில் எப்பகையும் இல்லா வளநாடும்
ஒப்பிலுயர் வானரசும் உற்றிடினும் - வெப்புறவென்
இந்தியங்கள் யாவும் எரிக்கும் துயர்க்கொழிவு
தந்திடுவ தொன்றறியேன் சாற்று. (அ)

**இவ்வாறு சொல்லிப் போர்செய்யேனென்று அருச்சுனன் மௌனமாயிருந்தானெனல்.**

பம்புகழற் கண்ணனோ டின்ன பகர்ந்துபின்
அம்பெடுத்துப் போரினியான் ஆற்றேனென் - றும்பல்
அனையானங் கொன்றுமுரை யாடாமல் வாளா
துனியோ டிருந்திட்டான் சோர்ந்து. (கூ)

உம்பல் - ஆண்யானை. துனி - துன்பம் : வெறுப்பு.

**பகவான் அருச்சுனனை நோக்கிக் கூறலுற்றார் எனல்.**

*இருதிறத்துச் சேனைக் கிடையிருந்திவ் வாறு*
*பொருமலுறும் ஆண்டகைக்குப் பொற்பாற் - றிருமுறுவல்*
*பூத்திடுவான் போலப் புகலுற்றான் பாரதகேள்*
*காதலருளும் கண்ணன் கனிந்து.* (கய)

*பாரத - திருதராஷ்டிரனை நோக்கிச் சஞ்சயன் கூறியது. பொருமல் - அழுதல்: துயரல்.*

**நீ அநாவசியமாய் வியஸனிக்கிறாய்; ஆத்மஞானிகள் ஒருவர் பொருட்டும் வியசனியார் எனல்.**

*துயர்க்குரியர் அல்லார்க்குச் சோகிப்பாய் தூயோய்*
*நயக்கறிவின் நல்லுரையும் சொல்வாய் - மயக்கொழிவார்*
*சென்றார்க்கும் தம்மாவி செல்லாதிந் திண்புவியில்*
*நின்றார்க்கும் நேரார் துயர்.* (கக)

*துயர்க்குரியரல்லார்க்கு - துக்கப்படத்தகாதவர் பொருட்டு. மயக்கொழிவார் - ஆத்மஞானிகள்.*

**ஒருவரும் முன் இல்லாதிருந்ததுமில்லை; இனி இல்லாமற் போவது மில்லை யெனல்.**

*இல்லா தொழிந்ததிலை யானேனும் ஓர்பொழுதும்*
*வல்லாய்நீ என்னினுமிம் மன்னரேனும் - எல்லாரும்*
*மேல்வருமோர் காலத்தும் மேவாது வீதலிலை*
*மால்வரைத்தோள் மன்ன மதி.* (கஉ)

**தேகிக்கு இந்த தேகத்தில் பால்யம் முதலிய அவஸ்தைகள் உண்டாதல்போல மற்றொரு தேகத்தை அடைதலும் ஆகுமெனல்.**

*செப்பிடுமிம் மெய்யதனிற் றேகிக்குச் சேருமிள*
*மைப்பருவம் யௌவனமும் வார்த்திகமும் - எப்பரிசோ*
*அப்பரிசே வேறுடலம் ஆருதலும் இததிறத்தில்*
*வைப்பதிலை ஞானி மயல்.* (கங)

## சீதோஷ்ண சுகதுக்கங்களைப் பொறுத்துக் கொள்ளலும் ஞானத்துக்குச் சாதனமெனல்.

வெம்மையொடு தண்மை விரவுறுதுன் பின்பிவைகள்
செம்மையினும் ஐம்புலத்தின் சேர்க்கையினல் - அம்மவவை
தோன்றிமறை தன்மையின துன்னுநிலை இல்லனவாம்
என்றவற்றை நீபொறுத்தி ஈங்கு. (கச)

ஐம்புலத்தின் சேர்க்கையினலாம் - பஞ்சேந்த்ரியங்களும் தத் தம் விஷயங்களோடு சேர்தலினல் உண்டாம். என்று - வெறுத்துத் தள்ளாமல் கொண்டு. பொறுத்தி - பொறுத்துக்கொள்வாயாக.

## சுகதுக்கங்களைப் பொறுத்துக்கொள்பவனே மோக்ஷத்துக்கு அருகனெனல்.

பவித்திடுதுன் பின்பொருபோற் பாவிக்கும் தீரத்
தெவற்கிடர்செய் யர்விவைகள் ஈங்கு - நிவப்புறுமோர்
ஞானத்திரம்பெறுமர் நல்லானே வீவிலொரு
தானத் துறும்தகையன் சார்ந்து. (கரு)

வீவிலொருதானம் - அழிவில்லா நிலையாகிய மோட்சம்.

## தேகாதி பிரபஞ்சத்துக்கு உண்மையும் இல்லை; ஆத்மாவுக்கு இன்மையும் இல்லையெனல்.

இல்லாத தொன்றற் கிலையுண்மை உள்ளதனுக்
கில்லாமை யில்லையிசை இவ்விரண்டின் - சொல்லரிய
நிச்சயத்தை உண்மை நிலையுணரும் தீரார்தாம்
.ச்சியறிந் துள்ளார்நீ காடு. (கசு)

**ஆத்மா எப்போதும் அழிவில்லாத மெய்ப்பொருளாகவே இருப்பதெனல்.**

ஈங்குலகம் யாவும் எதனால் நிறைந்துளதோ
ஆங்கதனுக் கென்றும் அழிவில்லை - பாங்கினறி
தன்னிலையில் மாறாத் தகையுடைமை யாலிதனை,
எந்நிலையும் மாய்ப்பார் இலர். (கஎ)

எந்நிலையும் - எவ்விடத்தும்.

**இந்த ஆத்மாவுக் கிடமாகிய தேகம் பொய்யானது, அழிந்துபோகு மெனல்.**

நித்தியமாய் நாசம் நிகழாதாய் எத்திறத்தும்
உய்த்துணர்த லுக்கரிதாம் ஒன்றுறையும் - பொய்த்தகைய
தேகமுடி வுற்றிடுவ ஆகலினாற் செய்திடுக
மோகமொழித் தின்று முனை. (கஅ)

ஒன்று-ஆத்மா. நாசம் பிணி முதலியவற்றால் உண்டாகும் மாற்றம். 'போர்செய்க' என்றது சோகமோகங்களால் தடுக்கப்படாமல் தொடங்கியதைச்செய்யென்று அநுவதித்தலேயன்றி விதித்ததன்று.

**ஆத்மா ஒருவனைக்கொல்லுதலும் ஒருவனாற் கொல்லப் படுதலும் இல்லையெனல்.**

கொல்வதிஃ தென்றும் கொலப்படுவ தீதென்றும் [யின்
சொல்லுமிதைப் பாவிப்போர் தோன்றால்கேள் - நல்வகை
ஓராரே உண்மையினை ஒதினிது கொல்லுமில்
பாராய் கொலப்படலும் இல். (கக)

**ஆத்மா பிறத்தல் முதலான மாற்றங்களை அடையாதெனல்.**

பிறவா திறவாது பின்னிருந்து போகா
துறையாது போயொழிந்திங் கூறில் - நெறியினதாய்
என்றுமுள தாகிப் பழமையதாம் ஈதுடலம்
பொன்றுறுகாற் பொன்றாது புக்கு. (உ0)

ஆத்மாவின் உண்மைநிலை யறிந்த ஞானி ஒன்றைக் கொல்லலும் கொல்வித்தலும் இல்லை யெனல்.

பொன்றலில தாகிப்பின் போதும் பிறப்பிலதாய்
என்றுமுள தாகித்தேய் வில்லாதாய் - நன்றிங்
கிதையறிவான் யாவரைமற் றெவ்வாறு கொல்வான்
சிதைவுறவே கொல்விப்பான் செப்பு. (உக)

நாம் பழந்துணியைக் களைதல்போல ஆத்மாவும் ஒரு உடலைவிட்டு மற்றோருடலை அடையுமெனல்.

உடுத்துக் கிழிந்ததுநீத் தொண்டுகில்வே றொன்றை
எடுத்தொருவன் கட்டுதலை யொப்ப - விடுத்துயிரும்
முன்னிருந்த மூதுடலை மோதமொடு சென்றுபுகும்
பின்னிருந்த வேறுடலுள் மிக்கு. (உஉ)

உயிர் - ஆத்மா. பின்னிருந்த உடல் - ஒளிபொருந்திய புதிய தேகம்.

ஆத்மாவை ஒன்றும் ஊறுசெய்யாதெனல்.

பாயா இதன்மீது பற்றிவிடும் பல்படைகள்
தீயாது செந்தழலும் சேர்ந்திதனைத் - தோயம்
நனையாது வாயுவிதை நண்ணியுலர்த் தாதால்
நினையாய்மற் றித்தகைமை நேர்ந்து. (உங)

ஆத்மாவுக்கு அவயவங்கள் இல்லாமையின் அதனை ஆயுதங்கள் முதலியவை ஊறுசெய்யா.

ஆத்மா ஒன்றாலும் ஊறுபடாதெனல்.

வெட்டுண்ணு தீதெரியால் வேகாது நீராலும்
ஒட்டும்நனை யாதுலரா தூதையினால் - எட்டரிய
நித்தியமாம் எங்கும் நிறைந்துளதாம் என்றுமுள
சுத்தநிலை பெற்றசைய தோர். (உச)

**அவாங்மனோ கோசரமாகிய ஆத்மாவைப்பற்றி வியசனிக்க இடமில்லையெனல்.**

*எட்டாது நற்புலனுக் கெண்ணும் கருத்துக்கும்*
*தட்டாது மாற்றம் சமையாது - மட்டாரும*
*தாராய் இதன்தகைமை சாற்றியவிவ் வண்ணமெனத்*
*தேராநின் வெந்துயரம தீர். (உரு)*

*மட்டு - தேன். தேரா - தேர்ந்து*

**ஆத்மாவை அநித்யமென்றெண்ணினும் துக்கித்தல் தகாதெனல்.**

*அன்றியிதை என்றும் அவனிமிசைத் தோன்றுவதும்*
*என்றும் இறப்பதுமா எண்ணினும்நீ - வென்றிபுனை*
*மற்புயத்தாய் இப்பரிசு மாழ்கல தகாதுகாண்*
*விற்பழுத்த கோலாய் மெலிந்து. (உசா)*

**ஏனெனில், பிறந்ததற்கு இறப்பும் இறந்ததற்குப் பிறப்பும் நிச்சயமெனல்.**

*பிறந்ததனுக் கிறு பிழையாது திண்ணம்*
*இறந்ததனுக் கும்பிறப்பிவ் வண்ணம் - செறிந்திடுமால்*
*ஆகலினு லேதவிர்த்தல் ஆகாத தொன்றற்கு*
*மாழ்கல்முறை அன்று மதி. (உஎ)*

இவ்வண்ணம் செறிந்திடும் இறப்புப்போலவே நிச்சயமாயுண்டாம். ஒன்றற்கு - ஒருவிஷயத்தில்.

**இந்த்ரசாலம் போலத் தோன்றி மறையும் புத்திரமித்திராதியான பூதங்களின் பொருட்டு வியசனிக்க நிமித்தமில்லை யெனல்.**

*தோன்றுமை யேமுதலாய்த் தோன்றிடுதல் தானிடையாய்த்*
*தோன்றுமை யேகடையாய்த் துன்னுவன - தோன்றிவரும்*
*பூதமெலாம் ஆதலினாற் போவனவென் றித்திறத்திற்*
*றீதமுறல் என்னே இளத்து. (உஅ)*

### ஆத்மாவை அறிதல் கஷ்டமானதெனல்.

ஆச்சரியம் போலொருவன் காண்பனிதை மற்றொருவன்
ஆச்சரியம் போலே அறைகிற்பன் - ஆச்சரியம்
போலொருவன் கேட்பனிதைக் கேட்டுமிதை யேபுவியில்
மாலொருவன் தேருபவன் மற்று. (உகூ)

ஆச்சரியம்போல் - அபூர்வமான புதுமைவஸ்துவைப் பார்த்தல் போல. மாலொருவ - மயக்கம் நீங்க: உள்ளபடி யதார்த்தமாக; தேருபவன் இலை யென்று கூட்டுக.

### ஆத்மா நித்யமாதலின் அழியுமென்று வருந்துதல் அறிவீன மெனல்.

கொல்லா உடற்கண்ணும் வய்ந்திருக்கும் ஆருயிர்தான்
மல்லார்திண் டோளாயெவ் வைகலினும் - சொல்லின்
கொலையுண்ணா தாதலினாற் கொள்ளுதலிங் காகா
துலைதுயரம யார்பொருட்டும ஊங்கு. (ௗ0)

### உன் குலதர்மத்தை ஆலோசிக்கினும் நீ பின்னிடுதல் கூடாதெனல்.

உனகுலத்துக் குற்றவறன் உன்னினும்நீ பின்னிடுதல்
மின்குலவும் வேலாய்கேள் வேண்டுவதன் - றென்கொல்
அறம்பிழையாப் போரின் அறச்சிறந்த தொன்று
நிறம்பெறுமன் னர்க்குளது நேர்ந்து. (ௗக)

அறம்பிழையாப்போர் - க்ஷத்ரிய தர்மத்தினின்றும் விலகாது நியாயமான யுத்தம்; என்கொல் உள்ளது என்று கூட்டுக; வேறொன்றும் இல்லை யென்றபடி.

### இப்படிப்பட்ட தர்ம யுத்தத்தைப் பெறும் க்ஷத்ரியர்களின் பாக்யமே பாக்யமெனல்.

மற்றிதுபோற் றற்செயலா வாய்ப்பதுவாய் வான்புகுதப்
பொற்கதவம் உட்டிறந்தாற் போலுமமர் - மற்குலவும்
திண்டோளாய் மாநிலத்திற் செல்வமலி மன்னவரே
உண்டாகப் பெற்றிடுவார் உற்று. (௩௨)

செல்வமலி மன்னவர் - பாக்கியவான்களான க்ஷத்ரியர்கள்.

### போர்செய்யாவிட்டால் புகழிழந்து பாவத்தையும் அடைவா யெனல்.

அறம்குலவும் போரிதனை ஆற்றாயேல் ஐய
நிறம்குலவும் நின்தருமம் நீத்துப் - பிறங்குபுகழ்
தானிழந்து தீவினையும் சார்ந்திடுவாய் தாரணியில்
மானநெடு வேலாய் மதி. (௩௩)

தாரணியில் பிறங்கு புகழிழந்து என்று கூட்டுக.

### நீ பலராலும் நிந்திக்கவும் படுவா யெனல்.

எவ்வமிலாய் நின்வசையை என்றும் இரும்புவியில்
கவ்வைகொள மாந்தர் கழறிடுவார் - செவ்விமிகு
நன்புகழைப் பெற்ற நலனுடையாற் கவ்வசைதான்
துன்பு தரும் சாவினிலும் சூழ். (௩௪)

வசை-அபகீர்த்தி. கவ்வைகொள - உன்னைப்பற்றின பழிமொழி நிறைய.

### அச்சத்தால் சென்றனென் றெண்ணி உன்னை அவமதிப்பாரெனல்.

மாரதர்கள் நின்னை மருவியதோர் அச்சத்தால்
போர்துறந்து போயினனென் றெண்ணுவரால் - சீர்புகழ்ந்து
போற்றினர் தாமும்நினைப் புன்மைதரு நிந்தை சொலித்
தூற்றுவார் என்று துணி. (௩௫)

சத்துருக்களும் தூஷிப்பார்களெனல்.

சத்துருக்களே கேளாய்நின் றன்வலத்தை மன்னவிகழ்ந்
தெத்தனையோ சொல்வர் இயம்பரிய - ருத்திரங்கள்
நற்புகழைப் பெற்றாய்க்கு நாடினிதன் மீதுதுயர்
மற்றுளதோ தான் றியாது வழுத்து. (௩௬)

மன்னி - மிகவும். ருத்திரங்கள்-சுடுசொற்கள்: பொறுத்தற் கரிய வார்த்தைகள்.

இறந்தால் சுவர்க்கமும் வென்றால் இராஜ்யமும் பெறுவாயெனல்.

போரிலிறந் நீ மாள்வாயேற் பொன்னுலகைப் பெற்றிடுவாய்
சீருறவெல் வாயாகிற் றிண்புவியை - ஆருவையால்
ஆகலினுற் போரிதனை ஆற்றத் துணிந்தெழுக
வாகுவலி யாஅயர்வாய் மற்று. (௩௭)

இன்பதுன்ப லாபநஷ்டங்களைச் சமமாகக் கருதிப்
போர்செய்யின் பாவம் சாராதெனல்.

இன்பினொடு துன்பும் இழப்பதனொடு பேறதுவும்
துமமையுமுடி வெற்றியொடு தோல்வியும் - அம்புவியில்
ஒன்றாக நினைந்தெழுக உற்றதொரு போருக்குத்
துன்றாய்நீ பாவம் துணி. (௩௮)

இதுவரையில் சாங்க்யம் என்னும் ஆத்மஞானம் கூறினேன்;
இனிமேல் யோகமென்னும் கர்மவிஷயமும் கூறுவேனெனல்.

இத்துணையும் சொற்றதுனக் கெண்ணுயரும் சாங்கியத்திற்
புத்தியினி யோகம் புகலக்கேள் - உத்தமமாம்
யோகமிதைப் பெற்றிடினீ உற்றவினைக் கட்டனைத்தும்
ஏக வறுத்திடுவாய் ஈங்கு. (௩௯)

சாங்கியத்திற் புத்தி - சாங்க்யவிஷயமான ஞானம் அல்லது கொள்கை. சாங்க்யம் - ஆத்மாவின் யதார்த்தம்; இந்த சாங்க்யஞானம் மோக்ஷத்துக்கு நேரே ஏதுவானது. யோகம் - பலாபேக்ஷையில்லாமல் ஈசுவராராதனமாகக் கர்மங்களைச் செய்தலும் சமாதிப் பயிற்சியும் என இருவகைப்படும்; இது சித்தசுத்தியையும் ஞானத்தையும் கொடுத்து மோக்ஷத்துக்கு அவ்வழியாக ஏதுவாவது.

**இந்த யோகம் வீணாபோகாது, இதில் சிறிது அநுஷ்டித்தலும் பெரும் பயத்தை நீக்குமெனல்.**

*வினைதல் இல்லைபிதிற் செய்யும் வியன்முயற்சி*
*மாணாத ஏதம் மருவாது - சேணாரும்*
*பேரறமாம் ஈதிற் சிறிதும் பெருந்துணுக்கம்*
*தீரவருளும்சிறக்கத் தேர்.* (சo)

*துணுக்கம் - சம்சாரபயம்.*

**இந்த சாங்க்யயோகங்களைப் பற்றின நிச்சயபுத்தி ஒன்றேனல்.**

*நிச்சயமாம் புத்திபிவண் ஒன்றே நிகழ்த்துங்கால்*
*நிச்சயமொன் றில்லார்க்கு நேர்புத்தி - நிச்சயமாய்ப்*
*பல்கிளைய தாகிப படர்ந்திறுதி அற்றிடுமால்*
*தொல்குருவின் தோன்றல் துணி.* (சக)

*நிச்சயமில்லாதார்க்கு - இதர மார்க்கங்களை அநுஷ்டிக்கும் நிச்சயபுத்தி யில்லாதவர்க்கு. நிச்சயமாய் - சந்தேகமில்லாமல்.*

**நிச்சய புத்தியில்லாத மூடர்கள் சுவர்க்காதி போகங்களைத் தரும் கர்மங்களைத் தவிரச் செய்யத்தக்க தில்லை யென்பர் எனல்.**

*வேதமொழி தன்னில் விளையும் விருப்பினராய்*
*ஈதொழியச் செய்வ திலையென்னப - போதுமலி*
*பூமரங்கள் போலப் பொலிதருநல் வாசகங்கள்*
*பாமரர்கள் சொல்வர் பரிந்து.* (சஉ)

*ஈது - சுவர்க்காதி போகங்களைத் தரும் கர்மங்கள்.*

**அவர்கள் கர்மபலன் பிறவி யென்றும், பலத்துக்குத் தக்கபடி கர்மங்கள் பலவிதமென்றும் கூறுவாரெனல்.**

*காமுறுவா ராகிக் கதிசுவர்க்க மேயெனுமப்*
*பாமரர்கள் சன்மம் பயனாகத் - தாமுதவிச்*
*செல்வமும் இன்பும் பெறத்தருபல் செய்கைகளைச்*
*சொல்வரினி தாகத் தொடர்ந்து.* (சங)

செல்வத்திலும் இன்பத்திலும் இச்சையுடையவர்களுக்கு
சாங்க்யயோகங்களில் நிச்சயபுத்தி வாராதெனல்.

*கூறியவச சொல்லதனைக் கொண்டுவக்கும் சிந்தையராய்*
*ஏறியவச் செல்வத்தும் இன்பத்தும் - ஈறில்விழை*
*வுள்ளார்க்கின் கென்றும் உறுதியிலே யாமறிவு*
*கொள்ளஉதி யாது குறி.* (சச)

ஸ்வதர்மத்தை அநுஷ்டிக்கும் யோகியாய் நீ சத்வகுணத்தையே
பற்றியிருத்தல் வேண்டு மெனல்.

*முக்குணத்தை மாமறைகள் மொய்ம்புடையாய் ஓதுவன*
*அக்குணத்தைச சாராது அகன்றிருமை - எக்கணத்தும்*
*மற்றுது தேடுதல் பாலித்தல் விட்டுவிழிப*
*புற்றிருப்பாய் சத்துவத்தி னுள்.* (சரு)

*முக்குணத்தை - முக்குணங்களால் உண்டாகும் புண்யபாப மிசிரகர்மங்களை. இருமை - த்வந்த்வங்கள். விழிப்புற்று-ஜாக்கிரதையாய் : விஷயங்களில் மனத்தைப் போக்காமல். எக்கணத்தும் சத்துவத்துள் இருப்பாய் என்று கூட்டுக.*

ஞானியான பிராமணனுக்கு எல்லா வேத கர்மங்களின்
பயனும் பிரமானந்தத்தில் உண்டாமெனல்.

*சிற்றாறு சேரும் பயன்முழுதும் தீம்புனல்பாய்*
*மற்றோர் பெருந்தடத்தும் வாய்த்தல்போற் - பெற்றிமலி*
*மாமறைக்கண் வைத்தபயன் அத்தனையும் மாணறிவார்*
*தூமறையோன் துய்ப்பன் துணி.* (சசு)

மோக்ஷத்தை விரும்பும் உனக்குக் கர்மத்திலன்றிக் கர்மபலத்தில்
அதிகாரம் இல்லை யெனல்.

*செய்கருமத் தேயன்றிச் சேரும் பயன்தன்னில்*
*ஐயவுனக் கில்லை அதிகாரம் - பெய்யும்*
*பயனைவிழைந் தோர்வினையும் பண்ணற்க என்றும்*
*செயலொருவ வும்விழைதல் தீர்.* (சஎ)

**உனக்கு ஞானநிஷ்டையில் அதிகாரம் இல்லையென்றபடி.**

**பலனைப் பெற்றாலும் பெறாவிடினும் ஒரே தன்மையாயிருந்தல் வேண்டுமென்றும், அதுவே யோகமென்றும் கூறுதல்.**

*யோகத் திருந்துபயன் உற்றாலும் ஒர்பயனை*
*ஊகித் துறுவிடினும் ஒர்நிலையாய் - போகம*
*தவிர்ந்தனது கன்மத்தைத் தபபாமற செய்தி*
*நிவந்தசமம் யோகமென நேர்.* (சஅ)

*கன்மம்-ஈசுவரனை ஆராதித்தற் பொருட்டுச் செய்யுங்காரியம். சமம் - சித்திக்கினும் சித்தியாவிடினும் ஒரே நிலையாயிருத்தல்.*

**பலாபேக்ஷையில்லாமல் சமபுத்தியோடு செய்யுங்கர்மம் பலாபேக்ஷிதமான கர்மத்தில் சிறந்த தெனல்.**

*வேண்டாது செய்புதநி யோகத்தின மேலபயன்*
*வேண்டிச்செய் கன்மம மிகவிழிவால் - வேண்டும*
*பயன்விழையாப புத்தியினைப பற்றுகநீ பார்தத*
*பயன்விழைவார் பூரியர்தாம் பார்.* (சகூ)

*புத்தியோகம்-பலாபேக்ஷையில்லாமல், சமபுத்தியோடு, ஆதம ஞானத்தை அடையும்பொருட்டுச் செயயும் கர்மம. புத்தியினை-புதநி யோகத்தை.*

**சமபுத்தியுடையவன் கர்மபந்தத்தை நீக்கிக் கொள்வானெனல்.**

*நல்வினையும் தீவினையும் நண்ணாது புத்தியுத்தன்*
*தொல்லையவை ஈண்டே ஒழித்திடுவன் - சொல்லதனால்*
*யோகின் முயன்றிடுதி கன்மத் துரைக்குங்கால்*
*யோகமிது கௌசலமாம் ஓர்.* (௫0)

*புத்தியுத்தன்-சமபுத்தியைக் கூடினவன். கௌசலம் - சாமர்த்தியம். புத்தியோகம் கர்மபநதம் வநது தொடராமல் காத்தலினாலே கர்மத்தில் சாமர்த்தியம் எனப்படும்.*

சமபுத்தியோடு ஈசுவராராதனமான கர்மங்களைச் செய்பவர் மோக்ஷத்தைப் பெறுவாரெனல்.

மூதறிஞ ராயுயர்ந்து புத்தியுத்தர் முற்றும்வினைப்
போதும் பயன்றுறந்து பொறபினராய்த் - தீதார்
பிறவித் தளைதவிர்ந்து பின்னரிடர் ஒன்றும்
உறலில் இடத்தமர்வார் உற்று. (ருக)

இடம் - மோக்ஷமாகிய விஷ்ணுவின் பரமபதம்.

அவிவேகம் நீங்கிச் சித்தசுத்தி யடையும்போது ஞானநூல்களைத் தவிர மற்றவற்றில் வெறுப்புண்டா மெனல்.

மூன்னுமனம் எப்பொழுது மோகவளற் றைக்கடக்கும்
தன்னியலால் அப்பொழுது சாற்றக்கேள் - பன்னமுனம்
கேட்டவற்றும் மேலுமினிக் கேட்பவற்றும் நீயடைவாய்
ஈட்டும் வெறுப்பதனை ஈங்கு. (ருஉ)

மோகவளறு - அவிவேகம் என்னும் கலக்கம்; தன்னியலால் அடைவாயென்று கூட்டுக.

பின்பு மனம் ஆத்மாவில் நிற்க அப்போது சமாதி ஞானத்தையும் பெறலாமெனல்.

பல்பொருளும் கேட்டுப் பலவா கலங்குமனம்
தொல்பொருளில் என்று துளங்காமல் - அல்லலற
நின்றிடுமோ அன்று நிகரிலொரு யோகத்தை
ஒன்றிடுவ லாயீ துணர். (ருங)

தொல்பொருளில்-ஆத்மாவில். யோகம்-விவேக புத்தியாகிய சமாதி.

ஆத்ம ஞானத்தை யடைந்த ஜீவன்முக்தனது லக்ஷணங்களை அருச்சுனன் கேட்டல்.

நேரிய ஞானம் நிலைத்துச் சமாதியுறும்
ஆற்றிஞற் பற்றி அறைமொழியென் - சீரினவன்
எவ்வாறு பேசிடுவன் எங்ஙனிருப் பன்நடப்பன்
செவ்வாய் மலர்ந்திதனைச் செப்பு. (ருச)

### ஜீவன்முக்தன் தன்னிடத்தில் தனக்குச் சந்தோஷ முடையானெனல்.

நிரம்புறுதன் உள்மகிழ்ச்சி நேர்ந்துதான் ஆக
விரும்புமனத் தாசையெலாம் விட்டான் - உரமபெறுமா
ஞானநிலை பெற்றவொரு நல்லோன் எனப்படுவான்
தேனொழுகும் தாராய் தெரி. (ருரு)

நிரம்புறு............நேர்ந்து - பரமாத்மாவாய் நிரம்பிய தன்னை அறிதலாலே சந்தோஷித்து.

### அவன் இன்ப துன்பங்களில் ஒப்பநிற்பவ னெனல்.

துன்புவரிற் சற்றும் துடியா மனத்தனாய்
இன்பதனில் ஆசையெழல் இல்லானாய் - அன்ப
விருப்பும் வினைபயமும் வெகுசினமும் விட்டிங்
கிருப்பவனே ஞானிமுனி எண். (ருசு)

விருப்பு-ராகம் : பற்று. ஞானிமுனி - ஸ்திதப்ரஜ்ஞனென்றும் சந்யாசியென்றும் சொல்லப்படுபவன்.

### அவன் விருப்பும் வெறுப்பும் அபிமானமும் இல்லானெனல்.

யாதொன்றி னும்பற்றல் இல்லானாய் இன்னல்தரு
தீதொன்றி னும்நன்மை சேருகினும் - போதும்
விருப்புவெறுப் புற்றிடுதல் விட்டவன்றன் ஞானம்
திரப்படுவ தென்று தெரி. (ருஎ)

தீதொன்றினும் - தீமைவந்தாலும்.

### அவன் இந்த்ரிய நிக்ரஹம் உடையா னெனல்.

அங்கங்கள் எப்புறத்தும் ஆமை அடக்குதல்போல்
பொங்கும்விட யங்களிடைப் போகாமல் - எங்குமெவன்
இந்தியங்கள் யாவையுமுள் ளீர்த்தடக்கும் அன்றைக்கே
சிந்தியவன் ஞானம் திரம். (ருஅ)

பரமாத்மாவைக் கண்டபின் ஆசை முற்றும் தீருமெனல்.

உண்ணு துணவை யொழிப்பானை யோர்விடயம்
நண்ணு தெனினும் நசைதீரா - தெண்ணிப்
பரம்தன்னைக் கண்டதன்பின் பன்னும்நசை தானும்
கரந்தொழியும் மற்றிதனைக் காண். (ருகூ)

விடயம்-இந்த்ரியங்கள். இந்த்ரியங்கள் தத்தம் விஷயங்களினின்று நீங்குமாயினும் நசை தீராது; நசை-ஆசை. பரம்-பரம்பொருள்: பிரமம்.

இந்த்ரியங்களை அடக்காவிடின் அவை மனத்தை நிலைக்கவொட்டாவெனல்.

உட்கலக்கும் இந்திரியங்கள் உற்றவலி யாற்கவரும்
அக்கலக்க மில்அறிஞன் ஆன்மனமும் - தக்க
முயற்சியினாற் றானடக்க முன்னினுமற் றன்னோன்
அயர்ச்சியுற மற்றீது அறி. (சு0)

அறிஞன் மனத்தையும் அவன் அடக்க முன்னினும் கவரும் என்று கூட்டுக.

ஆசையினாலே ஐம்புலன்களையும் அடக்கிப் பரமாத்மாவை தியானித்திருப்பவனே ஞானியெனல்.

அனைத்துபுலனை யாவும் அடக்கினனாய ஓர்புருடன
என்னில்ஒரு மைப்பட் டிருந்திடுக - மன்னுலகில்
தன்வயத்தே ஐம்புலனும் தான்பெற்றான் ஞானமே
வுன்னமையுள தென்று மதி. (சுக)

என்னில் ஒருமைப்பட்டு - யான் வேறு தான் வேறென்றெண்ணாமல்.

### புறப்பொருளை நினைத்தலினாலே எல்லாக் கேடுகளும் உண்டாமெனல்.

*நினைத்தலினால் ஒன்றையதில் நேயமுள தாகும்*
*சனித்திடுமந் நேயத்தாற் சார்வு - மனித்தர்தமக்*
*காசையினாற் கோபம் அடுத்திடுமே ஆசையது*
*தேசுறமுற் றுவிடில்நீ தேர்.* (௬௨)

*சார்வு - ஆசை. சார்வு சனித்திடும் என்று கூட்டுக.*

### இதுவுமது.

*கோவத்தாற் கூடும் கொடுமோகம் மோகத்தால்*
*மேவுமநினை வின்மைநினை வின்மையினால் - தாவரிய*
*புத்திக்கே டுண்டாகும் புத்திகெடின் ஓர்புருடன்*
*அத்தருணம் முற்றுமறும் ஆங்கு.* (௬௩)

*மோகம் - மயக்கம் : தக்கதிது தகாததிதுவென்னும் ஆராய்ச்சியில்லாமை. அறும் - அழிந்துபோவான்.*

### இந்த்ரிய நிக்ரஹம் செய்தவன் மனந்தெளிவைப் பெறுவானெனல்.

*விருப்புவெறுப் பற்றனவாய்த் தன்வயத்தே மேவி*
*இருப்பனவாம் இந்தியத்தால் என்றும் - துரப்பரிய*
*சில்பொருளைத் துய்த்துச் செயித்த மனத்தனவன்*
*புல்லும் மனத்தெளிவைப் போந்து.* (௬௪)

*செயித்த மனத்தன் - அந்தக்கரணங்களை அடக்கினவன். செயித்த மனத்தன் இந்த்ரியத்தால் துய்த்து மனத்தெளிவைப் புல்லும் என்று கூட்டுக. சில்பொருள் - உணவு முதலிய தவிர்க்கத்தகாத விஷயங்கள்.*

**மனத்தெளிவால் புத்திநிலைமையும் பேரின்பமும் உண்டாமெனல்.**

*உளத்தெளிவொன் றுண்டாயின் உற்றதுயர் எல்லாம்*
*தளர்ச்சியற வேயொழியும் தானே - விளக்கமுற*
*உட்கலக்கம் நீங்கியவன் புத்திநிலைத் தொல்லையினிற்*
*கொட்புறல்விட் டாரும் குறி.* (௬௫)

*கொட்புறல் - சுழற்சி: தடுமாற்றம்.*

**நிலையில்லா மனத்தனுக்கு ஒரு பயனும் இல்லையெனல்.**

*நிலையில் மனத்தனுக்கு நேருமறி வில்லை*
*தலையாகும் பாவனையும் சாரா - நிலவுறுமப்*
*பாவனையில் லானுக்குப் பற்றறு சாந்தியதில்*
*லாவொருவற் கேது சுகம் ஆங்கு.* (௬௬)

*பாவனை - ஆத்ம த்யானம். சாந்தி - ஒழிபு.*

**புலன் வழியே செல்லும் மனம் மெய்யுணர்வைக் கவர்ந்து கொண்டு போமெனல்.**

*அலையும் புலன்வழியே ஆர்ந்துழலும் நெஞ்சம்*
*கலனைக் கடற்றுரத்தும் காலபோல - நிலையறவே*
*மற்றிவன்றன் மெய்யுணர்வை மாறுமற் கொண்டகற்றும்*
*உற்றபொருள் ஓரவிடா தாங்கு.* (௬௭)

*உற்றபொருள் - தான் கருதிய ஆத்மாவை. இவன் - இந்த நிலையில்லா மனத்தனுடைய.*

**ஆகையினாலே இந்த்ரிய நிக்ரஹம் உள்ளவன் ஞானமே நிலையானதெனல்.**

*ஆகலினால் யாவனுடை ஐம்புலனும் ஆர்விடயத்*
*தேகலறக் கட்டுண் டிருந்திடுமோ - வாகு*
*வலிபெற்ற மாண்புடையாய் மற்றவன்றன் ஞானம்*
*நிலைபெற்ற தென்று நினை.* (௬௮)

*ஆகலினால் - இந்த்ரியங்கள் விஷயங்களிற் செல்வதனால் மேற்கூறிய தீங்குகள் உண்டாதலினாலே.*

### ஜீவன்முக்தனுக்கு உலகம் கனவு போலும் எனல்.

எவ்வுயிர்க்கும் யாதொன் றிரவாமோ அவ்விடையில்
மெய்வழிசேர் ஞானி விழிப்புறுவன் - எவ்விடையில்
பூதங்கள் யாவும் விழித்திருப்ப அவ்விடையக்
கோதின்முனி வற்கிரவாம் கொள். (கூகூ)

யாதொரு பரமார்த்தம் இரவுபோல் அறியப்படாமல் இருக்குமோ அது ஞானிக்குப் பகல்போல விளக்கமாயிருக்கும்; எந்த அவஸ்தையானது விழிப்புப்போலத் தோன்றுமோ அந்த ஜாக்ராவஸ்தை ஞானிக்கு இரவு போல்வதாகும்.

### ஆசையால் விகாரமடையாதவர் சாந்தியைப் பெறுவா னெனல்.

எங்கும் புனல்பெருகு மேனுமிலை மாறுத
தண்கடலைப் பன்னதியும் சார்தல்போல - அங்கெவனை
ஆசையெலாம் சாரும் அவனமைதி பெறுவினை
ஆசையுளான் எய்தான் அறி. (எ0)

### ஆசையை முற்றும் அறுத்தவனே சாந்தி அடைவா னெனல்.

ஆசையெலாம் முற்றும் அகற்றி விருப்பற்றுப
பேசுமிரு பற்றும் பிணையாமல் - காசினியில
சஞ்சரிக்கும் பேரறிஞன் தானேயச் சாந்திதனை
எஞ்சலறப் பெற்றிடுவான் ஈங்கு. (எக)

முற்றும்-சேஷமில்லாமல். இரு பற்று-அகங்கார மமகாரங்கள். பிணையாமல்-தன்னைக்கட்டாமல். எஞ்சலற-குறைவற.

### இந்தப் பிரமநிஷ்டையில் அந்த்யகாலத்தில் ஒருவன் இருப்பினும் முக்தியடைவா னெனல்.

சொற்றவிது வேபிரமத் துன்னும்நிலை சொல்லிதனை
உற்றவர்கள் என்றுமயல் உண்ணாரால் - மற்றிதனில்
வாணாளின் அந்தத்தில் வைகுறினும் ஓர்புருடன்
சேணாரும் முத்திபெறும் சென்று. (௭௨)

*பிரமநிலை - பிரமஸ்வரூபமாக நிற்கும் நிலை. சேணாரும் முத்தி- அடைதற்கரிய பிரமானந்தம்.*

சாங்க்யயோகம் முற்றிற்று.



மூன்றாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1-2. கர்மத்திலும் ஞானம் சிறந்ததாயின் என்னை ஏன் கர்மத்தைச் செய்யச் சொல்லுகின்றீரென்று அருச்சுனன் பகவானைக் கேட்டல்.

3. கர்மயோகத்துக்கும் ஞானயோகத்துக்கும் அதிகாரிகள் வேறென்னல்.

4-16. ஆத்மஞானம் இல்லாதவனுக்குக் கர்மயோகம் அவசியமானதெனல்.

17-18. ஆத்மஞான முள்ளவனுக்குக் கர்மம் செய்தல் அநாவசியமெனல்.

19-35. பலாபேக்ஷையை விட்டு ஸ்வதர்மத்தைச் செய்யவேண்டுமென்று அருச்சுனனுக்குப் போதித்தல்.

36. பாவம் செய்தற்குக் காரணம் யாதென்று அருச்சுனன் கேட்டல்.

37-43. எல்லாக் கெடுதிக்கும் ஏதுவாகிய காமம் என்னும் பகையை இந்த்ரிய நிக்ரஹத்தால் வெல்லவேண்டுமெனல்.

உ

# மூன்றும் அத்தியாயம்.

## கர்மயோகம்.



### காப்பு.

ஊனாய் உயிராய் உணர்வாய் உலகனைத்தும்
தானாகி நின்றவொரு தற்பரனை - மானோர்
விழியார் மயக்கொழிந்து மேவிவழி பட்டுக்
கழியா மயக்கொழிந்தார் காப்பு.

### பாயிரம்.

முத்திநெறி யென்று மொழியுமறைற் றுட்கன்மம்
இத்திறமென் றாடவர்க்குச் சேருமென் - அத்தன்
புகன்றருளும போதவுரை புந்தியுறக் கொள்வார்க்
ககன்றிடுமே வெவ்வினைக்கட் டாங்கு.

---

## நூல்.

**கர்மத்திலும் ஞானம் உயர்ந்ததாயின் எனக்கேன் கர்மத்தை நியமிக்கவேண்டுமென்று அருச்சுனன் கேட்டல்.**

ஓதியநற் கன்மத்தின் ஒள்ளிதுமெய்ஞ் ஞானமெனல்
மாதவநின் கொள்கையெனில் வாலறிவில்-பேதையர்போல்
எய்த்துழல வெய்யதொரு கன்மத்தில் ஈண்டெனைநீ
உய்த்திடுதல் என்னே உரை. (௧)

ஒள்ளிது - மேலானது.

### முக்திமார்க்கம் இன்னதென்று உறுதியாய் உபதேசிப்பீர் எனல்.

*எனைக்கலக்க எண்ணியவா றீங்கிசைத்த வாக்கால்*
*மனக்கலக்கம் நல்குவையோ வள்ளால் - இனிக்கலக்கம்*
*தீரவருளிச்செய்வாய் திண்ணமுற நன்மையினைச்*
*சேரவருள் ஓர்நெறியைத் தேர்ந்து.* (உ)

### சாங்க்யர்க்கு ஞானமும் யோகியர்க்குக் கர்மமும் உரியதெனல்.

*இவ்வுலகில் ஆதியினில் என்னால் இயம்பியவை*
*எவ்வமிலாய் கேளாய் இருநிலையாம் - செவ்வியுறு*
*சாங்கியர்க்கு ஞானமும் தக்கவுயர் யோகியருக்*
*கோங்கியதோர் கன்மமுமென் றோர்ந்து.* (௩)

இரு நிலை-இரண்டு நிஷ்டைகள். சாங்கியர்-ஆத்மாநாத்ம விவேகமுள்ள சந்யாசிகள். யோகியர் - கர்மத்தில் இச்சையுள்ளவர்கள்.

### கர்மமே ஞானத்துக்குச் சாதனமென்றும் ஞானமில்லாத கர்ம சந்யாசத்தால் ஞானசித்தி யுண்டாகாதென்றும் கூறல்.

*கன்மமியற் றாமையினாற் கன்மமறு மோர்நிலையை ன்*
*நனமையுறச் சாரான் நரனொருவன் - கன்மமதை*
*முற்றொழித்த லானும் மொழியுமுயர் சித்தியினை*
*உற்றிடவில் லானீ துணர்.* (௪)

கர்மம் - அந்தக்கரண சுத்தியைக் கொடுக்கும் யாகாதி ஈசுவராராதன காரியங்கள். இக் கர்மங்கள் ஞானத்துக்கும் ஞானம் மோக்ஷத்துக்கும் கருவியாகும். கன்மமறு மோர்நிலை - ஞானயோக நிஷ்டை. சித்தி - கர்மமற்றநிலையாகிய ஞானயோக நிஷ்டை. இதனால், 'கர்மத்தைத் தொடங்கிச் செய்யாமையும், தொடங்கிய கர்மத்தை விடுதலும் தகாதெனல் கூறப்பட்டது.

### ஆத்மஞான மில்லாதவர்களுக்குக் கர்ம சந்யாசம் அசாந்திய மேனல்.

கன்மத்தை விட்டிருத்தல் இல்லைக் கணமேனும்
இம்மண்டலத்தெவனும் எந்நாளும் - மும்மைக்
குணவயத்தனுயெனும் கூர்ந்துவினை செய்யத்
தணவறவே தள்ளுண்பான் தான். (௫)

எவனும் - அஜ்ஞானியான எவனும். தணவறவே தள்ளுண்பான் - நீக்க முடியாமல் தாண்டப்படுவான்.

### கர்மங்களைச் செய்யாமல் மனத்தால் விஷயங்களைக் கருதிக்கொண்டிருப்பவன் கள்ளவாசாரம் உள்ளவன் எனப்படுவான் எனல்.

கன்மேந் திரியங்கள் தமைக் கட்டியெவன் தன்மனத்தால்
நன்மையறு பல்விடயம் நாடுவோன் - துன்மதிசேர்
பேதையவன் தன்னைப் பெரியோர்கள் பேசிடுவார்
சீதமுறு பொய்யொழுக்கன் என்று. (௬)

### ஞானேந்த்ரியங்களை அடக்கித் தனக்குரிய கர்மங்களைச் செய்பவனே சிறந்தோன் எனல்.

ஞானேந் தியங்கள்தமை நன்று எவன்மனத்தால்
ஆனு தடக்கிவினை ஆரம்பனைத் - தானுர
எண்ணுது கன்மேந் தியங்களினு லேயிழைப்பான்
கண்ணினவன் மேலாவன் காண். (௭)

### ஆதலின் நீ உனக்கமைந்த கர்மங்களை அவசியம் செய்தல் வேண்டுமேனல்.

செயற்கமையும் கன்மத்தைச் செய்திடுவாய் கன்மம்
செய்ப்படுதல் இன்மையினும் செய்தல் - நயப்படுமால்
கன்மமதைச் செய்திலையேற் காணுமுடற் போடணையும்
நன்மையினெய் தானுனக்கு நாடு. (௮)

ஈசுவராராதனமான கர்மங்களால் பந்தம் உண்டாகாதெனல்.

பேறுதரும் ஈசற்காப் பெட்பிற் செயுஞ்செயலின்
வேறுசெய லாலுலகம் மேவிடுமே - ஈறில்தொடக்
காதலினால் ஐய அதையும் பயன்துறந்து
நீதருமக் கன்மத்தைச் செய். (கூ)

அக் கன்மமாவன ஈசுவரன்பொருட்டுச் செய்யும் கர்மங்கள்.

அன்றியும் யஜ்ஞகர்மங்கள் பிரமனால்
நியமிக்கப்பட்டவை யெனல்.

எக்கியத்தோ டாடவரை ஈண்டுப படைத்துமுதல
மிக்கவித னுற்பெருகநம மேவுங்கீர் - தயகவிஃ
தங்களுக்கிங் குள்விழைந்த வொண்பொருளை நல்குமெனப்
பங்கயத்தே வன்றுரைத்தான் பார். (கoo)

எக்கியம் - யஜ்ஞம் - ஈசுவராராதனமான கர்மம். பஙகயததேவு-பிரமன்.

இந்த வேள்விகளைச் செய்து நன்மைகளை அடையக்
கடவீரென்று விதித்தானெனல்.

பன்னியவிவ் வேள்விகளாற் பாலிக்க பண்ணவரை
அன்னவரும் பாலிப்பர் ஆரருளால் - இன்னவிதம
உற்றொருவர் தமமை ஒருவருறப பாலிதறுப
பெற்றிடுவீர் மேலாகும் பேறு. (கக)

தேவர் அருளால் பெறப்பட்டதை மீண்டும் அவர்களுக்குக்
கொடாதவன் கள்வனுவான் எனல்.

விரும்புநல னெல்லாம்நும் வேள்விபெறும் தேவர்
நிரம்பவுமக் கீவரென நேர்ந்தான் - தரும்பொருளை
ஆதலினால் அன்னார்க் களியாமற் றுய்க்குமொரு
பேதைபெருங் கள்வனெனப் பேசு. (கஉ)

யஜ்ஞசிஷ்டமாகிய ஊண் பாவத்தைப் போக்கும், மற்றவை விளக்குமெனல்.

வேள்வியினில் விஞ்சியவூண் வேண்டிமிசை நல்லோர்கள்
மூள்வினையி னின்றொழிவர் முற்றும்யாண் - நாளும்
தமக்கெனவே தேடிச் சமைத்துண்பார் உண்பார்
குமைக்கரிய பாவமெனக் கொள். (௧௩)

வேண்டிமிசை - விரும்பிப் புசிக்கின்ற. வினை - பாவம். குமைக்கரிய - மாய்த்தற்கரிய.

கர்மத்தால் லோகசக்ரம் சுழன்றுவருதலின் அக் கர்மத்தைச் செய்தல் வேண்டுமெனல்.

அன்னமதி னின்றுளவாம் ஆரும் உயிர்க்குலங்கள்
அன்னம்உள தாமழையால் அம்புவியில் - அன்னமழை
வேள்வியின்கண் உண்டாகும் வேள்வி விளைந்திடுமே
ஆள்வினைசேர் கன்மத்தால் ஆங்கு. (௧௪)

உயிர்க்குலங்கள்-பிராணிகளின் சரீரங்கள். அன்னமழை-அந்த மழையானது. ஆள்வினை - முயற்சி.

ஆதலின் வேதம் யஜ்ஞகர்மங்களைப்பற்றி விரிவாகச் சொல்லுமெனல்.

கன்மமது தொன்மறைக்கண் உண்டாகும் கற்குமறை
சொன்மலியும் அக்கரத்தில் தோன்றுமே - தன்மையிஃ
தாதலினால் வேதம் அநுதினமும் வேள்வியினில்
தீதறவே நிற்கும் தெரி. (௧௫)

அக்கரம்-பரமாத்மா. வேள்வியில் நிற்கும் - யஜ்ஞங்களைப்பற்றி விவரிக்கும்.

கர்மங்களைச் செய்யாதவன் வாணன் வீணனாதமேனல்.

இவ்வா றமைந்துசுழல் சக்கரத்தை இவ்வுலகில்
ஒவ்வாது கைவிட் டொருற்றரிய - வெவ்வினைசெய்
தைம்புலன்க ளாற்களிக்கும் அப்பேதை வாழ்வதனைத்
திண்புவியில் வீணென்று தேர். (கசு)

ஆத்மஞானத்தைப் பெற்றவனுக்குக் கர்மம் இல்லையெனல்.

தன்னிடத்தே இன்புற்றுத் தன்னால் திருத்திபெறாஉத்
தன்னிடத்தே சந்துட்டி தானுறறு - மன்னுயுயர்
மாண்புடைய ஓர்மனிதன் வையகத்திற் செயகருமம்
காண்பதிலை திண்ணமிது காண். (கஎ)

தான் - ஆத்மா. ஓர் மனிதன் - ஆதமஞானியா யுள்ளவன்.

அவனுக்கு ஒருவாராலும் ஒரு பயனும் அடைய
வேண்டியதில்லை யெனல்

செப்பியவிச் செல்வற்குச் செய்வினையால் இல்லைபயன்
தபபுமிலை கன்மம் தவிர்ந்திடலால் - இப்புவியில்
யாரிடத்தும் சென்றடைந்து யாதும் பெறற்கிலையால்
சீருடைய இன்னவற்குத தேர். (கஅ)

ஆகையினலே கர்மத்துக்கு அதிகாரியாகிய நீ பலாபேக்ஷையில்லாமல் கர்மங்களைச் செய்க; அதனுல் முத்தி அடைவா யெனல்.

ஆதலினுற் செய்தக்க கன்மத்தை அன்னதனிற்
போதுபயன் விட்டுப் புரிகென்றும் - ஓதும்வினை
நேர்பயனில் ஆசை நிகழாமற் செய்புருடன்
சீர்கெழுவீ டெய்தல் திணம். (கக)

ஆதலினுல் - நீ இன்னும் ஆத்ம ஞானத்தைப் பெருமையினுலே.

ஜனகாதியரைப்போல லோகோபகாரமாகவேனும் கர்மத்தைச் செய்தல் வேண்டு மெனல்.

சித்தியுறப் பெற்றார் செனகன்முதல் ஆனோர்கள்
வைத்தவொரு கன்மத்தால் மாத்திரமே - கத்துகடல்
வையகத்து மாந்தர் வளன்கருதி யேனுநீ
செய்கருமம் செய்தல் கடன். (௨௰)

வைத்தவொரு கன்மத்தால் - தத்தமக்கு நியமிக்கப்பட்ட கர்ம ஙகளைத் தவறாமற் செய்தலினால். வளன்கருதி யேனும் - உன்பொருட்டுச் செய்யாவிடினும்.

ஜனங்கள் பெரியோரைப் பார்த்துத் தாங்களும் நடந்து கொள்வார்க ளெனல்.

எவ்வெச் செயல்பெரியோன் ஆற்றுவனோ ஏனையரும்
அவ்வச் செயல்களையே ஆற்றிடுவர் - செவ்வியுற
அன்னான் எதைக்கொள்வன் ஆர்ந்தளவை யாயதையே
உன்னுது கொள்வர்பிறர் உற்று. (௨௧)

அளவை - பிரமாணம்.

எனக்கு ஒருகருமமும் செய்யவேண்டாமாயினும் உலகத்தின் பொருட்டுச் செய்கின்றே னெனல்.

செய்கருமம் எற்கில்லைச் சிந்திக்கின் மூவுலகும்
வையகத்தில் இன்னும் மருவாதாய் - மெய்யிற்
பெறவுரிய தாம்பொருளும் பேசினிலை யேனும்
உறுவினையி னின்றொழியேன் ஊங்கு. (௨௨)

நான் கர்மங்களைச் செய்யாவிட்டால் மற்றவரும் செய்யாது விடுவரெனல்.

*செயற்குரிய கன்மத்தைத் திண்சிலைத்தோள் வீர*
*அயர்ச்சியறச் செய்தலொழிந் தாங்குத் - துயக்குற்*
*றிருப்பேனேல் எல்லயரும் என்னெறியை யாண்டும்*
*விருப்போடு பின்தொடர்வார் மிக்கு.* (உ௩)

*துயக்குற்று - சோர்வடைந்து: சிரத்தையின்றி.*

அதனால் வர்ணசங்கரம் முதலான தீங்குகளுக்கெல்லாம் நான் காரணன் ஆகவேண்டி வருமெனல்.

*செய்யா தொழிந்திடில்யான் திண்புவிகள் இன்னவெலாம்*
*வெய்யதுயர் ஆழ்ந்து விளிந்திடுமே - கைவேலாய*
*சங்கரத்தைச் செய்தித் தகைசேர் உயிர்க்குலத்தை*
*மங்கஅழித் தேனுவேன் மற்று.* (உ௪)

*திண்புவிகள் விளிந்திடும் - உலகம் ஈசுவரனால் நிலைபெற்று நிற்றலின், அவ்வீசுவரன் அதற்குரிய கர்மத்தைச் செய்யாவிடின் அழிந்து போம்.*

அஜ்ஞானிகள் ஆசையாற் செய்தல் போல ஞானிகள் ஆசையை விட்டுச் செய்தல் வேண்டுமெனல்.

*ஆசையினாற் பாமரர்கள் ஆற்றுதல்போல் ஆர்பயனில்*
*ஆசைதனைக் கைவிட் டறிவுடையோர் - ஆசகலும்*
*கன்மங்க ளைப்புவியின் நன்மை கருதினராய்த்*
*தின்மையறச் செய்தல்கடன் தேர்.* (உ௫)

*பாமரர் - அஜ்ஞானிகள்.*

### அஜ்ஞானிகள் கொள்கைக்கு விகற்ப முண்டுபண்ணாமல் ஞானவான் கர்மங்களைச் செய்யவேண்டு மெனல்.

*ஆசையினாற் கன்மஞ்செய் அஞ்ஞானி யர்க்குளத்திற்*
*பேசுமொரு பேதம் பிறப்பித்தல - மாசதனால்*
*நல்லறிஞன் செய்கருமம் நாள்தோறும் தானசெய்து*
*மலலனுறச் செய்வித்தல் மாண்பு.* (உ௬)

### தேகேந்திரியங்களாக மாறுபட்டிருக்கின்ற பிரகிருதி குணங்களாலே கர்மங்கள் செய்யப்படும், ஆத்மாவுக்குச் செய்கையில்லையெனல்.

*எண்ணும் பகுதிக் குணங்களினால் எவ்வகையும்*
*பண்ணும் கருமத்தைப பாவிபபன் - நண்ணும்*
*அகங்காரத் தால்மனத்தில் ஆம்மயக்கம் கொண்டோன்*
*மகிழ்ந்திதுநான் செய்வனென மற்று.* (உ௭)

*எவ்வகையும் - பலவகையாலும். பண்ணும் - பண்ணப்படும். மயக்கம் கொண்டோன் - தேகேந்திரியங்களை நானென்றெண்ணுகிறவன். செய்வனெனப் பாவிப்பன் என்று கூட்டுக.*

### முக்குணங்களின் வகையும் செயலும் அறிபவன் அவற்றின் காரியகர்மங்களில் பற்று வையானெனல்.

*சொற்ற குணத்தின் தொழிலின் பிரிவதனைப்*
*பற்றியநல் உண்மையினைப் பாங்கறிவான் - மற்றவைதாம்*
*இந்தியங்கள் தம்விடயத் தேயியங்கல் என்றுணர்ந்து*
*மைந்துதரும் பற்றடையான் மற்று.* (உ௮)

*குணத்தின் பிரிவையும் அக் குணங்களின் தொழிலின் பிரிவையும் பற்றிய. பாங்கு - செவ்வையாக. மைந்து - மயக்கம்.*

**ஞானமில்லாதவர் பயனை விரும்பிக் கர்மங்களில் பற்றுவைப்பார்கள், ஞானவான் அக் கொள்கையை மாற்றி அக் கர்மங்களினின்றும் அவரை விலக்கலாகாதெனல்.**

*பகுதிக் குணத்தாலே பற்றிமயக் குற்றூர்*
*புகலக் குணத்தொழிலில் புந்தி - மிகவுறுவர்*
*எல்லாம் உணர்ந்திடுவான் அவ்வுணர்ச்சி இல்லாரை*
*ஒல்லாது காண்கலக்கல் உற்று.* (உகூ)

*பற்றி - பற்றப்பட்டு. குணத்தொழிலில்...உறுவர் - குணத்தின் கர்மங்களைத் தமது கர்மங்களாகக் கருதி அவற்றில் பற்றுவைப்பார்கள்.*

**சகல கர்மங்களையும் சர்வேசுவரனாகிய என்னிடத்தில் அர்ப்பித்துப் போரைச் செய்வாயெனல்.**

*கன்மமெலாம் என்பாற் கருதிச் சமர்ப்பித்து*
*நின்மலமாம் ஆன்மாவில் நெஞ்சிருத்தி - என்னதெனும்*
*பற்றகற்றி ஆசை பறித்துப் படரொழிததிங்*
*குற்றதொரு போர்புரிவாய் ஊங்கு.* (௩௰)

**இந்தக் கொள்கையை அசூயையைவிட்டு நம்பிக்கையோடு அநுஷ்டிப்பவர் கர்மபந்தத்தினின்றும் நீங்குவாரெனல்.**

*யான்புகலிக் கொள்கைதனை என்னூர் சிரத்தையொடு*
*பான்மையினால் உள்ளழுக்கம் பற்றாது - மேன்மையுற [றும்*
*எப்பொழுதும் கொண்டொழுகும் எண்ணுடையார் அன்*
*தப்புவர்காண் கன்மத்திற் றும்.* (௩க)

*அழுக்கம் - பொறாமை. தப்புவர் - நீங்குவார்கள்.*

**இந்தக் கொள்கையை அசூயையாலே அநுஷ்டியாதவர் ஞானத்தைப் பெறாமல் கெட்டுப் போவாரெனல்.**

கூறியவிக் கொள்கைதனைக் கூடும் பொறாமையினால்
பேறுபெறப் பின்பற்றிப் பேணாதார் - வீறுதரும்
நல்லறிவி னெல்லாம் மயங்கினராய் நாசமுறற்
கொல்லைவிரை வாருணர்வின் றாங்கு. (௩௨)

நல்லறிவு - சகுண நிர்க்குணங்களைப் பற்றிய அறிவு.

**அநுஷ்டிக்கவொட்டாமல் தடுக்கும் ஸ்வபாவத்தை வெல்லுதல் அசாத்தியமெனல்.**

அறிவுடையோ னேனும் அவனியற்கைக் கொத்த
நெறியே நடந்திடுவன் நீடும் - திறலுடையாய்
பல்லுயிரும் அவ்வெற்றின் பண்பினையே பற்றியுறும்
வெல்லும் வகை யிற்றடுத்தல் வீண். (௩௩)

**விருப்பு வெறுப்பை நீக்கினவன் சாஸ்திர உபதேசத்தில் நிற்கவல்லவனாதலின் அவற்றை நீக்கவேண்டுமெனல்.**

இந்தியங்க ளின்விடயத் தென்றும் இயல்விருப்பும்
புந்திவிழை யாவெறுப்பும் புக்குளவால் - சிந்தித்
தவைக்குவசம் ஆகாமல் ஆர்ந்திடுக அன்ன
தவிர்க்கரிய சத்துருவென் றுய்ந்து. (௩௪)

அவைக்கு - அவ் விருப்பு வெறுப்புகளுக்கு.

**விருப்பு வெறுப்புக் குட்பட்டவன் ஸ்வதர்மத்தைவிட்டுப் பரதர்மத்தை அநுஷ்டிக்கக்கூடுமாதலின் அது முறையன்றென்று கூறல்.**

நன்கொழுகும் மற்றோர் அறந்தன்னில் நற்குணனில்
தன்கீழ்மை யாமறனே சாற்றின்மேல் - புன்கணுறத்
தன்னறத்திற் சாதல் நலமாகும் சார்ந்திடுமே
இன்னல்பிறர் தமமறத்தால் ஈங்கு. (௩௫)

நற்குணனில் - நன்றாய அநுஷ்டிக்கப்படாத. புன்கண்-துன்பம்.

இஷ்டமில்லாமலிருந்தும் ஒருவன் தீச்செயல்களைச் செய்யக் காரணம் யாதென்று அருச்சுனன் கேட்டல்.

*தீவினைதான் ஓர்புருடன் செய்ய விருப்பிலனாய்*
*மேவினுமென் அவ்வினையை வெவ்வலியால் - ஏவப்*
*படுந்தகையன் போலியற்றல் பாரளந்து கொண்ட*
*நெடுந்தகையாய் ஈது நிகழ்த்து.* (௩௬)

அதற்குக் காரணம் இராசதகுணத்தால் உண்டாகும் காமக்குரோதங்களேயெனல்.

*ஏதுவினைச் செய்யின் இராசதத்தால் உற்றதொரு*
*தீதுறுவெங் காமம் சினமுமது - யாதினையும்*
*உண்மடுப்பதைய ஒழியாத பாவமுமாம்*
*எண்மதியீ தைப்பகையென் றீங்கு.* (௩௭)

ஆசையாலே ஞானத்தின் பிரகாசம் மறைபட்டுப்போமெனல்.

*தூமத்தாற் றீயும் துகளாற் றருப்பணமும்*
*சேமக் கருப்பையா லேசிசுவும் - மாமை*
*அறப்பொதியப் பட்டதுபோல் ஆசையால் ஞானம்*
*உறப்பொதியப் பட்டிடுமென் றோர்.* (௩௮)

*தருப்பணம் - கண்ணாடி. மாமை - அழகு.*

இதுவுமது.

*கொள்ள்நிரம் பாத கொடுந்தழலாய் ஞானியர்க்குத்*
*தள்ளரிய வெம்பகையாய்ச் சார்ந்திடுமிவ் - எள்ளரிய*
*ஆசையினால் ஞானம் அறப்பொதியப் பட்டிடுமே*
*தேசழிய நீயிதனைத் தேர்.* (௩௯)

ஞானத்தை மறைக்கும் இவ்வாசையானது பஞ்சேந்த்ரியங்களையும் மனசையும் புத்தியையும் இடமாகக் கொண்டிருக்குமெனல்.

இந்தியங்க ளோடு மனம்புத்தி என்னுமிவை
சந்ததமும் காமம் தனக்கிடமாம் - முந்துமது
மற்றவற்றால் வாலறிவை மாய மறைத்துயிரை
முற்ற மயக்கிடுமே முன். (௪௦)

ஆகையினால் அவ்வாசையை ஒழித்தல் வேண்டுமெனல்.

ஆகையினால் ஐம்பொறியும் ஆர்த்தடக்கி ஆரமரில்
ஏகைபெறு பாரதர்க்கு மாணரசே - மோகமுற
ஞானவிஞ்ஞா னத்தை நலிந்துபவத் திற்கேது
ஆனவிதை விட்டொழிவாய் ஆங்கு. (௪௧)

ஆத்மா அனைத்தினும் மேலானதெனல்.

இந்தியங்கள் மேலனவாம என்றுரைபப இந்தியத்திற்
சிந்தைமிக மேலதனிற் சீருடைத்துப - புந்திதான்
மன்னியவப புந்தியினும மாண்புடையான் அன்றோனே
தன்னவினும தோளாய்நீ காண். (௪௨)

ஆத்மாவை அறிந்து மனமுதலிய இந்த்ரியங்களை யடக்கி ஆசையாகிய பகைவனை வெல்லவேண்டுமெனல்.

புத்தியினும் மேலாம் பொருளையறிந் திவ்வண்ணம்
சித்தமதை ஆன்மாவாற் றீதறவே - வைததடக்கிக்
கர்மமென்னும் வெய்ய கடத்தற் கரும்பகையை
நாமமெடுவேலாய் நலி. (௪௩)

கர்மயோகம் முற்றிற்று.



உ

## நான்காம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.



1-3. ஞானயோகங்களின் வம்சபரம்பரை கூறி அவற்றை வியத்தல்.

4. பகவான் விஷயமான அநீசுவர சங்கையை நீக்கும் பொருட்டு அருச்சுனன் கேட்டல்.

5. தமக்கும் ஜீவர்களுக்கும் ஜன்மங்கள் பொதுவாயினும், தமக்கு அந்த ஜன்மங்களைப்பற்றின ஞானமுண்டென்றும், ஜீவர்களுக்கில்லையென்றும் பகவான் கூறுதல்.

6-8. பகவான் தமது ஜன்ம ஸ்வரூபமும் அதன் பிரயோசனமும் கூறுதல்.

9. பகவானுடைய திவ்யமான ஜன்மகர்மங்களைத் தெரிந்துகொள்ளுதலால் புநர்ஜன்மம் நீங்குமெனல்.

10. பூர்வகாலத்தில் இருந்த பிரமஞானிகள் இந்த மோக்ஷமார்க்கத்தைத் தெரிந்தே முக்தி அடைந்தார்களெனல்.

11. பகவான் அவரவர் கோரிக்கைக்குத் தக்கபடி பலன்களைக் கொடுத்தல் கூறுதல்.

12. கர்மசித்தி சீக்கிரத்தில் கிடைத்தலினாலே எல்லாரும் கர்மங்களை விரும்பிச் செய்வரென்று கூறுதல்.

13. பகவான் சதுர்வர்ணங்களையும் சிருஷ்டித்தபோதிலும் அவற்றில் அவர்க்கு கர்த்திருத்துவம் இல்லையெனல்.

14. பகவானுக்குக் கர்த்திருத்துவம் இல்லையென்று தெரிந்துகொள்ளலால் ஒருவனுக்குக் கர்மபந்தம் நீங்குமெனல்.

15. பகவானை அகர்த்தாவாக உணர்ந்து கர்மங்களைச் செய்தல் வேண்டுமெனல்.

16. கர்மாகர்மங்களைச் சொல்லுவமெனல்.

17. கர்மாகர்மங்களைத் தெரிந்துகொள்ளல் பிரயாசமென்று கூறுதல்.

18. கர்மாதிகளின் தத்வம் காட்டுதல்.

19-23. கர்மத்தில் அகர்மமும் அகர்மத்தில் கர்மமும் தெரிந்துகொள்ளலை வியத்தல்.

24. ஞானமானது ஒருவகையான யஜ்ஞமெனல்.

25-33. தெய்வயஜ்ஞம் முதலான எல்லா யஜ்ஞத்திலும் ஞானயஜ்ஞம மேலானதெனல.

34. ஞானமானது குருவருளால் கிடைக்குமெனல்.

35-38. ஞானத்தின் பெருமை கூறுதல.

39-42. ஞானத்தை அடையும் உபாயத்தைக் கூறி ஞானஹேதுவான கர்மத்தில் அருச்சுனனைப் பிரவிருத்திக்கச் செய்தல்.

## நான்காம் அத்தியாயம்.

# ஞான யோகம்.



### காப்பு.

*மதிபோல் ஒளிர்முகமும் வாரிசத்தண் சேய*
*புதுமலரைப போல்விழியும் பூவை - மதுமலியும்*
*ஒண்மலர்நேர் மேனியும ஒங்குவரைத் திண்புயமும்*
*என்னுமனம் விட்டகலா நன்கு.*

### பாயிரம்.

*ஆன்மாவுக் கோர்செயலும் இல்லைபவை யாவும்உடல்*
*தான்மருவு மெனனும தகைதன்னைப - பான்மையினல்*
*ஒருவதே ஞானமென உற்றிறைவன் ஒதியதைத்*
*தேருவதே தீவினைகருத் தீ.*

---

### நூல்.

**பகவான் தாம் உபதேசித்த யோகத்தின் வரலாறு கூறுதல்.**

*நாசமறு நற்பயனை நல்குமுயர் யோகமிதைத்*
*தேசுபெறு செங்கதிர்க்குச் செப்பினேன் - பேசுமவன்*
*மேவுமநு வுக்குரைப்ப விண்டுரைத்தான் அன்னானும்*
*தாவில்இக்கு வாகுவுக்குச் சார்ந்து.* (௧)

*யோகம் : இது சாங்க்யம் கர்மம் என்னும் இரண்டையும் குறித்தது.*

வெகு காலமானதால் அந்த யோகம் க்ஷீணம் அடைந்ததெனல்.

வழிவழியிவ் வாறுவரும் மாயோகைத் தேர்ந்தார்
பழிதவிர்பல் கோமுனிவர் பாரில் - கழிபகல்பின்
செல்லுகைபாற் பினனரிது செவ்வியழிந் தொல்கியது
மல்லடுதோள் மன்ன மதி. (உ)

கோமுனிவர் - ராஜரிஷிகள். செவ்வியழிந்தொல்கியது - உப தேசிப்பவரும் கற்பவரும் இல்லாமல் பாரம்பரியம் இழந்தது.

நீ எனக்கு நேசனும் பக்தனுமாதலின் உனக்கிதை உபதேசித்தேனெனல்.

நீயெனக்கு நேசனும் நீங்காத பத்தனும்
ஆயிருத்த லாலேதொல் யோகத்தையே - தூயவுனக்
கின்றுரைத்தேன் ஈது மறையெவற்றின் உத்தமமென்
றொன்ற உணர்ந்திடுவாய் உற்று. (௩)

மறை - ரஹஸ்யம்.

சூரியனுக்குப் பிற்பட்ட தேவரீர் அவனுக் கெவ்வாறு உபதேசித்தீர் என்று அருச்சுனன் கேட்டல்.

உன்பிறப்புப பின்னும் ஒளிசேர் செழும்பரிதி
தன்பிறப்பு முன்னும் சமைந்திடலால் - முன்பிதனை
ஓதினாய் என்னும் உரைதனையெவ் வாறுணர்வேன்
போதினாள் கொண்க புகல். (௪)

பகவான் தமக்கு அநேகம் பிறப்பு உண்டெனல்.

என்பிறப்பும் போரில் இலங்கும் பரந்தபநின்
தன்பிறப்பும் எத்தனையோ தாம்சென்ற - முன்பவற்றை
எல்லாம் அறிந்திடுவேன் ஈங்கவற்றை நீஅறியாய்
புல்லாருக் கேறனையாய் போந்து. (௫)

### அப் பிறப்பு கர்மவசத்தாலன்றி இச்சையால் எடுக்கப்படுமெனல்.

*பிறப்பிலனாய்த் தேய்தலாறு பெற்றியனாய் யார்க்கும்*
*சிறப்புமலி ஈசனாய்ச் சீர்மை - உறப்பெறினும்*
*என்பகுதி தன்னை வசப்படுத்தென் மாயையினால்*
*சம்பவிப்பேன் தானீ துணர்.* (சா)

*பகுதி - பிரகிருதி, அதாவது முக்குணங்களாலாயதும் உலகத்தை மயங்கச் செய்வதுமான விஷ்ணுமாயை. மாயையினால் சம்பவிப்பேன் என்றது நான் பிறப்பதுபோலக் காட்டுகின்றேனேயன்றி உண்மையாகப் பிறத்தல் இல்லையென்றதாம்.*

### தர்மம் குறைந்து அதர்மம் மேலிடும்போது அவதாரம் எடுக்கப்படுமெனல்.

*என்றென்று தன்மம் இளைப்படையும் இப்புவியில்*
*என்றென்றதன்மம் எழுச்சிபெறும் - அன்றன்று*
*பண்பாலே என்னைப் படைத்தருளாற் போதருவேன்*
*திண்பாரில் நீயிதனைத் தேறு.* (எ)

*இளைப்பு - குறைவு. பண்பாலேபடைத்து - மாயையின் சத்தியினால் படைத்துக்கொண்டு.*

### சிஷ்டர்களைக் காத்தற்கும் துஷ்டர்களைச் சங்கரித்தற்கும் அறத்தை நிலைநிறுத்தற்கும் எடுக்கப்படுமெனல்.

*நல்லாரைக் காத்தற்கும் நன்மையறு தீயவரை*
*வல்லாய் அழித்தற்கும் வந்துதிப்பேன் - அல்லாதும்*
*செவ்வே அறத்தைத் திரமாக நாட்டுதற்கும்*
*ஒவ்வோர் உகந்தனிலும் உற்று.* (அ)

**என் அவதாரத்தையும் காரியங்களையும் அறிபவன் பிறப்பு நீங்கி முத்தியடைவானெனல்.**

*திவ்வியமாம் என்னரிய சென்மத்தைச் செய்தொழிலை*
*இவ்வகையா நன்குணர்வான் யாவன்காண் - அவ்வறிஞன்*
*விட்டொழிந்து தன்னுடலை மீண்டும் பிறப்படையான்*
*திட்டமென்னை வந்தடைவன் தேர்.* (௯)

இவ்வகையாக - அவதாரம் மாயையினால் ஆகியதெனவும் செய்கையானது நல்லோரைப் பாதுகாத்தல் முதலியதெனவும் இவ்வண்ணமாக.

**ஞானயோகமாகிய இம் முத்திவழியை அநுசரித்து அநேகர் என்னை அடைந்துள்ளாரெனல்.**

*ஆசைசினம அச்சம அறவொழிந்தெனை தனமயமாய*
*நேசமொடு மென்றனையே நேர்ந்தடைந்து - மாசிலபலர்*
*பெற்றதொரு ஞானப் பெருந்தவத்தால் நின்மலராய்*
*உற்றனரென் தன்மையினை ஓங்கு.* (௧௦)

**நான் போகமோக்ஷங்களைக் கொடுப்பினும் எனக்கு விருப்பு வெறுப்பில்லையெனல்.**

*என்னையெவர் எக்கருத்தால் எவ்வா றடைந்திடுவார்*
*அன்னவரை அவ்வா றளிப்பேன்யான் - மன்னுலகில்*
*என்னெறியை யேதொடர்வர் எத்திறத்தும் மானிடர்தாம்*
*கன்னவிலும் தோளாய்நீ காண்.* (௧௧)

என் நெறியை - என்னால்கூறப்பட்ட ஞானகர்ம மார்க்கங்களை. மானிடரென்றது இங்குக் குரங்கு யானை முதலிய எல்லாப் பிராணிகளையும் குறிக்கும்.

உயிர்கள் என்னை அடையாமைக்குக் காரணமும், இதர தேய்வங்களைக் கருதிச் செய்யும் கர்மங்களின் பயன் சீக்கிரம் சித்தித்தலாம் எனல்.

கன்மங்க ளின்பயனைக் காதலிப்பார் ஞாலமிசை
பன்மகமும் செய்வர் பரிந்துசுராக - மென்னையெனில்
மானிடர்வாழ் வையகத்தில வாய்த்திடுமே கன்மத்தால்
ஆனபயன் ஆசென் றறி. (கஉ)

ஜாதிபேதம் குணத்துக்கும் செயலுக்கும் தக்கபடி என்றால் அமைக்கப்படினும் நான் அகர்த்தாவும் அவிகாரியுமாவேனெனல்.

சாதியொரு நான்கினையும் சார்குணத்தைக் கன்மத்தை
ஏதமறப் பாகித் தியற்றினன்யான் - ஓதுமுதல்
ஆயினுமிங் கென்னை அகர்த்தன்அவி காரியென
நீயுணர்க மற்றிதுவே நேர். (கங)

குணகர்மங்களைப் பாகித்து - குணகர்மங்களின் அளவுக்குத் தக்கபடி. அகர்த்தன் - மாயையின் வியவஹாரத்தால் கர்த்தாவேயன்றி உண்மையாகக் கர்த்தா அல்லன்.

என்னைக் கன்மம் தொடராமைக்குக் காரணம் இன்ன தெனல்.

தீண்டாது கன்மமெனைச் செய்கருமத் தின்பயனை
வேண்டேனிவ் வண்ணமெனை மெய்யுணர்வான் - பூண்டதொரு
கன்மத்தால் என்றும் கட்டுண்ணான் காணுயிம்
மன்மத்தை நன்குணர்ந்து மற்று. (கச)

தீண்டாது - அகங்காரம் இல்லாமையினாலே பற்றுது. இவ்வண்ணம் - தீண்டாதென்றும் வேண்டேனென்றும்.

ஆதலின் என்னை அகர்த்தாவாக உணர்ந்து கர்மங்களைச் செய்யவேண்டுமெனல்.

இவ்வாறு மெய்ம்மையுணர்ந் தேதமறு வீடதனைச்
செவ்வே விரும்பினரும் செய்தனரால் - எவ்வமறக்
கன்மமதை நீயுஞ்செய் காதலித்தம் முன்னோர்கள்
தொன்மைப்புரி வண்ணம் துணிந்து. (கரு)

கர்மாகர்மங்களைத் தெரிந்துகொள்ளுதல் கற்றவர்க்கும் அரிதெனல்.

யாதொன்று செய்கருமம் யாதொன் றகன்மமிதில்
மூதறிஞர் தாமுமிக மோகித்தார் - ஏதொன்றைக்
கற்கஅறும் தீமை கழறுவனக் கன்மத்தைச்
சொற்கொள் அகன் மத்தோடு சூழ்ந்து. (கசு)

இதில் - இவ் விஷயத்தில்; மோகித்தார் - கலங்கினார்கள்.

அவற்றோடு விதிக்கு விரோதமாகிய கர்மமும் தெரிந்துகொள்ளவேண்டுமெனல்.

விதித்ததொரு கன்மம் விலக்கியதோர் கன்மம்
மதிக்குமொர் அகன்மமென வள்ளால் - கதித்தவினை
உய்த்துணரத் தக்கவறி கன்மத்தின் உண்மைநிலை
யைத்தெரிதல் தானரிதிங் கார்ந்து. (கள)

### கர்மாகர்மங்களின் ஸ்வபாவம் உணர்த்துதல்.

கன்மத் தகன்மத்தைக் காண்போனும் அவ்வாற
கன்மத்திற் கன்மத்தைக் காண்போனும் - கன்மங்கள்
எல்லாம் புரிந்தோனும் எண்ணும்அறி வுள்ளவனும்
வல்லவொரு யோகியுமாம் மற்று. (கஅ)

கர்மமும் அகர்மமும் உலகத்தார் செவ்வையாகத் தெரிந்துகொள்ளுதல் இல்லை. கிளிஞ்சலை வெள்ளியென்றும் கானலை நீரென்றும் கருதுதல்போலக் கர்மத்தை அகர்மமாகவும் அகர்மத்தைக் கர்மமாகவும் மாறுபட நினைக்கின்றார்கள். இந்தத் தடுமாற்றம் தீர்ந்தவனே ஞானியாவான். கர்மத்தில் அகர்மத்தைப் பார்த்தலாவது, கர்மத்தைச் செய்வதாக எண்ணப்படுகிற ஆத்மாவுக்குக் கர்மம் இல்லையென் றுணர்தல்; அகர்மத்தில் கர்மத்தைப் பார்த்தலாவது, செயலில்லாமையும் ஒருவகைக் கர்மமென்றும் அக் கர்மமும் ஆத்மாவுக் கில்லையென்றும் உணர்தலாம்.

### கர்மாகர்மங்களின் உண்மையை உணர்ந்து பலாபேட்சையை விட்டவனே ஞானியெனல்.

யாவனது கன்மங்கள் எல்லாம் விருப்புடனே
மேவுமொரு சங்கற்பம் விட்டனவோ - தாவிலவன்
தன்வினைகள் ஞானத் தழலால் எரிந்தனவோ
அன்னவனே பண்டிதனும் ஆங்கு. (கக)

சங்கற்பம் - இன்னதின்பொருட்டு என்னும் உத்தேசம். ஞானமாவது கீழே சொல்லியபடி கர்மத்தில் அகர்மமும் அகர்மத்தில் கர்மமும் காணுதல்.

### அந்த ஞானிக்குக் கர்மபந்தம் இல்லையெனல்,

கன்மபலத் தாசைதனைக் கைவிட்டு நற்திருப்தி
தன்மனத்துப் பெற்றொருவற் சாரானாய்த் - துன்னுமவன்
கன்மங்கள் செய்திருப்பக் காணுகினும் அன்னோர்
கன்மமெனும் செய்கிலனே காண். (உ0)

அவனுக்குப் பாவமில்லை யெனல்.

ஆசையற்றுத் துள்ளத்தொ டாருடலைத் தானடக்கிப்
பேசுடைமை யாவுமறப் பின்விடுத்து - மாசில்வினை
தேகநிலை மாத்திரமாச் செய்திருப்போன் தீவினையைச்
சோகமுறத் துன்னான் றுணி. (உக)

அவன் எவ்வாறு உபசிவிப்பதெனல்.

தானு வரும்பொருளாற் சந்துட்டி தன்மனத்துற்
றூனது தீர்ந்தம் அறநீக்கி - ஊனமலி
மச்சரத்தை விட்டு மருவுசம சித்தம்உளான்
எச்செயிற்கும் பந்தம்உறான் ஈங்கு. (உஉ)

தொந்தம நீக்கி - சீதோஷ்ண சுகதுக்கங்களால் மனம் சலிக்காமல். மச்சரம் - பொறாமை. செயற்கும் - கர்மங்களாலும்.

அவன் செய்யும் ஈசுவரப்பிரீதியான கர்மங்கள் பலத்தோடு நசிக்கும் எனல்.

ஆருமிரு பற்றும் அறுத்தவனுய் முத்தனுய்ச
சோருமெய்ஞ் ஞானத்திற் றிண்ணிலைகொண் - டேருடைய
நன்மனத்தால் ஈசற்கா நல்வினைகள் செய்யுமவன்
கன்மம் கரைந்திறுமே காண். (உ௩)

அவ்வாறு நசித்தற்குக் காரணம் அவன் சர்வமும் பிரமமாகக் காணுதல் எனல்

அர்ப்பணமும் ஆரவியும் அக்கினியும் அக்கினியில்
அர்ப்பணஞ்செய் கிற்பானும் அர்ச்சையனும் - செப்புமொரு
கன்மத்தி னிற்பிரமம் காணுமவன் நண்ணுவதும்
இன்னவையா வும்பிரம மே. (உச)

அர்ப்பணமும் ..பிரமம் - பிரமஞானத்தைப் பெற்றவன் தான் யாகத்தில் செய்யும் அவிசு முதலானவற்றை பிரமமே யென்று காண்பான். ஆதலால் அவன் கர்மம் அவனைப் பந்தியாது. இவ்வாறு சர்வமும் பிரமம என்று காண்பதே ஞான யஜ்ஞம் என்னப்படும். அர்ப்பணம் - அர்ப்பிக்கும் கருவி. பிரமமாவது இன்ன தென்பது பின்வரும் சுருதிவாக்கியங்களால் உணரப்படும்: "ப்ரஹ்மம் மெய்ப் பொருளாயும அறிவாயும் முடிவில்லதாயும் உள்ளது." "ப்ரஹ்மம் அறிவும் ஆநந்தமுமா யிருப்பது. எது சமீபத்திலும் தூரத்திலும் உள்ளதோ எது எல்லாவற்றிற்கும் உள்ளே யுள்ள ஆத்மாவாக இருக்கின்றதோ அது ப்ரஹ்மம்." பசி நீர்வேட்கை முதலிய எவ்வித சம்சாரத் தன்மையும இன்றி "அன்று அன்று" என எத்தகையு சிறப்பியல்பு மில்லாதது பிரமம்.

ஞான யஜ்ஞத்தின் பெருமையைக் காட்டுதற்காகப் பலவகையான வேள்விகளையும் கூறலுற்று தெய்வ யஜ்ஞமும் ஞான யஜ்ஞமும் கூறல்.

வேறுசில யோகியர்கள் விண்ணவர்க்கே குற்றமற
வீறுடனே செய்திடுவர் வேள்விதனை - வேறுசிலர்
அப்பிரம மாந்தழலில் ஆன்மாவை ஆன்மாவால்
ஒப்பறவோ மித்திடுவர் உற்று. (உரு)

முதலில் 'யோகிகள்' என்றது கர்மயோகிகளையும், பின்னர் 'வேறு சிலர்' என்றது ஞானயோகிகளையும் குறிக்கும். ஆத்மாவைப் பிரமத்தில் ஓமித்தலாவது உபாதியோடு கூடிய ஜீவாத்மாவும் உபாதிரகிதமான பரமாத்மாவும் இரண்டும் ஒன்றென்றறிதல். கீழேகூறிய ஞானயஜ்ஞம் பின்னும் அதனைச் சிறப்பித்தற் பொருட்டுத் தெய்வ யஜ்ஞம் முதலிய யஜ்ஞங்களோடு வைத்துக் கூறப்பட்டது.

இந்த்ரிய நிக்ரஹமாகிய யஜ்ஞமும், இந்த்ரியங்களை நெறியிற் செலுத்தலாகிய யஜ்ஞமும் கூறுதல்.

அடக்கழலென்னும் அங்கினியில் ஐம்பொறியும் செல்ல
விடுத்தனராய் ஓமிப்பர் வேறோர் - தடுப்பரிய
சத்தாதி புல்விடயம் தம்மையுமவ் விந்தியத்தீ
உய்த்தோமம் செய்வாசிலர் உற்று. (உசு)

மநோநிக்ரஹமாகிய யஜ்ஞம் கூறுதல்.

ஏனையவர் இந்தியத்தின் செய்கையையும் இன்னுயிர்ப்பின்
ஊனமறு செய்கையையும் ஓமிப்பர் - ஞானமதால்
மூண்டொளிரும் வன்மனத்தை முற்றடக்கல் என்னுமொரு
நீண்டிடும்யோ கித்தழலில் நேர்ந்து. (உஎ)

'மூண்டொளிரும் யோகத்தழலில்' என்று கூட்டுக.

தானம், தவம், யோகப்பயிற்சி, சாஸ்திரப் பயிற்சி என்னும் யஜ்ஞங்களைக் கூறுதல்.

கைப்பொருளை ஈதல் கருதித் தவம்புரிதல்
முற்படுமோர் யோகில் முயன்றிடுதல் - கற்றிடுதல்
மெய்ந்நூலை ஞானத்தை மேவல்எனும் வேள்விகளைச்
செய்வர்கொடு நோன்பர் சிலர். (உஅ)

பிராணயாமமாகிய யஜ்ஞம் கூறுதல்.

ஓடும் உயிர்ப்பின்வழி உற்றடைத்துச் செய்திடுவார்
நாடுபிராணயாமம் நன்குசிலர் - கேடில்பிரா
ணன்றனைய பானத்தும் நன்கிதனை முன்னதிலும்
ஒன்றவிடுத் தோமிப்பர் உற்று. (உகூ)

'சிலர் ஓமம் செய்திடுவார்' என்று கூட்டுக. அதாவது ரேசக பூரக கும்பகங்களாகிய பிராணயாமங்களைச் செய்வார்கள். இதனை முன்னதில் - அபானனைப் பிராணனில்.

### பிராணபந்தனமாகிய யஜ்ஞம் கூறுதல்.

உண்டிமுறை யாலுண் டுயிர்ப்பையுயிர்ப் பில்விடுத்துக்
கொண்டுசிலர் ஓமம் குறித்திடுவார் - விண்டவிவர்
எல்லோரும் வேள்வி இயல்புணர்ந்தா ரேயவற்றால்
தொல்பவமும் தீர்வார் துணி. (௩௦)

உயிர்ப்பு - பிராணவாயு.

### யஜ்ஞம் செய்யாதவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் சுகம் இல்லையெனல்.

எக்கியம்செய் தெஞ்சியதோர் இன்னமுதை உண்பவர்கள்
மிக்கபிர மந்தன்னை மேவிடுவார் - எக்கியத்தைச்
செய்யாதார்க் கிவ்வுலகே இல்லையெனிற் சேரரிய
மெய்யான மற்றதெது மேல். (௩௧)

மற்றதெது - சுவர்க்காதி போகங்கள் எவ்வாறு கிட்டும்?

### இந்த யஜ்ஞங்களில் ஆத்மாவுக்குச் சம்பந்தம் இல்லையெனல்.

இத்தகைய பல்விதமாம் எக்கியங்கள் யாவுமறை
மெய்த்தமுகம் தன்னில் விரித்துளவால் - மற்றவைதாம்
கன்மத்தின் உண்டான என்று கருதுவையேல்
வன்மையுறு பந்தமுறாய் மற்று. (௩௨)

கன்மத்தின் உண்டான-மனோ வாக் காயங்களாகிய கர்மங்களினின் றுண்டாயின; ஆதலின் கர்மரகிதமாகிய ஆத்மாவுக்குச் சம்பந்தம் இல்லையென்று அறிவாயாகில்.

### ஞான யஜ்ஞத்தின் சிறப்புக் கூறுதல்.

ஆனபொரு ளாலே அமைத்தபல வேள்வியினும்
ஞானமெனும் வேள்வி நலனுறுமால் - ஊனமறு
கன்மங்கள் யாவும் கருதியஞா னத்தடங்குந்
தன்மையிது காணுதிநீ சார்ந்து. (௩௩)

நலனுறும் - பலத்தை விளைவியாமையாலே மேலாகும்.

இந்த மகத்தான் ஞானத்தை எப்படிப் பெறுவதெனல்.

பாதம் பணிந்தும் பரிவோ டுசாவியும்
ஏதமறச் சேவித்தும் ஈதறிக - நீதறவே
மெய்கண்ட ஞானியர்கள் மேவரிய ஞானத்தைக்
கைகண் டிடத்தருவர் காண். (௩௪)

உசாவி - கேட்டு. ஈது - இந்த ஞானத்தை. ஞானியர்கள் ஞானாசாரியர்கள்.

அந்த ஞானத்தால் மோகம் நீங்கும் எனல்.

நற்றவர்கள் போதித்த ஞானமிதைப் பெற்றதன்பின்
உற்றநெடு மோகம் ஒழியப்பெற் - றற்றமிலா
எல்லா உயிர்களையும் என்னிடத்தும் உன்னிடத்தும்
வல்லாய்நீ காண்கிற்பாய் மற்று. (௩௫)

எல்லாவுயிர்களையும் காண்பாய் - ஜீவனும் ஈசுவரனும் ஒன்று என்னும் உண்மையை அறிவாய.

அதனால் பாவம் நீங்கும் எனல்.

மேயபல பாவிகளுள் மிக்ககொடும் பாவிநீ
ஆயினுமுன் பாவங்கள் அத்தனையும் - தூயநெடு
ஞானமெனும் நாவாயால் நன்கு கடந்திடுவாய்
தானிதனிற் சங்கை தவிர். (௩௬)

பாவம் எதுபோல் நீங்கும் எனல்.

மண்டியெரி கின்றதழல் வாய்த்திடுமோர் வல்விறகை
உண்டனைத்தும் நீறுக்கும் உண்மைபோல் - கொண்டுபுரி
கன்மங்கள் முற்றுமற ஞானக் கனலெரித்து
வன்மையற மாய்த்திடுமே மற்று. (௩௭)

**இந்த ஞானம் கர்ம சமாதி யோகங்களால்
சித்திபெற்றவனுக்குத் தானே உண்டாம் எனல்.**

*ஞானத்துக் கொப்ப நவையறுத்துத் தூய்மைசெயற்
கானபொருள் வேறிலையிவ் வம்புவியில் - ஊனமறு
யோகத்தாற் சித்திபெறும் உத்தமன்தா னுவதனை
மோகமறப் பெற்றிடுவன் முன்.* (௩௮)

*தானு - பிறருடைய உபதேசத்தா லல்லாமல்.*

**ஞானத்தைப் பெறுதற்கு நிச்சயமான மார்க்கம் இன்னதெனல்.**

*சிரத்தையனுய்த் தற்பரனுய் இந்தியத்தைச் செற்றோன்
வரத்துயரும் ஞானமதை வாய்க்கும் - உரத்ததனைப்
பெற்றதன்பின் சில்பகலிற் பேரான சாந்தியையும்
உற்றிடுமே உண்மை உணர்.* (௩௯)

*பேரானசாந்தி - மோட்சம்.*

**இதில் சந்தேகம் வேண்டாம், சந்தேகம்
கொடியபாவம் ஆகும் எனல்.**

*ஞானமிலான் ஆசிரியன் நல்குமுப தேசத்தில்
ஆனதொரு பற்றில்லான் ஐயுறுவான் - தானழியும்
ஐயுற்றோற் கிவ்வுலகும் ஆனுலகும் ஆரின்பும்
செய்யவிவை ஒன்றுமிலை தேர்.* (௪0)

*ஆனுலகு - தேவலோகம். செய்ய - மேன்மையாகிய.*

**ஆத்மஞானிக்குக் கர்மபந்தம் இல்லையெனல்.**

*யோகத்தாற் கன்மம் ஒழித்துத்தன் ஐயமெலாம்
விகப் பிளந்தரிய மெய்யறிவால் - மோகமற
என்றும்விழிப் புற்றிருக்கும் ஏதமிலா னைக்கன்மம்
ஒன்றிப பிணித்தலிலை ஓர்.* (௪௧)

*யோகம் - பிரமஞானம்.*

ஆதலினால் சந்தேகத்தை ஞானமென்னும் வாளால் வெட்டி யெறிந்து கர்மயோகத்தைக் கைக்கொள்கவெனல்.

*ஆகலினால் ஞானமெனும் வாளால் அகத்துவளர்*
*மோகமதால் மூள்ஐயம் முற்றுமற - ஓகையுடன்*
*சேதித்து யோகத்தில் தீரா தமர்ந்திடுக*
*மோதித் தெழுந்திடுக முன்,* (சஉ)

ஞானயோகம் முற்றிற்று.



ஐந்தாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.



1. ஞானமில்லாத சந்யாசம், கர்மயோகம் ஆகிய இவ்விரண்டுள் எது சிரேஷ்டமென்று அருச்சுனன் கேட்டல்.

2-3. ஞானரகித சந்யாசத்தை விடக் கர்மயோகமே உயர்ந்ததென்று பகவான் கூறல்.

4-5. ஞானசகித சந்யாசத்துக்கும், கர்மயோகத்துக்கும், பலன் ஒன்றேயெனல்.

6. கர்மயோகத்தாலன்றிப் பரமார்த்த ஞான நிஷ்டையாகிய சந்யாசத்தைப் பெறுதல் அரிதெனல்.

7-10. லோகோபகாரமாகக் கர்மங்களைச் செய்யினும் ஞானிக்குக் கர்மபலன் சாராதெனல.

11-12. கர்மயோகிக்குக் கர்மபலன் சாராமைக்கு இரண்டு காரணம் கூறுதல்.

13. ஞானிக்குச் சுகமாக தேகஸ்திதி இருக்குமெனல்.

14-15. பிரபுவான ஆத்மாவுக்குக் கர்த்திருத்துவாதிகள் இல்லையென்றும், ஸ்வபாவத்துக்கே அவை உரியவையென்றும் சொல்லுதல்.

16-17. ஞானிகளுக்கு ஞானத்தினால் ப்ரஹ்மப்ராப்தி சொல்லுதல்.

18. ஞானிகளுக்கு ப்ராஹ்மணாதிகளில் சமதர்சனம் சொல்லுதல்.

19. ஞானிகளுக்கு சமதர்சனத்வம் இருந்தபோதிலும் தோஷம் இல்லையெனல்.

20. ப்ரஹ்ம ஞானிக்கு ப்ரியாப்ரியம் இருந்தாலும் ராகத்வேஷம் இல்லையெனல்.

21. சத்தாதி விஷயங்களில் விமுகனான ப்ரஹ்ம ஞானிக்கு அக்ஷயசுகம் உண்டாமெனல்.

22. விஷயங்களில் இருந்து இந்த்ரியங்களை மீட்பதற்குக் காரணம் கூறுதல்.

23. சரீர த்யாகத்துக்குமுன் காமக்ரோதங்களால் உண்டாகும் வேகத்தைப் பொறுப்பவனுக்கு யுக்தத்வமும சுகமும் கூறுதல்.

24. - 26 உட்சுகத்தோடிருப்பவனுக்குப் ப்ரஹ்ம ப்ராப்தி கூறுதல்.

27. - 29 தியானயோகத்தைச் சுருக்கமாகச் சொல்லுதல்.



# ஐந்தாம் அத்தியாயம்.

## கர்மசந்யாச யோகம்.

### காப்பு.

பங்கயக்கண் மால்தன்னைப் பாடிக் துதிப்பார்க்கும்
கொங்கலரால் சூடிக் குறிப்பார்க்கும் - சங்கையற
நிச்சலமாம் ஞானத்தால் நேர்ந்து நினைப்பார்க்கும்
அச்சமறுத் தீயும் அடி.

குறிப்பார்க்கு - கருதிப்பூசிப்பவர்க்கு.

### பாயிரம்.

இச்சையறு கன்மத்தின் ஏற்றம் தனைப்புகன்று
எச்செயலை யுந்துறந்த ஞானியியல் - மெய்சியவன்
தானடையும் ஒன்பயனும் தன்னாளியாற் சாற்றுவான்
தேனடையும் பைந்துளவன் தேர்ந்து.

இச்சையறு கன்மம் - பயனில் ஆசைவையாமல் ஈசுவர ப்ரீதியாகச் செய்யும் கன்மம்.

---

### நூல்.

**கர்மசந்யாசம் கர்மயோகம் என்னும் இரண்டுள் உத்தமமானது எதுவெனல்.**

கன்மத்தைக் கைவிடலைக் கற்பித்து மீளவும்நீ
கன்மத்தைச் செய்தலையும் கற்பித்தாய் - பின்னும்இவை
தம்முட் சிறந்ததெது சங்கையற நிச்சயித்துச்
செம்மலே நீயெனக்குத் தேற்று. (க)

இரண்டுக்கும் பயன் ஒன்றேயாயினும் ஞானமில்லாத கர்மசந்யாசத்திலும் கர்மத்தைச் செய்தலே மேலான தெனல்.

துறந்திட்டும் கன்மத்தைச் செய்திட்டும் தூயோய்
சிறந்தவொரு நன்மையினைச் செய்யும் - அறிந்திடுவாய்
ஆயினும்நற் கன்மத்தை ஆற்றுதலே கைவிடலிற்
சேயனையாய் மேன்மை நெறி. (உ)

இவையிரண்டும் ஞானமுண்டாதற்குக் காரணமாதலால் நன்மையைச் செய்யும், அதாவது முக்தியைக் கொடுக்கும் என்றபடி.

ஏனெனில் இஷ்டாநிஷ்டங்களை விட்ட கர்மயோகி கர்மங்களைச் செய்யினும் அவனுக்குக் கர்மபந்தம் இல்லை யெனல்.

விருப்புவெறுப பில்லாதான் மேவிவினை செய்தும்
இருப்பினும்நித் தந்துறவி யேயாம் - வரைப்புயத்தாய்
தொந்தங்கள் அற்றான் எளிது சொலும்கரும
பந்தத்தி னின்றொழிவான் பார். (௩)

தொந்தங்கள் - விருப்பு வெறுப்பு முதலான இருமைகள்.

கர்மசந்யாசமும் கர்மயோகமும் முக்தியாகிய ஒரேபயனைத் தருமெனல்.

சாங்கியமும் யோகமுமு வேறென்பார் தாம்சிறுவர்
ஆங்கதனைக் கூறுரே ஆரறிஞர் - ஈங்கிவற்றுள்
ஒன்றையெனும் நன்று உறக்கொள்வோன் ஓதிரண்டால்
துன்றுபயன் துய்ப்பன் துணி. (௪)

சாங்கியம் - ஞானத்தோடு கூடிய கர்மசந்யாசம். யோகம் - சமத்வ புத்தியோடு கூடிய கர்மயோகம். உறக்கொள்வோன் - அநுஷ்டிப்பவன். துய்ப்பன் - அநுபவிப்பன்.

ஞானிகள் அடையும் மோக்ஷத்தை யோகிகளும் அடைவாரெனல்.

*சாங்கியர்கள் சாருநிலை தன்னையுயர் யோகியரும்*
*பாங்குடனே பெற்றிடுவர் பாராய்நீ - சாங்கியமும்*
*யோகமுமொன் றேயென்னிவ் வுண்மைதனைக் காண்பவனே*
*வாகுடனே காண்பானும் மற்று.* (ரு)

*வாகுடனே - சரியாக: விபரீதமற.*

யோகமார்க்கத்தால் அல்லாமல் சந்யாசத்தைப்
பெறுவது அரிதெனல்.

*யோகத்தால் அல்லாற் றுறவதைவே றோர்வகையால்*
*வாகையணி தோளாய் மருவரிதே - யோகத்தோ*
*டொன்றுமுயர் மாமுனிவன் ஒப்பில்துற வொல்லையினிற்*
*சென்றடைவன் உண்மையிது தேர்.* (சு)

*முனிவன் - பகவானை இடைவிடாமல் நினைந்துகொண் டிருப்பவன்.*

கர்மயோகி கர்மங்களைச் செய்யினும் பந்தமடையா னெனல்.

*யோகத்தோ டுற்றுனுய் உட்பேய்மை உள்ளானுய்த்*
*தேகத்தோ டைம்புலனைச செற்றடக்கி - மோகமற*
*எவ்வுயிரின் ஆன்மாவாத் தன்னதனை எண்ணுபவன்*
*செய்வினையாற் பநதமுறுன் தேர்.* (எ)

*தன்னதனை - தன் ஆத்மாவை.*

ஞானியானவன் தானெதைச் செய்யினும் என்றும்
செய்யவில்லையேன் றெண்ணவேண்டு மெனல்.

*காணுகினும் கேட்டிடினும் கைதொடினும் உண்ணுகினும்*
*பேணிமோப் பானெனினும் பின்செலினும் - மாணச்*
*சயனித் துயிர்ப்பினுமெய் தானறிந்தோன் வேண்டும்*
*செயலிலன்யான் என்றுகொளல் தேர்ந்து.* (அ)

*கொளல்வேண்டும் என்று கூட்டுக. மெய்தானறிந்தோன்-ஆத்மதத்வத்தை அறிந்தஞானி.*

இதுவுமது.

பண்பினொடு பேசுகினும் பற்றுகினும் விட்டிடினும்
கண்விழிக்கி னுங்கண்ணைக் கட்டுகினும் - நண்ணியபல்
இந்தியங்கள் தத்தம் விடயந் தியங்குமெனச்
சிந்தைகொளல் வேண்டும் தெரி. (க)

கட்டுகினும் - மூடினும்.

பலாபேக்ஷையை விட்டுக் கர்மங்களைப் பண்ணுகின்ற கர்மயோகி பாவமடையா னெனல்.

உற்றசெயல் முற்றும் பிரமத்தின் உள்வைத்துப
பற்றும் பயன்துறந்து பண்ணுபவன் - சுற்றுமநிறை
தண்ணீரி னல்லணையாத் தாமரைபோற் சார்பவத்தால்
நண்ணுனோர் மாசுமென நாடு. (க0)

பிரமத்தில் வைத்தலாவது - வேலைக்காரன் யஜமானனுக்காகச் செய்வதுபோலத் தான் ஈசுவரனுக்காகச் செய்வதாகக்கருதல். தாமரைபோல் - தாமரையிலை போல.

கர்மயோகிகள் அகங்காரத்தைவிட்டு ஆத்மசுத்திக்காகக் கர்மங்களைச் செய்வார்கள் எனல்.

காயத்தால் நன்மனத்தாற் புத்தியினாற் கண்ணுமொரு
நேயமுமில் இந்தியத்தால் நீள்வினைகள் - மேய
பயனொழித்துப் பண்ணுவர்காண் பற்றியதம் சிந்தை
மயலொழிக்க மாயோகர் வாய்த்து. (கக)

யோகர் - கர்மயோகிகள். 'நேயமுமில்' என்பதனை காயமுதலிய ஒவ்வொரு பெயரோடும் அடையாகக்கூட்டுக.

**நிஷ்காம யோகி மோக்ஷத்தைப்பெறுவன்; பலனை இச்சிப்பவன் பந்தத்தில் இருப்பன் எனல்.**

*நிலையான யோகியவன் நேர்பயனை நீத்துத்*
*தலையான நிட்டையினாற் சாரும் - உலகில்பதம்*
*பெற்றிருப்பன் பெட்பாற் பயன்விழையும் பேதையுறு*
*துற்றிருப்பன் பந்தத்தி னுள்.* (கஉ)

*நிட்டையினால் - மனம் பரிசுத்தமாதல், ஞானமடைதல், சகல கர்மங்களையும் துறத்தல், ஞானத்திலே நிலைநிற்றல் என்னும் முறையினால். பெட்பு-ஆசை : கர்மம். பந்தத்தினுள் உற்றிருப்பன் - கர்மத்தால் கட்டப்படுகிறான்.*

**ஞானியோ சகல கர்மங்களையும் விட்டுச் சுகமாயிருப்பனெனல்.**

*கன்மங்கள் முற்றும் கருத்தாற் றுறந்துசெயல்*
*நன்மையுறச் செய்வித்தல் நாடாது - வன்மனமும*
*ஐம்புலனும் செற்றடக்கும் ஆடவன் இன்புறுவன்*
*ஒன்பதுவா யிற்புரத்தின் உள்.* (கங)

*ஒன்பதுவாயிற்புரம் - நவத்வாரங்களையுடைய தேகம்.*

**கர்த்திருத்வாதிகள் ஆத்மாவால் உண்டாதல் இல்லை; ஸ்வபாவத்தால் உண்டாகின்றன எனல்.**

*உற்றோர்செயல் செய்வதுவும் ஒதுபொருளும்பயனில்*
*பற்றும் படைத்திலனே பாரோர்க்கு - மற்றுடற்கண்*
*ஆளுமிறை யாஅம்முரும் ஆன்மா இவையனைத்தும*
*மூளும் இயற்கையினால் முன்.* (கச)

*செயல் செய்வது - கர்த்திருத்வம்; கர்த்திருத்வத்தைப் படைத்தலாவது நீ இதனைச் செய்யென்று ஒருவனைத் தூண்டுதல். இயற்கை - பிரகிருதி அல்லது மாயை.*

### பாபபுண்யங்களை ஈசுவரன் ஏற்றுக்கொள்வதில்லையெனல்.

செய்யுமொரு நல்வினையும் தீவினையும் தான்கொள்ளான்
ஐயஉலகெங்கும்நிறை அண்ணலவன் - வெய்ய
அவித்தைநனி மூடுதலால் ஆரறிவு குன்றிப
பவித்திடுமே மோகமெனப் பார். (௧௫)

ஐய - அருச்சுன. மோகம் - ஈசுவரன் கொள்கின்றானென்னும் மயக்கம். அவித்தை நனிமூடுதலால் - அஜ்ஞானம் ஞானத்தை மூடுதலாலே.

### ஆத்மஞானத்தால் அஜ்ஞானம் நீங்கப் பெற்றவர்க்கு அந்த ஞானம் பிரமத்தை விளக்குமெனல்.

ஆரறிவால் யாவர்க் கழிவுறுமோ அஞ்ஞானம்
தேருமவர் தங்கட்குத் தெள்ளறிவு - பேரொளிசேர்
சூரியனைப் போலுதித்துத் தூய பரமபொருளை
நேர விளக்கிடுமே நின்று. (௧௬)

ஆரறிவு - ஆத்ம ஞானம்; ஆத்மஞானம் முதிர்ந்து அதனை மூடியிருந்த அஜ்ஞானத்தை (பிரபஞ்ச ஞானத்தை) அழித்த காலத்தில்: மெய்யறிவு பொய்யறிவை நீக்கியபோது.

### அந்த ஞானத்தால் பாபம்நீங்கி முக்தி அடைவாரெனல்.

புந்தியதில் வைத்துப் பொருளதை ஆன்மாவாய்ச்
சந்ததமும் நிட்டையதிற் சாந்ததையே - முந்தடைய
நாடும புகலிடமாய் ஞானத்தாற் பாவம்தீர்
பீடுடையார் மீளாரே பின்பு. (௧௭)

அது-பிரமம். அது ஆன்மாவாய் - பிரமமும் தாமும் ஒன்றென உணர்ந்து. நிட்டை - நிலை. புகலிடமாய் - புகலிடமாகக் கொண்டு. பீடுடையார் - பெருமை பெற்ற யதிகள். மீளார் - திரும்பவும் சம்சாரத்தை அடையார்.

**ஆத்ம ஞானிகள் எல்லாப் பொருள்களிலும் பிரமத்தைக் காண்பாரெனல்.**

*அறிவும் ஒழுக்கமுமார் அந்தணனில் ஆனில்*
*தறுகட் களிற்றிடைநாய் தன்பால் - சிறுபுலையன்*
*கண்ணுமெங்கும் ஒன்றனையே காண்பவரே காசினியில்*
*நண்ணரிய ஞானியர்நீ நாடு.* (கஅ)

கண்ணும் எங்கும் - ஆகிய எல்லாப் பொருள்களிலும் சமானமாக. ஒன்றனையே - பிரமத்தையே.

**அந்த ஞானிகள் இவ்வுலகிலேயே பிரமத்தோடு ஐக்கியமாவரெனல்.**

*சாமியத்தில் யாவர்மனம் தங்கும்நிலை யாஅவரிந்*
*நேமியினே வெம்பிறப்பை நீக்குவரால் - தோமிலதாய்*
*எங்கும் ஒருபோல் இருத்தலினாலேபிரமம்*
*தங்குவர்காண் மற்றதனுட் சார்ந்து.* (கக)

சாமியத்தில் - சகல பூதங்களிலும் பிரமத்தைக் காணலாகிய சமநிலையிலே. பிரமம் இருத்தலினாலே நீக்குவர் என்று முடிக்க.

**பிரமஞானிகள் இன்பத்தால் மகிழ்தலும் துன்பத்தால் வருந்தலும் முடியாதெனல்.**

*நிலையான புந்தியனாய் நீங்கினனாய் மோகம்*
*தலையாம் பிரமத்திற் றங்கிக் - குலைவிலதை*
*நன்கறிந்தான் நண்ணான் உவப்பென்றும் நன்மையினும்*
*புன்கணுறான் தீமையினும் போந்து.* (உ0)

உவப்பு - மகிழ்ச்சி. புன்கண் - வருத்தம்.

விஷயங்களைவிட்டுப் பிரமத்தைத் தியானிப்பவன் பேரின்பம் அடைவானெனல்.

வெளிப்பொருளிற் பற்றதனை விட்டொழித்தே அன்னான்
களிப்புளத்தில் உள்ளதனைக் காண்பன் - இளைப்பில்உளம்
ஒண்பிரமத் தேயமைந்தவ் வுத்தமன்தான் உற்றிடுவான்
பண்புயர்பேர் இன்பமெனப் பார். (உக)

அன்னான் - அந்த ஆத்மஞானியானவன். உளம் பிரமத்தே யமைந்து - பிரமசமாதியிலே மனம் அமைந்தவனாய்.

விஷய சுகங்கள் துன்பத்துக்கேதுவாய் அநித்தியமாதலின் பிரமஞானி அவற்றால் சந்தோஷியானெனல்.

பரிசத்தால் உற்றுவரும் இன்பங்கள் பார்த்த
அரியதுயர்க் கேதுவவை ஆமால் - திரமருவா
ஆதியந்தம் உள்ளனவாம் ஆதலினால் அன்னவற்றால்
மோதமுறான் மூதறிஞன் முன். (உஉ)

பரிசத்தால் - இந்திரியங்கள் தத்தம் விஷயங்களோடு கூடுதலாலே.

காம க்ரோதங்களால் உண்டாகும் மனத்துடிப்பைப் பொறுப்பவனே யோகியும் சுகியும் எனல்.

ஈங்கிருக்கும் போதே எவன்வெகுளி ஆசையினால்
ஓங்குமொரு வேகத்தை உற்றவுடல் - நீங்குமுனம்
ஓர்த்திருக்க வல்லானோ அன்னானே யோகியும
சீர்த்தசுக வானுமெனத் தேர். (உ௩)

உடல் நீங்குமுனம் - சாகும்வரையில். ஓர்த்திருக்க - பொறுத்திருக்க.

### ஆத்மாவில் தானே சுகமும் லீலையும் ஒளியும் பெறுகின்றவர் பிரமானந்தத்தை அடைவானெனல்.

*தன்னுள்ளே இன்புடையான் தன்னுள்ளிலே யாடலுளான்*
*தன்னுள்ளே தானே ஒளியுடையான் - என்றோனே*
*அன்னவொரு யோகி அடைகுவனே ஆனந்தம்*
*மன்னுபிரமந்தானாய் மற்று.* (உ௪)

*தன்னுள்ளே - ஆத்மாவினிடத்து. ஆநந்தம் - மோக்ஷம்.*

### இருஷிகள் அந்த பிரமானந்தத்தை அடைவரெனல்.

*தீவினைகள் அற்றுச் செறிகருமஐயந்தவிர்ந்து*
*மேவுமனம் இந்தியத்தை வென்றுலகில் - யாவுயிர்க்கும்*
*நன்மையையே நாடும் நலனுடைய ஆரிடர்தாம்*
*துன்னுவர்நிர் வாணம் துணி.* (உ௫)

*மனம் இந்தியத்தை - மனத்தையும் இந்திரியங்களையும். ஆரிடர் - ருஷிகள்.*

### ஆத்மஞானியாகிய சந்யாசிக்கு இம்மையிலும் மறுமையிலும் பிரமநிர்வாணம் உண்டாமெனல்.

*வெய்யவொரு காம வெகுளிகளின் விடுற்று*
*மையல்அறுத் துள்ளம் வசம்செய்து - பொய்யொழிய*
*ஆன்மாவை நெஞ்ஞாத் தறிந்துறவிக் கானந்தம்*
*வான்மீதும் இங்கும் வரும்.* (உ௬)

### விஷயங்களை நீக்கி நிஷ்டைசெய்பவர் மோக்ஷத்தை அடைவனெனல்.

*பொருவிடயம் முற்றும் புறத்துறவே வைத்துப்*
*புருவநடு நிற்கவிழி பூட்டி - இருவளியும்*
*ஒத்துழல நாசியின்கண் உய்த்திடுவான் அஞ்ஞான்றே*
*முத்திதனைப் பெற்றோனும் முன்.* (உ௭)

விடயம் - வெளியில் உள்ள விஷயங்களை,

### இந்த்ரிய நிக்ரஹம் செய்து காம க்ரோதங்களை விட்ட சந்யாசி முக்தியைப் பெற்றவன் ஆவனெனல்.

*புலனைந்தை உள்ளத்தைப் புந்திதனைச் செற்று*
*நலிபயம்வெங் கோபம்அவா நன்று - திலகுமொரு*
*விடுதலை நாடியுறும் வித்தகன்தான் எப்பொழுதும்*
*கூடினன்மா முத்தியெனக் கொள்.* (உஅ)

### அந்த சந்யாசி என்னை அறிந்தபின் முக்தியடைவான் எனல்.

*யாகம் தவம்இவற்றைத் துய்ப்பவனை எப்புவிக்கும்*
*ஏகனெனும் ஈசனை எவ்வுயிர்க்கும் - ஓகையுடன்*
*இன்பளிக்கும் நண்பனை என்னையறிந் தன்னான்தன்*
*துன்பொழிந்து முத்தி துனும்.* (உகூ)

*அன்னான் - இவ்வாறு ஒருநிலைப்பட்டுச் சமாதி கூடிய மனத்தினன்.*

கர்மசந்யாசயோகம் முற்றிற்று.



ஆறும் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1-2. நிஷ்காம கர்மயோகமானது சித்வகுணத்தைச் சுத்தப்படுத்தலாலே தியானயோகத்தை அடைதற்குச் சாதனமாமெனல்.

3. தியானயோகத்தில் இருத்தற்குச் சாமர்த்திய மில்லாதவனுக்கு நிஷ்காம கர்மயோகமும், சாமர்த்தியம் உள்ளவனுக்கு சர்வகர்மசந்யாசமும் கூறுதல்.

4-9. தியானயோகாரூடலக்ஷணம் சொல்லுதல்.

10-32. விஸ்தாரமாக ஆஸன ஆஹார விகாராதி நியமங்களைச் சொல்லி, தியானயோகத்தின் சாபல்யத்தைச் சொல்லுதல்.

33-34. சொல்லப்பட்ட தியானயோகம் மனம் சஞ்சலமடைதலால் செய்தல் முடியாதேயென்று அருச்சுனன் சொல்லல்.

35. அப்யாஸ வைராக்யத்தால் மனோநிக்ரஹம் செய்தால் தியானயோகம் சித்திக்குமெனல்.

36. நிச்சல சித்தமில்லாதவனுக்கு தியானயோகம் செய்யமுடியாதெனல்.

37-39. தியானயோகத்தில் பிரவர்த்தித்தவன் யோக சித்தி அடையுமுன் இறந்துபோனால் அவனுக்கு என்ன கதி யெனல்.

40-45. யோகப்ரஷ்டனுக்கு விநாசமில்லையென்று சொல்லி உத்தமலோகம் கிடைக்குமெனல்.

46. தியானயோகியானவன் எல்லாரிலும் உயர்ந்தவன் என்று கூறி அருச்சுனனை அந்தயோகத்தில் செலுத்துதல்.

47. ருத்ராதித்யாதி த்யானபரர்களைக் காட்டிலும் வாசுதேவ த்யானபரருக்குப் பெருமைகூறுதல்.



# ஆறும் அத்தியாயம்.

# தியானயோகம்.

## காப்பு.

தாய்முலைப்பால் உண்ணத் தருதல்போற் சர்ப்பனைசெய்
பேய்முலைப்பால் உண்டுயிர்கொள் பிள்ளையினை-நேயமொடும்
உன்னுநாள் உள்ளம் உருகியவன் ஒண்புகழைப
பன்னுநாள் வீணை படும்.

## பாயிரம்.

ஐம்புலனும் உள்ளும் அடக்கிநிறுத் தான்மாவை
இன்பமுற எண்ணியுறும் யோகவியல் - உம்பர்
பெருமான் உரைத்திடுவான் பேரருளால் ஈங்கு
வருமா றருச்சுனற்கு வாய்த்து.

## நூல்.

**பலாபேக்ஷையில்லாமல் விதித்தகர்மங்களைச் செய்பவன் சந்நியாசியும் யோகியும் ஆவனெனல்.**

செயற்குரிய கன்மத்தைச் சேர்பயனைச் சாரா
தியற்றுபவன் நற்றுறவி யோகி - நயப்பொடுநீ
ஓம்பானும் கன்மம் உஞற்றானும் அன்னவராம்
மேம்பாடு தானடையான் மிக்கு. (க)

யோகி - நிலையான மனத்தையுடையவன். உஞற்றல் - செய்தல். அன்னவராம் மேம்பாடு - துறவியும் யோகியும் ஆகும் பெருமையை.

**பலாபேக்ஷையில்லாத யோகமே சந்நியாசம்,**
**பலத்தை இச்சிப்பவன் மனம் உறுதிப்படாதெனல்.**

என்னதனை மெய்த்துறவென் றிங்கிசைப்ப நான்மறைகள்
அன்னதையே யோகமென ஆய்ந்தறிதி - முன்னுமனச்
சங்கற்பத் தைத்துறவான் தானாகான் ஓர்பொழுதும்
பங்கமிலா யோகியெனப் பார். (௨)

யோகம் - கர்மயோகம். சங்கற்பம் - பயனைப்பற்றிய எண்ணம். யோகி-அசைவற்ற மனமுடையவன். பயனைத் துறத்தலாலே யோகம் சாங்கியத்தோ டொப்பாயிற்று.

**கர்மயோகமானது தியான யோகத்துக்குக் கருவியாமெனல்.**

யோகநிலை உற்றிருப்ப உள்விழையும் ஓர்முனிக்கு
மோகமறு கன்மும் மொழிகருவி - யோகநிலை
உற்றானுக் கொன்றும் உறற்று தொழிந்திடலே
நற்கருவி யாமென்ப நாடு. (௩)

யோகநிலை...விழையும் - தியானயோகத்தை இன்னமும் கூடாத.

**எல்லா நினைப்பும் விட்டு விஷயங்களிலும் கர்மங்களிலும்**
**பற்றொழிந்தவனே யோகாரூடனெனல்.**

என்றொருவன் எண்ணங்கள் எல்லாம் விடுத்தகற்றி
ஒன்றும்விட யப்பற் றொழிந்தானைத் - துன்றுமொரு
கன்மத்தும் உள்ளக் கருத்திலனே அன்றவனைத்
திண்மையில்ஆ ரூடனெனத் தேர்ந்து. (௪)

**ஒருவன் தன்னைத் தானே உயர்த்திக்கொள்ள வேண்டுமெனல்.**

தன்னாலே தன்னை உயர்த்திடுக தன்னிலைபிற்
றன்னை இழித்தல் தகவன்றே - முன்னில்
தனக்கொருவன் தானே உறவாவன் ஆங்கே
தனக்கொருவன் தானே பகை. (௫)

தன்னை உயர்த்திடுக - சம்சார சமுத்திரத்தில் மூழ்கிக்கிடக்கின்ற தன்னைத் தானே தூக்கிக் கரையேற்றிக்கொள்ள வேண்டும். இழித்தல் - அதில் மூழ்கிப்போகச் செய்தல். ஆங்கே - அவ்வாறே.

### தேஹேந்த்ரியங்களை அடக்கினவன் தனக்குத் தான் உறவும் அடக்காதவன் பகையுமாவனெனல்.

*தன்னாற் றனைவெல் தகையாற்குத் தானுறவாம்*
*தன்னாற் றனைவெல் தகையில்லாற் - கெந்நாளும்*
*தானே பகைபோற் றனக்கிடர்தா னேஇழைப்பன்*
*தேனேயும் தாராய் தெரி.* (சு)

*தனை* - தேஹேந்த்ரியங்களை. *பகைபோல்* - வேறாய் வெளியி லுள்ள பகைவன்போல.

### தேஹேந்த்ரியங்களை அடக்கிச் சாந்தமுடைந்தவனிடத்தில் பிரமம் பிரகாசிக்குமெனல்.

*தன்னடக்கிச் சாந்தம் தழுவுமவ னிற்பிரமம்*
*மன்னியுறும் அன்னோன் மருவுகுளிர் - பன்னியவெப்*
*பின்பதுன்பம் மானவ மானமெனும் இன்னவற்றால்*
*துன்னும்நிலை மாறான் துணி.* (எ)

*பிரமம் மன்னியுறும்* - அவ்வாறிருத்தலே அவனது உள்ளபடி யான ஆத்ம ஸ்வரூபமாகும்.

### எப்படிப்பட்டவன் யுக்தன் எனப்படுவானெனல்.

*விஞ்ஞான ஞானத்தால் மேவும்நிறை வெய்தினனாய்*
*அஞ்ஞானத் துட்டுளக்கம் ஆரானாய் - எஞ்ஞான்றும்*
*ஐம்புலன்வென் றோண்பொன்மண் கல்நிகரென் றோர்ந்துநிலை*
*கம்பமிலான் யுக்தனெனக் காண்.* (அ)

*ஞானம்* - சாஸ்திரத்தால் போதிக்கப்பட்ட அறிவு. *விஞ்ஞானம்* - சாஸ்திரத்தால் போதிக்கப்பட்டதை அநுபவத்தால் அறியும் அறிவு. *நிறைவு*-திருப்தி. *யுக்தன்* - கலங்கா நிலையுடையவன்; சமாதி கூடியவன்.

### யாவரிடத்தும் சமபுத்தி யுள்ளவன் யோகாரூடரில் உத்தமன் எனல்.

நன்மனத்தர் நட்பாளர் நள்ளார் உதாசீனர்
பன்னும்நடு வோர்வெறுப்போர் பற்றுதமர் - வன்மமறு
சற்புருடர் பாவியர்பால் தங்குமனம் ஒன்றுவான்
ஒப்பரிய மேலோனென் றுன். (௯)

உதாஸீனர் - ஸாதகபாதகம் செய்யாமல் ஒதுங்கியிருப்பவர். நடுவோர் - நடுநிலையிலே நிற்பவர். மனம் ஒன்றுவான் - தாரதம்யத்தை விசாரியாதவன். மேலோன் - யோகத்தைக்கூடிய அனைவரினும் உயர்ந்தவன்.

### யோகத்தை அப்யாஸிக்கவேண்டிய ஒழுங்குகளைக் கூறத்தொடங்கி த்யானயோகி மனத்தை ஒருநிலைப்படுத்த வேண்டுமெனல்.

சிந்தையையும் மெய்யினையும் செற்றடக்கி ஆசையறத்
தெந்தவுடை மைப்பொருளும் இல்லானாய்ப் - பந்தமொழித்
தேகாந்தத் தென்றும் தனியே இருந்துமனம்
யோகிநிலை யில்நிறுக்க உற்று. (௧0)

யோகி - தியானம் செய்பவன். ஏகாந்த... இருந்து: இதனால் தியானயோகத்துக்குத் துறவு இன்றியமையாதென்றதாம்.

### (பின்னிரண்டும் ஒருதொடர்.)
### இன்னவிதமாயிருந்து யோகம் செய்யவேண்டுமெனல்.

வேண்டும் உயர்ச்சியினும் தாழ்ச்சியினும் விஞ்சாது
நீண்டதொரு நின்மலமாம் நல்லிடத்தில் - பூண்டகுசை
மீதயினத் தாளை விரித்ததன்மீ தேயசையா
தேதமற வேயிருந்து தான். (௧௧)

வேண்டும் - போதுமான. அயினம் - மான்தோல். குசை - தருப்பை. பூண்ட - விரிக்கப்பட்ட.

ஆதனத்தே அன்போ டமர்ந்துமனம் ஐம்பொறியின்
ஓதுசெயல் உற்றொழித்தங் கோர்முனையில் - தீதுதவிர்
சிந்தையினை நன்கமைத்துச் சித்தசுத்தி பெற்றிடுமா
நந்தலில்யோ கம்புரிக நன்கு. (கஉ)

நந்தலில் - கேடில்லாத ; சிறந்த பயனைக் கொடுப்பதாகிய.

**தேஹத்தை இன்ன நிலையில் வைக்கவேண்டுமெனல்.**

காயமொடு சென்னி கழுத்திவைகள் ஒரொழுங்காச்
சாயலசை வின்றியுறத் தான்நிறுவி - மேய
திரநிலையிற் கண்ணிரண்டும் நாசிநுனி சேர
ஒருதிசையும் பாரா துற. (கங)

கண்ணிரண்டும் நாசி நுனியில் சேர்த்தலாவது, நாசி நுனியைப் பார்த்தல்போல வைத்துப் புறப்பொருள்களில் செல்லாமல் அகத்தில் பதியவைத்தல். உற - இருக்கக்கடவன்.

**மனத்தை ஒருவழிப் படுத்திய யோகி என்னையே பரமென்று தியானித்தல் வேண்டுமெனல்.**

அலைபா மனத்தனாய் அச்சமொழித் தானாய்த்
தலைபாய ஓர்பிரம சாரி - நிலையிலிருந்
துள்ளடக்கி என்றனையே யோர்ந்திருக்க யான்பரமென்
றெள்ளிதுணர்ந் தோவாதே ஊங்கு. (கச)

பிரமசாரி நிலையாவது, பிக்ஷான்னம் புசித்தல் குருவுக்குப் பணிவிடை செய்திருத்தல் முதலானவை.

**இவ்வாறு தியானிக்கும் யோகி பிரம நிர்வாணம் அடைவனெனல்.**

இன்னவிதம் உள்ளத்தை எப்போதும் ஓர்நிலையில்
துன்ன நிறுத்தினனாய்த் தூயமனம் - தன்னை
அடக்கியமா யோகி அடைவனே முத்தி
கடைத்தருமோர் சாந்திதனைக் காண். (கரு)

கடைத்தரும் - முடிவிலே கொடுப்பதாகிய.

### யோகம் செய்பவர் பேருணவு முதலியவற்றை நீக்கவேண்டுமெனல்.

*பேருணவு கொள்வாற்கும் பேருணவை முற்றொழிக்கும்*
*நீரவற்கும் நீடுதுயில் நேர்வாற்கும் - சேரும்*
*துயிலைத் துறப்பாற்கும் சொற்றதொரு யோகம்*
*பயிலப் படாதிது நீ பார்.* (௧௬)

### ஆஹாரம் முதலியவற்றை மிதமாகக் கொள்பவனுக்கே யோகம் சித்திக்குமெனல்.

*மிதமான ஊணும் விநோதமும் வேண்டும்*
*இதமான செய்கைகளும் இன்பம் - பதிதுயிலும்*
*தக்கபடிக் கண்விழிப்பும் கொள்ளுநற்குத் தான்யோகம்*
*துக்கதுயர் போக்கும் புரி.* (௧௭)

*மிதமான* - நூல்களில் விதிக்கப்பட்ட அளவினையுடையதான.

### யோகியானவன் கலங்கா நிலையுடைய யுக்தனாதல் எப்போதெனல்.

*எப்பொழுது சித்தம் இணக்கமுற் றன்மாவில்*
*நிற்பதுகாண் எப்பொழுது நேர்விடயத் - துற்பவிக்கும்*
*ஆசையொழி வுற்றிருப்பன் அப்பொழுதே யுக்தனெனப்*
*பேசிடுவர் மேலோர் பெரிது.* (௧௮)

*இணக்கமுற்று* - ஒருநிலைப்பட்டு.

### யோகியின் நிலைமைக்கு நிவாததீபம் திருஷ்டாந்தமெனல்.

*தன்வயமாய் உள்ளடங்கும் நெஞ்சந் தனைப்பெற்று*
*நன்மைதரும் யோகத்தை நண்ணுமொரு - நின்மலனும்*
*மாயோகி சித்தத்தை வாதமரு வாஇடத்து*
*மேயசுடர்க் கொப்பென்பர் மேல்.* (௧௯)

(பின்னுந் தொடர்.)
எப்போது ஒருவன் யோகநிலையில் இருப்பவனாகச் சொல்லப்படுவானெனில்.

என்றொருவன் இன்னெஞ்சம் யோகப் பயிற்சியினால்
ஒன்றியதன் உள்ளடங்கி உற்றிடுமோ - என்றொருவன்
ஆன்மாவை ஆன்மாவால் ஆர்வமுடன் நோக்கித்தன்
ஆன்மாவின் உட்களிப்பன் ஆங்கு. (உ0)

ஆன்மாவை ஆன்மாவால் நோக்கி ஆன்மாவில் களிப்பன் - பரம் சைதந்யத்தை சமாதியால் நிர்மலமாகிய அந்தக்கரணத்தால் கண்டு தன்னில் தானே ஆனந்திப்பானே ?

என்றொருவன் இந்தியங்கட் கெட்டாதாய்ப் புத்தியினால்
ஒன்றுமுடி வில்சுகத்தை ஓர்ந்திடுவான் - அன்றேகாண்
தற்பரத்தில் உள்ளம் நிலைத்தானாய்த் தத்துவத்தி
னிற்பிரியான் காணாய் நிலை. (உக)

தற்பரம் - பிரமம் ; தத்வம் - உண்மை.

என்னதனை மேவியபின் எய்தும்அதின் மேலாக
உன்னலனே வேறொன்றை ஓங்குமெதில் - துன்னி
நிலையாக நீள்துயரம் நேருகினும் நெஞ்சம்
சலியானே யோகமது தான். (உஉ)

என்னதனை - ஆத்மலாபத்தை. எதிலே - ஆத்ம உண்மையிலே. யோகம் அது தான் - அந் நிலைதான் யோகமாகும்.

எல்லா இடர்ப்புணர்ப்பும் நீங்குமிதை யோகமென
வல்லாய் அறிந்திடுதல் மாண்பாமால் - சொல்லும்
நிச்சயத்தோ டொன்றித் தளராத நெஞ்சத்தால்
நச்சியுறற் பாலதறி நன்கு. (உ௩)

இதை - கீழ்க்கூறிப் போந்த இந்த ஆத்மநிலையை. இடர்ப்புணர்ப்பினீங்கும் இதை - சுக துக்க சம்யோகத்தினின்றும் பிரிதலாகிய இதனை. இந்தப் பிரிதலை யோகம் (சேர்க்கை) என்றது விபரீத லக்ஷணை; மடையனைப் புத்திமான் என்றதுபோல.

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

**யோகியானவன் ஆசைகளை நீக்கி இந்திரியங்களை நிக்ரஹிக்கவேண்டுமெனல்.**

*சங்கற்பத் தாலே சனித்துவரு காமங்கள்*
*அங்கவற்றை முற்றும் அறவிட்டுத் - துங்கமுறும்*
*உள்ளத்தால் இந்தியத்தை ஓடாமல் எப்புறத்தும்*
*கள்ளமற வேயடக்கிக் கண்டு.* (௨௪)

**இவ்வாறு படிப்படியாக மனத்தை ஆத்மத்யானத்தில் நிறுத்தச் சாந்தமடையவேண்டுமெனல்.**

*நிலையான புத்தியினுல் மெல்லமெல்ல நேரும்*
*தலையான சாந்தத்தைச் சார்க - குலையாது*
*நன்மனத்தை ஆன்மாவில் நன்கு நிறுத்தொன்றும்*
*தன்மனத்துன் னுதொழிக தான்.* (௨௫)

ஒன்றும் உன்னுதொழிதலாவது-ஆத்மாவே ஸர்வமும் அதைத் தவிர வேறொன்றும் இல்லையென்று கருதுதல்.

**ஆத்ம த்யானத்தில் நின்று விலகும் மனத்தை அடிக்கடி மீட்கவேண்டுமெனல்.**

*அலையுமனம் எங்கெந்தக் காரணத்தால் ஆங்கு*
*நிலைமையற வேதிரியா நிற்கும் - பலவகையாம்*
*அந்தந்தக் காரணத்தின் மீட்டதனை ஆன்மாவில்*
*சந்ததமும் வைத்திடுக தான்.* (௨௬)

**இவ்வாறு பிரமத்யானத்தில் நிற்கும் யோகிக்குப் பேரானந்த முண்டாமெனல்.**

*சாந்த மனமும் தவிர்ந்த இராசதமும்*
*சேர்ந்துபிர மந்தானுய் நின்மலனுய் - ஏய்ந்தவொரு*
*யோகியிவன் தன்னையடுத் துற்றிடுமே உண்மையிது*
*மோகமறு பேரின்பம் முன்.* (௨௭)

பேரின்பம் உற்றிடும் என்று கூட்டுக.

**இந்த யோகி பிரம ஸ்பரிசத்தாலுண்டாகும் பேரானந்தத்தைப் பெறுவானெனல்.**

*இவ்விதத்தின் உள்ளத்தை எப்பொழுதும் பந்தித்து*
*வெவ்வினையின் வீடுமொரு யோகியிவன் - செவ்வியுடன்*
*அப்பிரம நற்பரிசம் ஆகுமுடி வில்சுகத்தைப்*
*பொற்பினுறு மேயெளிது போந்து.* (உஅ)

*வினையின் வீடும் - பாவத்தில் நீங்கிய. பிரம நற்பரிசம் - பிரமமாதல் பிரமம் தானே ஆய்ப் பேரானந்தத்தைப் பெறுவன்.*

**இந்த யோகி எல்லாவற்றிலும் தன்னையும் தன்னில் எல்லாவற்றையும் காண்பனெனல்.**

*யோகத்தோ டொன்றும் உளத்தனுய் எக்கண்ணும்*
*ஏகமாம் நோக்குடைய என்னுயரும் - யோகியிவன்*
*எப்பொருளும் துன்னும் தனையும்தன் உள் இலங்கும்*
*எப்பொருளை யுங்காண்பன் எய்த்து.* (உகூ)

*ஏகமாம் நோக்குடைய-ஒரே பார்வையையுடைய. எப்பொருளும் துன்னும் தனையும் - ஸர்வபூதங்களிலும் தங்கிய ஆத்மாவையும்.*

**எப்பொருளிலும் என்னையும், எப்பொருளையும் என்னிலும் காணும் யோகிக்கு நான் பிரத்யக்ஷனாவே னெனல்.**

*எவனென்னைக் கண்ணுறுமால் எப்பொருளின் கண்ணும்*
*எவனென்னில் எப்பொருளும் காணும் - அவன்எதிரில்*
*காணுது போதலிலன் கண்ணுமவன் என்விழிக்கும்*
*காணுது போதலிலன் காண்.* (௩௦)

*எங்கும் ஆத்மா ஒன்றுதானென்று காண்பவனுக்கு நான் பிரத்யக்ஷமாவேனெனல்.*

என்னைப் பூசிக்கும் யோகி எந்த நடக்கையில் இருப்பினும் என்னைவிட்டு நீங்கான் எனல்.

ஒன்றெனவே உட்கருதி யோகியெவன் எவ்வுயிரும்
நின்றவென்னை நேசித் திறைஞ்சுவனே - நன்றினவன்
எந்நிலையில் நின்றிடினும் என்னிடத்து நீங்காது
மன்னியுறும் ஈது மதி. (௩௧)

ஒன்றெனவே யுட்கருதி - ஆத்மா ஒன்றுதான் என்பதை நிச்சயமாகக்கொண்டு. எந் நிலையில் நின்றிடினும்-எவ்வாறு ஜீவிப்பினும்.

சுகதுக்கங்களைத் தன்னிடத்திற் போலவே பிறரிடத்தும் காண்கின்ற யோகி யாவரினும் உயர்ந்தவனெனல்.

தன்னுவமை கொண்டு சமமாக எவ்விடத்தும்
துன்னரிய இன்பமெனும் துன்பமெனும் - மன்னியுறக்
காண்கின்ற யோகியவன் காசினியில் மேலோனாய்
மாண்பின் மதிப்புறுவன் மற்று. (௩௨)

தன்னுவமைகொண்டு - காண்கின்ற தன்னையே திருஷ்டாந்தமாக வைத்துக்கொண்டு, அல்லது தனக்கு ஆதல்போலச் சகலமான பிராணிகளுக்கும் இன்பம் நலமானதென்றும் துன்பம் தீங்கானதென்றும் ஒப்ப நோக்குகின்ற.

மனம் எப்போதும் ஓடிக்கொண்டிருந்தலாலே தேவரீர் அருளிச்செய்த யோகநிலையில் எவ்வாறிருப்பேனென் றருச்சுனன் கேட்டல்.

ஒப்பவே நோக்குவதென் றோதியஇவ் யோகத்துக்
கெப்பொழுதும் உள்ளம்அலை வெய்திடலால் - எப்பில்
லிருப்பினருள் எந்தாய்கேள் மேவிநிலை கொள்ளும்
இருப்பதனைக் காண்கிலனே ஈங்கு. (௩௩)

### மனத்தை அடக்கல் காற்றையடக்கல்போலக் கடினமாதுமே யெனல்.

சஞ்சலத்த தாகித் தருவதுமாய் உட்கலக்கம்
செஞ்சஅடங் காதுவலி சேர்தலினால் - விஞ்சியெழு
காற்றடக்கல் போலக் கடிதென்றே கண்ணுவன்யான்
ஆற்றல்மனம் உள்ளடக்கல் ஆங்கு. (௩௪)

உட்கலக்கம் தருவதுமாய என்று மாற்றுக. செஞ்ச-சேர: ஒருநிலைப்பட.

### ஆயினும் அப்யாஸத்தாலும் வைராக்கியத்தாலும் இது ஸாதிக்கக்கூடுமெனல்.

உள்ளமிஃ துண்மையே ஓடியுறும் ஓர்நிலைமை
கொள்ளவெளி தன்றடக்கல் கூர்வேலாய் - விள்ளின்
பழக்கத்தா லும்நசையைப் பற்றறுத்த லாலும்
இழுக்கின் றடக்கிடலாம் ஈங்கு. (௩௫)

பழக்கம் - அப்யாஸம். நசையைப் பற்றறுத்தல் - ஆசையை முற்றும் நீக்குதல்: வைராக்கியம்.

### முயற்சியினால் மநோநிக்ரஹம் செய்பவனுக்கு இந்த யோகம் ஸாதிக்கலாகுமெனல்.

உள்ளம்அடங் கானுக்கு யோகம் உறலரிதே
உள்ளம் அடக்கியுலை யாமுயற்சி - உள்ளவற்கு
யோகமிது தக்க உபாயங்க ளாலரிது
மோகமறப் பெற்றிடலாம் முன். (௩௬)

### யோகப்ரஷ்டன் கதி யாதென்று அருச்சுனன் கேட்டல்.

நம்பிக்கை யுற்றுமதில் நன்முயற்சி இல்லானாய்
முன்பயிலும் யோகத்தில் முன்னுமுளம் - பின்பொருவிச்
சஞ்சலிக்கின் எக்கதியைச் சாரும் பயனிழந்து
கஞ்சமலர்க் கண்ணா கரை. (௩௭)

கரை - சொல்லு.

யோகப்ரஷ்டன் கர்மநெறியும் யோகநெறியும் இழந்து
கெட்டுப் போகானோ எனல்.

இருநெறியும் தானிழந்தங் கெய்துநிலை இல்லா
தருநெறியால் அப்பிரமத் தாரத் - தருமவுணர்வு
விட்டொழிந்தோன் விண்ணிற் சிதறுண்ட மேகம்போல்
கெட்டொழியா னோநீ கிளத்து. (௩௮)

இந்தச் சந்தேகத்தை நீக்கியருள வேண்டுமெனல்.

ஐயமிது முற்றும் அகற்றியருள் வாயடியேன்
மையலற மாற்றுதற்கு மாயோனே - செய்யாள்
மணவாள நின்னல்லால் மற்றொருநரைக் காணேன்
பிணியகலு மாறெனக்குப் பேசு. (௩௯)

அவனுக்கு யாதும் கேடுதியில்லையென்று பகவான் கூறுதல்.

அன்னவனுக் கிம்மையினும் அம்மையினும் இலையழி
வுன்னியொரு நற்கருமம் உற்றியற்றும - பின்னமறு
செய்கையுளார்க கெப்பகலும் தீமைதரு துர்க்கதியொன்
றெய்தலிலை என்றே உணர். (௪0)

அவன் புண்யலோகங்களை யடைந்து சுகம்பெற்றுப்
பின்பு நற்குலத்தில் பிறப்பானெனல்.

புண்ணியர்கள் சேரும் புவனங்க ளைப்பொருந்தி
எண்ணரிய காலமவண் இன்புற்று - மண்ணிடைப்பின்
நல்லொழுக்கம் உள்ள நவைதீர் செழுங்குலத்திற்
சொல்லுமவன் தோன்றும் துணி. (௪௧)

செழுங்குலம் - செல்வர்குலம்.

அல்லது அவன் அறிவு முதிர்ந்த யோகியர் குலத்தில் பிறப்பானெனல்.

அல்லதுயர் ஞானம் அடைதருமா யோகியர்தம்
மல்லற் பெருங்குலத்தில் வந்துதிக்கும் - தொல்லுலகில்
இப்பரிசின் ஓர்பிறவி எய்தலரி தென்றும்என
மற்பொருதோ ளாய்நீ மதி. (௪௨)

முற்பிறப்பில் பெற்றஞானத்தைத் திரும்பவும் பெற்றுப் பின்னும் முயல்வானெனல்.

அப்பிறப்பில் அன்னோன் அடைகிற்பன் ஆருடலால்
முற்பிறப்பிற் பெற்றவுயர் மோகமறு - துப்புரவார்
புத்திப் புணர்ப்பதனை அப்புணர்ப்பால் முன்னையினும்
சித்திபெற நன்குழைப்பன் தேர். (௪௩)

புத்திப்புணர்ப்பு - ஞானம். புத்திப்புணர்ப்பை அடைகிற்பன் என்று கூட்டுக. சித்திபெற-மோக்ஷத்தையடைய.

அவன் யோகத்தில் செலுத்தப்பட்டுக் கர்மபந்தத்தினின்று நீங்குவானெனல்.

ஓதுமவன் முற்பிறப்பில் உற்ற முயற்சியினால்
ஏதமறு யோகத்தில் ஈர்ப்புற்றுத - தீதிலொரு
யோகமறி யும்விருப்பே உற்றிடினும் மாமறையின்
மாகருமத் தைக்கடப்பன் மற்று. (௪௪)

விருப்பே - விருப்புமாத்திரமே; அப்யஸிக்காதவனும் விருப்பு ஒன்று மாத்திரமே. மாமறையின்... கடப்பன்-வேதகர்மாநுஷ்டானத்தால் உண்டாகும் பயன் சாராமல் தன்னை விடுவித்துக்கொள்வான். யோகத்தில் விருப்புள்ளவன் கூடக் கன்மத்தைக் கடப்பானுயின் அதனை அப்யஸிப்பவன் கடத்தலைக் கூறவும் வேண்டுமோ என்றபடி.

அவன் பாவங்கள் நீங்கிப் பல பிறப்புகளிலும் சிறுகச் சிறுகச் சித்திபெற்று முடிவில் முக்தியடைவனெனல்.

*மேவும் முயற்சியொடு வேண்டிச்செய் யோகியவன்*
*பாவவினை முற்றுமறப் பற்றகன்று - பூவுலகில்*
*பல்பிறப்பிற் சித்தி படிப்படியாய் பெற்றதன்பின்*
*செல்லும் பரகதிக்குத் தேர்.* (௪௫)

யோகியானவன் தபசிகள் முதலானோர்களிலும் மேலானவன் எனல்.

*தாபதர்கள் தம்மிலும்பர் சாத்திரங்கற் றோர்தம்மிற்*
*சோபமறக் கன்மஞ்செய் தூயோரில் - கோபமறு*
*மாயோகி மேலானோன் மற்றதனுல் மற்புயத்தாய்*
*நீயோகி யாகுறுக நேர்ந்து.* (௪௬)

*கோபம் - மனச்சஞ்சலங்கள் யாவுக்கும் உபலக்ஷணம்.*

இதர தெய்வங்களை உபாஸிக்கும் யோகிகளிலும் என்னை உபாஸிக்கும் யோகியே உயர்ந்தவன் எனல்.

*எவ்வகைநல் யோகியினும் யாவன்மனம் என்னிடத்தே*
*தவ்வலற வேபதித்துத் தானன்பால் - இவ்வுலகில்*
*ஏத்துகின்றான் அன்னோனே ஏற்றமுள்ளான் என்பதுவே*
*வாய்த்தநிதி என்சம் மதம்.* (௪௭)

தியானயோகம் முற்றிற்று.



ஏழாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.



1-2. பகவத்யானயோகம் செய்பவர்களுக்கு எல்லாச் சித்திகளும் உண்டாமெனல்.

3. ஞானம் துர்லபம் என்று கூறல்.

4. அபர ப்ரகிருதியின் எண்வகைப் பேதம் கூறுதல்.

5. ஜீவபூதமாகிய பர ப்ரகிருதியைக் கூறுதல்.

6. இவ்விரண்டு பிரகிருதி மூலமாய் ஈசுவரன் எங்கும் வியாபித்திருத்தல் கூறல்.

7. எல்லாப் பூதங்களும் பரமேசுவரனிடத்தில் தங்கியிருப்பன வென்று திருஷ்டாந்த பூர்வமாகக் கூறுதல்.

8-12. சுருக்கமாக ரஸாதி விபூதி கூறுதல்.

13. மூடர்கள் ஸாத்விகாதி முக்குண வயத்தராய் மோஹமடைதலால் பகவானது உண்மையைத் தெரிந்து கொள்வதில்லை யென்று கூறல்.

14. பகவானே தமக்கு அடைக்கலம் என்றெண்ணுபவர்கள் தத்வஞானத்தைப் பெற்று மாயையைக் கடப்பாரென்று கூறுதல்.

15. பாவிகள் பகவத்பக்தி செய்யாரெனல்.

16. புண்யாத்மாக்களுக்கே பகவத்பத்தி உண்டா மென்றும் அப்படிபபட்ட பகதர் நால்வகையர் என்றும் கூறல்.

17-19. நான்குவித பக்தர்களில் ஞானிகள் உயர்ந்தோரெனல்.

20. இதர தெய்வங்களைப் பூசிப்பவர் விவேகமும் விஞ்ஞானமும் நீங்கினவர் எனல்.

21-22. இதர தெய்வங்களைப் பூசிப்பவர்களுக்கு அத்தெய்வங்களிடத்தில் சிரத்தை பகவானே கொடுக்கிறரென்றும, அத்தெய்வங்களால பெறுபயனும் பலமும் பகவதாஜ்ஞையாலே உண்டாகின்றதென்றும் கூறல.

23. இதர தெய்வங்களைப் பூசிப்பவர் அடையும் பலம் சாசுவதம் அன்றெனல்.

24-27. பரமார்த்த தத்வ ஞானம் உண்டாவதற்கு எது கூறுதல்.

28-30. புண்யவான்களுக்கு பகவத் பஜனையால் உத்தம கதி உண்டாமெனல்.



# ஏழாம் அத்தியாயம்.

## விஜ்ஞான யோகம்.



### காப்பு.

*பார்த்தற்குச் சாரதியாய்ப் பாரதப்போர் செய்வித்துச்*
*சீர்த்தியறு மன்னர்குலத் தேசழித்த - தீர்த்தன்றாட்*
*செந்தா மரைமனமே சிந்திக்கிற் சேர்ந்திடுமோ*
*சிந்தா குலம்உனக்குச் செப்பு.*

### பாயிரம்.

*எப்பொருளும் தன்னூர் இருபகுதி யாலுளதாம்*
*மெய்ப்பொருளும் பத்தர் விதமுமவர்க் - கொப்பில்பதம்*
*கூடுவதும் ஏனையரைக் கொண்டிறைஞ்சா நர்க்குநலன்*
*வாடுவதும் கூறுவன்மால் மற்று.*

---

### நூல்.

என்னைச் சந்தேகமின்றி முற்றும் அறியும் விதத்தைக்.
கேளென்று பகவான் கூறுதல்.

*என்னிடத்துப் பற்றும் இதயம் தனிப்பெற்றுச்*
*சொன்னதொரு யோகத் துறைமருவி - என்னையே*
*சார்ந்துநீ முற்றுமெனைச் சந்தேகம் அற்றினிது*
*தேர்ந்திடும்வண் ணம்கேள் சிறந்து.* (க)

என்னிடத்து - பரமேசுவரனிடத்து. யோகத்துறை மருவி - மனம் ஒருநிலைப்படுதலைச் செய்து. சார்ந்து - அடைக்கலமாக அடைந்து. நீ - நீ இவ்வாறு இருப்பவனாய். என்னை - என் குணங்களை.

நான் சொல்லும் இந்த அநுபவந்தோடு கூடிய ஞானத்தைப் பெற்றபின் அறியவேண்டியது வேறில்லை யெனல்.

எதையறிந்த பின்னருனக் கிங்கினிவே றொன்று
புதிதறிதல் வேண்டாவோ பொற்பார் - துதிமருவும்
விஞ்ஞானத் தோடியைந்த ஞானமிதை விண்டுரைப்பேன்
அஞ்ஞானம் தீரவுனக் காய்ந்து. (உ)

என்னை உணர்பவன் ஸர்வஜ்ஞனுவானாதலின் என்னை உணர்த்தும் இந்த ஞானத்தைப் பெறுதல் மிகவும் அரிதெனல்.

ஆயிரவர்க் குள்ளொருவன் ஆரரிய சித்திபெற
நேயமுட னேமுயல்வன் நீணிலத்தில் - மேயவுயர்
சித்தரவர் ஆயிரருள் தேசின் எனைத்தெரியும்
சித்தனொரு வன்போலும் தேர். (ங)

பிருதிவி முதலிய எட்டும் என் மாயையினின்று தோற்றியவை எனல்.

மண்ணீர் அனல்வாயு வானம் மனம்புத்தி
எண்ணும்அகங் காரம்என எண்வகையாக் - கண்ணின்
எனக்குரிய இப்பகுதி ஏறனையாய் ஈங்குத்
தனித்தனியா கப்பிரியும் தான். (ச)

மண் முதலியன அவ்வவற்றின் தன்மாத்திரைகளையும், மனம் அகங்காரத்தையும், புத்தி மகத் தத்வத்தையும், அகங்காரம் அவ்யக்தத்தையும் உணர்த்தும்.

இவ்வெட்டுக்குங் காரணமாகிய பிரகிருதி அபரப்பிரகிருதி, உயிர்க்குயிராய் உலகத்தைத் தாங்கி நிற்பது பரப்பிரகிருதியாம் எனல்.

இப்பகுதி கீழினிமற் றிச்சகத்தைத் தாங்குவதாய்
ஒப்பிலொரு மெய்ப்பகுதி உள்ளத்தைத் - துப்புடையாய்
இன்னதனில் வேறாய் உயர்ந்ததுவாய் எப்பொருட்கும்
மன்னுமுயி ராயறிதி மற்று. (ரு)

**க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞனாகிய இவ்விரண்டு ப்ரக்ருதியினின்றும் எனது ஸந்நிதானத்தால் உலகம் தோன்றி யொடுங்குமெனல்.**

*இவ்விரண்டு பண்பார் பகுதிகளே எப்பொருட்கும்*
*எவ்வமிலா யோனி யெனவறிதி - அவ்விரண்டால்*
*ஞாலத்தின் உற்பவமும் நாசமும்நான் ஆகின்றேன்*
*கோலத் தனிகருடையாய் கொள்.* (௬)

*யோனி - பிறப்பிடம் உற்பவமும் நாசமும் ஆகின்றேன் - உற்பவநாசங்களுக்குக் காரணன் ஆகின்றேன்.*

**சரட்டைப்பற்றி மணிகள் நிற்றல்போல என்னைப்பற்றி உலகமெல்லாம் நிற்கின்றதெனல்.**

*என்னினுமேல் ஆகியதொன் றிலை தனஞ்சயகேள்*
*மன்னுலகம் யாவும் மணிநிரைகள் - துன்னும்*
*சரட்டின்கட் கோத்திருக்கும் தன்மையினில் என்பால்*
*ஒருப்படவே கோத்திருப்ப உற்று.* (௭)

**ஒவ்வொரு பொருளிலும் ஸாரமாயிருப்பவன் நானே யெனல்.**

*நீருட் சுவைநான் நிலவிரவி சூரியருள்*
*ஆரொளிநான் ஆரணத்தோங் காரம்நான் - காருலவும்*
*விண்ணுளொலி யும்நரருள் மேவுமொரு பௌருடமும்*
*எண்ணுகநீ யானே என.* (௮)

*நீரிற்சுவை - சுவையாயுள்ள என்னிடத்து நீர் கோக்கப்பட்டிருக்கின்றது; இவ்வாறே மற்றவற்றிற்கும் கொள்க.*

**இதுவுமது.**

*மண்ணினுறு நன்மணமும் வன்னியினுள் வாளொளியும்*
*நண்ணுமுடல் தோறும் நகுமுயிரும் - எண்ணும்*
*தவத்தோருட் செய்தவமும் தானாக நானே*
*பவித்திடுவேன் பண்பிதுநீ பார்.* (௯)

எல்லாப் பொருளுக்கும் அழியாத வித்தாயிருப்பவன் நானெனல்.

நித்தியமாம் வித்திந நிகழ்தருமா பூதங்கள்
அத்தனைக்கும் யானென் றறிகநீ - புத்திமலி
சீரியருட் புத்தியும்நான் தேசினருட் டேசும்நான்
ஓருகவிவ் வுண்மையினை உற்று. (௧0)

வித்து - முளைத்தற்குக் காரணமாயிருப்பது. தேசினர் - வீர முடையவர்.

தேகத்தை நிறுத்திக்கொள்ளுதற்கு மாத்திரம் வேண்டிய பலமும் ஆசையும் நானேவேன் எனல்.

காம்விரா கங்கள் கழிந்தநற் கருத்துடைய
தோமில்வலி யாளருள்யான் சொல்வலியும் - நேரினில்
பல்லுயிரின் உள்ளும அறம்பிறழாப் பான்மையினில்
புல்லுமொரு காமமும்நான் போதரு. (௧௧)

காமம் - அடையாத பொருள்களின் மேல் ஆசை; இராகம் - அடைந்த பொருள்களிலே உருசி.

எல்லாம் என்னிடத்தில் தோன்றி என்னிடத்தில் நிற்பன, நான் ஒன்றையும் சாரேன் எனல்.

சாற்றியுயர் சத்துவத்தும் ராசதத்தும் தாமதத்தும் [யார்
தோற்றுபொருள் என்கண்ணே தோன்றுவன - வேற்றுமை
அன்னவற்றில் யானுறையே னன்னவைதா மென்னிடத்தில்
மன்னியுறும் என்று மதி. (௧௨)

நானிப்படி எல்லாமாய் நிற்பினும் உலகம் என்னை அறியாதெனல்.

முக்குணத்தால் ஆகிவளர் முத்திறத்தின் இப்பொருளால்
மிக்கதொரு மோகமதில் வீழ்ந்திடலால் - தொக்கபுவி
மற்றிவற்றின் வேறாகி மாற்றமிலா மாண்பினனாய்
உற்றவெனை ஓரா துணர். (௧௩)

'இப்பொருள் என்றது' விருப்பு, வெறுப்பு, மயக்கம் முதலான வற்றை.

**இவ்வித மோஹந்தை உண்டுபண்ணும் என் மாயையைக் கடப்பது அரிதெனல்.**

*முக்குணத்தாம் தெய்வ மொழிதருமிம் மாயைதனைத்*
*தக்கபடித் தானரிது தாண்டிடுதல் - புக்கெவர்கள்*
*என்னையே யிங்கடைவார் ஏதமற மற்றவரே*
*அன்னதனைத் தாண்டவலார் ஆர்ந்து.* (கச)

*தெய்வமாயை யென்று கூட்டுக.*

**பாவிகள் முதலானவர்கள் என்னைச் சரணமடைந்து இந்த மாயையை நீக்கிக்கொள்ளா ரெனல்.**

*பற்றுமொரு மாயையினாற் பண்பாக மேவுமறி*
*வற்றசுர வெய்யகுணம் ஆர்ந்துநர - ரிற்கடையாம்*
*பாவமிழை பேதையர்கள் பற்றுகக் கொண்டென்னை*
*மேவகிலர் காணாய் மிக.* (கரு)

**என்னைச் சரணமடைபவர் நால்வகையர் எனல்.**

*என்னடியைப் போற்றும் எழிலுடைய புண்ணியர்தாம்*
*இன்னலுழப் போரறிவை இச்சிப்போர் - துன்னரிய*
*தேசுதரும் செல்வத்தைச் சேரவிழை வார்அறிஞர்*
*மாசிலிவர் நால்வா மதி.* (கசு)

**இந் நால்வருள் ஞானி சிறந்தவனெனல்.**

*இன்னவருள் என்றும் இரியாமல் ஒன்றினிலே*
*மன்னுமுயர் பத்தி வளரறிஞன் - முன்னவனும்*
*மற்றவற்கு நான்பிரியன் மற்ற அவன்தானும்*
*உற்றெனக்குத் தான்பிரியன் ஓர்.* (கஎ)

**ஒன்றினில் - ப்ரஹ்மத்தில்.**

ஞானிக்கும் எனக்கும் பேதமில்லையெனல்.

செப்புமிவர் யாரும் சிறந்தவரே ஆபினுமவ்
ஒப்பிலொரு ஞானியென்றோ டொன்றுவன் - இப்பரிசின்
என்மதமேன் என்னில் எனையே அடைக்கலமா
நன்மையுறு நாடுமவன் நன்கு. (கஅ)

ஞானியைவிட மேலானவன் இல்லையெனல்.

பல்பிறவி பாரில் எடுத்துப்பின் பார்ப்பவெலாம்
செல்வமலி யும்வாசு தேவனது - நல்வடிவே
என்றறிந்து ஞானியெனை எய்துமவ னிற்பெரியோன்
ஒன்றலரி திவ்வுலகில் ஓர். (கக)

ஆசையினாலே அறிவு கெட்டவர் இதரதெய்வங்களைத் தொழுவாரெனல்.

அந்தந்த ஆசையினால் ஆரறிவு தான்கெட்டோர்
சந்ததமும் தத்தம் இயற்கையினால் - பந்தமுறி இ
வெவ்வேறு மேவும் நியமத்தால் வேறுபல
தெய்வங்களைத்தொழுவார் சென்று. (உ0)

அவரவர் தொழும் தெய்வங்களிடத்தில் பக்தி நிலைக்கும்படி நான் செய்கிறேனெனல்.

எந்தெந்தப் பத்தன் தான் எந்தெந்த மூர்த்தியினைச்
சிந்தையில்நம் பிக்கையுடன் சேவிக்கப் - புந்தியுறும்
அந்தந்தப் பத்தன்தன் நம்பிக்கை அக்கணுற
நந்தலற நானருள்வேன் நன்கு. (உக)

அந்தப் பக்தி பூர்வமான ஆராதனத்தால் என்நியமனப்படி பலனைப் பெறுவானெனல்.

அத்தகையாம் நம்பிக்கை யாலவனத் தேவதையின்
மெய்த்திடும்ஆ ராதனத்தை மேவிச்செய் - தித்தறையில்
பொற்புடன்யான் வைத்த பொருளையவன் அன்னதன்பால்
நற்பயனைக் கொள்வன் நயந்து. (உஉ)

ஆனால் அப் பலன் அழிந்துபோகும், என்னைப் பூசிப்பவர் அழிவில்லாத மோக்ஷத்தை அடைவரெனல்.

அற்பமதி யாளர்தமக் கத்தெய்வ பூசனையால்
உற்பவிக்கும் நன்மை ஒடுங்கிடுமால் - பற்பலராம்
தேவர்களைப் போற்றுநர்அத் தேவர்களை யேயடைவார்
மேவுவரென் பத்தரெனை மிக்கு. (உங)

மூடர்கள் என் பெருமையை அறியாரெனல்,

தோன்றாத என்னையிவன் தோன்றும்நா னென்னைப்பர்
சான்றாண்மை யில்லாதார் தாமதராய் - ஆன்றெதற்கும்
மேலாகி நித்யமாய் வேற்றுமையில என்னியலை
ஏலவறி யாதவராய் நன்கு. (உச)

என் யோகமாயையில் நான் மறைந்திருந்தலால் என்னை ஒருவரும் அறியாரெனல்.

முன்னரிதாம் என்யோக மாயையெனை மூடுதலால்
என்னுருவம் தோன்றாத யாவர்க்கும் - அன்னதனால்
மெய்யுணர்வி லாரறியார் வெய்யு பிறப்பில்லேனாய்
நையுமழி வில்லனுமாய் நன்கு. (உரு)

ஸர்வமும் நான் அறிவேன் என்னை ஒருவரும் அறியாரெனல்.

சென்றனவும் இன்று நிகழ்வனவும் திண்புவியில்
ஒன்றிவர உள்ளவுமாம் ஒண்பொருள்கள் - துன்றும்
அனைத்தினையும யானறிவேன் என்னையறி யானே
தினைத்துணையும எங்கெவனும் தேர். (உசா)

ஒவ்வொருயிரும் பிறக்கும்போதே அஜ்ஞானத்தால் மோஹ மடைகின்றதெனல்.

எவ்வுயிரும் இங்குப் பிறந்திடுமவ் வெல்லையினே
தவ்வில்விருப போடுவெறுப் பைத்தழுவிக் - கவ்வுமொரு
தொந்துவத்தை என்றும் தொடர்ந்துவரும் மோகத்தால்
சிந்தையறு மோகமுறும் தேர். (உஎ)

நல்வினையால் பாவம் நீங்கினவர் த்வந்துவம் நீங்கி என்னைப் பூசிப்பரெனல்.

*நல்வினையால் எம்மனிதர் பாவம் நசிந்திடுமோ*
*சொல்லுமவர் தொந்துவமோ தந்தியவருமை - வெல்லரிய*
*கட்டகன்றே என்னைக் கருதி இறைஞ்சுவாகாண்*
*திட்டமுறு நோன்பு கொண்டு தேர்ந்து.* (உஅ)

என்னைப் பூசிப்பவரே பிரமம், அத்யாத்மம், கர்மம் என்பவற்றை அறிவாரெனல்.

*என்னை வழிபட்டெவர் மூப்புச் சாக்காடு*
*தன்னையொழிக்கத் தற்பொருட்டுந் தாமுயல்வார் - அன்னோர*
*கன்மங்கள் யாவுமக் கருத்தம் அத்தியாத்துமமும்*
*மன்பிரமமுமதெரிவார் மற்று.* (உகூ)

என்னை அதிபூத முதலியவற்றோடு அறிபவர்கள் மரணகாலத்தும் மனம் தடுமாறாரெனல்.

*அதிபூதம் தெய்வம் அதியெச்சம் என்னும்*
*இதமருவும் இன்னவற்றாகக் கூடி - வதிபவனும்*
*என்னையுணர்வாரறிவார் ஏங்குவிட்டுச் செலபொழுதும்*
*மன்னுமனம் ஓர்நிலையாய் மற்று.* (௩0)

விஜ்ஞானயோகம் முற்றிற்று.



## எட்டாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.



1-2. பிரமம் எப்படிப்பட்டது முதலான ஏழு கேள்விகள் அருச்சுனன் கேட்டல்.

3-5. அவ்வேழு கேள்விகளுக்கும் பகவான் விடை கூறுதல்.

6. அந்த்ய பாவநத்தை அநுஸரித்து இதர தேஹம் உண்டாகு மெனல்.

7. எப்போதும் பகவத்யானத்தைச் செய்து, போர் செய்தல் முதலான காரியங்களை மேற்கொள் என்று அருச்சுனனுக்கு வற்புறுத்துதல்.

8-10. யோகத்தோடு கூடிய மனமுடையவனுக்குப் பரமபுருஷ ப்ராப்தியுண்டா மென்று கூறல்.

11-14. பிரணவோபாஸனை கூறுதல்.

15. பகவானை அடைந்தவர்க்குப் புநர் ஜன்மம் இல்லை யெனல்.

16-19. சுவர்க்க முதலாகச் சத்யலோகம் இறுதியான உலகங்களை அடைபவர்களுக்கு மீண்டும் பிறப்புண்டென்று ஏதுவோடு கூறுதல்.

20-21. பரதத்வ ஸ்வரூபத்தை உணர்த்துதல்.

22. பரமபுருஷன் ஞானலக்ஷணமான பக்தியினால் அடையத்தக்கவன் என்று கூறல்.

23-25. தியானயோகம் செய்பவர்களுக்கும் கர்மயோகம் செய்பவர்களுக்கும் முறையே தேவயானமும் பிதிர்யானமும் உண்டாதல் சொல்லுதல்.

26. சுக்லகிருஷ்ண மார்க்கங்களால் சென்றவர் முறையே திரும்பி வாராமையும் வருவதும் சொல்லுதல்.

27. இவ்விரண்டு மார்க்கங்களையும் சிந்தித்தலால் வரும் பயன் கூறுதல.

28. யோக மாஹாத்ம்யம் கூறுதல்.

# எட்டாம் அத்தியாயம்.

## அக்ஷரபரப்ரஹ்ம யோகம்.



### காப்பு.

குழலூதி ஆன்குவிக்கும் கோபாலன் செய்ய
கழலோதி நெஞ்சகத்துக் காணும் - ஒழிவறுபேர்
ஆனந்தம போதுவதொன் றம்புவியில் வேறுளதோ
ஊனம தவிர்ந்திடுவார்க குற்று,

### பாயிரம்.

தன்னையெவன் சிந்திப்பான் சாந்தருணம் சாயாமல்
அன்னவன்மீ ளாநிலையை ஆருவதும் - பன்னரிய
தெய்வநெறி யும்பிதிரர் சேர்நெறியும் வேறுளவும
ஐயமறச செபபுவன்மால் ஆர்ந்து.

---

### நூல்.

பிரமம், அத்யாத்மம், கர்மம், அதிபூதம், அதிதெய்வம்
என்பவை யாவையென் றருச்சுனன் கேட்டல்.

அப்பிரமம் என்பதியா தத்யான்மம் ஆவதெது
செப்புமொரு கன்மமெது செல்விவளர் - பொற்புரத்தாய்
பன்னும்அதி பூதம்அதி தெய்வமெனப் பாவியய
தென்னை இசைத்தருள்வாய் ஈங்கு, (க)

அதியஜ்ஞன் யாவன், எவ்வாறிருக்கின்றன், மரணகாலத்தில் மநோநிக்ரஹம் உடையவரால் தேவரீர் எவ்வா றறியப்படுகின்றீ ரெனல்.

இவ்வுடற்கண் மேய அதியெச்சன் யாவனிதில்
எவ்விதத்தில் நிற்பன் இறந்திடுபோழ் - தவ்வியமில
சிந்தையினைப் பந்தித்த சீரியரால் எவ்வகைநீ
புந்தியுண ரப்படுவாய் புக்கு. (உ)

பிரமம், அத்யாத்மம், கர்மம் என்பவற்றைப் பகவான் உணர்த்துதல்.

உத்தமமாய் ஓங்கி உலவாத தொண்பிரமம்
மற்றதுவே இவ்வுடற்கண் வாழ்தருமோர் - அத்யான்மம்
பூதமெலாம் தோற்றுவிக்கும் புண்ணியநல் வேள்வியினைத்
தீதொருவு கன்மமெனத் தேர். (௩)

வேள்வி மழைக்குக் காரணமாய் மழை சராசரங்களின் உற்பத்திக்குக் காரணமாதலின், வேள்வி பூதங்களைத் தோற்றுவிப்பதாகக் கூறப்பட்டது.

அதிபூதம், அதிதேய்வம், அதியஜ்ஞன் என்பவற்றை உணர்த்துதல்.

அழியுமியல் ஆர்பொருள்கள் யாவும்அதி பூதம்
இழிவில்புரு டன்தெய்வம் என்ப - ஒழிவறவே
இவ்வுடற்கண் மேய எனையே இருந்திறலாய்
அவ்வதியெச் சன்னென் றறி. (௪)

புருடன் - எல்லா உயிர்களின் இந்த்ரியங்களையும் செலுத்தி விளக்கும் ஹிரண்யகர்ப்பன்.

**மரணகாலத்தில் என்னைத் தியானிப்பவன் என் ஸ்வரூபத்தையே அடைவானெனல்.**

யாவனுயிர் நீங்குறும்போழ் தென்றனையே சிந்தித்து
மேவுமுடல் விட்டொழிந்து மீசெலுமோ - தாவிலவன்
மெய்வடிவம் என்னதையே மேவுகிற்பன் இத்திறத்தில்
ஐயமிலை யாரும் அறி. (ரு)

மீசெலுமோ - மேலிடத்தை அடைவானோ.

**மரணகாலத்தில் எந்தத் தெய்வத்தை ஒருவன் சிந்திக்கிறனே அதையே அடைவானெனல்.**

எப்பொருளைச் சிந்திப்பான் இவ்வுடல்விட் டேகும்போ
தப்பொருளை யேயொருவன் ஆர்ந்திடுவான் - பொற்பினவன்
எப்பொழுதும் சிந்தித் திருந்திடலால் அந்நினைப்பைச்
செப்பியவிவ் வுண்மையினைத் தேர். (சா)

பொருள் - தேவதை. அந் நினைப்பைச் சிந்தித்திருந்திடலால்- அந்தத் தெய்வவிஷயமான வாசனையை இடைவிடாது சிந்தித்துப் பயிற்சி கொண்டதனால்.

**ஆகையால் என்னையே ஸதாகாலமும் சிந்தித் திருப்பாயாக எனல்.**

ஆகலினால் என்றும் அகலாமல் எற்கருது
கோகையுடன் போரும் உஞற்றிடுக - மோகம்
தவிர்ந்துமனம் புந்தியையென் றன்மிசைவைத் தென்னை
உவந்தடைவாய் திண்ணமிதை ஓர். (எ)

ஆசார்யனால் உபதேசிக்கப்பட்ட எனது ரூபத்தைத் தியானிப்பவன் என்னையே அடைவனெனல்.

பயிற்சியெனும் யோகமதைப் பற்றினதாய் வேறோர்
செயற்கடையும் செல்லாத சித்தத் - துயர்சசிபெறும்
அபபரம னைக்கருதும் அன்புடையான் அன்னவனைப்
பொற்புடனே சென்றடைவன் புக்கு. (அ)

பொற்புடனே என்பதைக் கருதும் என்பதனோடும் கூட்டுக. பொற்புடனே கருதும் - முறைப்படி அதாவது சாஸ்திரம் ஆசார்யன் இவர்களுடைய உபதேசத்தின்படி தியானிக்கும்.

அப் பரமபுருஷனது இலக்கணங்களை விவரித்தல்.

கவியாய்ப் பழம்பொருளாய்க் கண்டாள்வான் ஆகி
நவையிலணு வுக்கணுவாய் ஞாலத் - தெவையும்அமை
எண்ணரிய ஞாயிரவி நேரொளிய னாய்இருட்கு
நண்ணரியா னைக்கருதி நன்கு. (கூ)

இருட்கு-அவித்தைக்கு; அவித்தையோடு கூடியவர்களால் அறியப்படாதவனை.

அந்தப் பரமபுருடனைத் தியானிக்கும் மார்க்கம் உணர்த்துதல்.

மேயபரன் தன்னையுயிர் விட்டிடும்போ தூட்டுளக்கில்
தூயமனப் பத்தியொடு துன்னுயிர்பகை - ஏய
புருவத் திடைநிறுத்திப் பொன்றாமல் உன்னும்
திருவுடையன் சேர்ந்திடுமே சென்று. (கo)

பரன்தன்னைச் சேர்ந்திடும் எனக் கூட்டுக. பொன்றாமல் -இடைவிடாமல்.

பிரமத்தைப்பற்றி மேலும் உணர்த்துவேனெனல்.

யாதொன்றை அக்கரமென் பார்மறைதேர் வார்எதிகள்
யாதொன்றை ஆசையறத் தெய்துவர்காண்-யாதொன்றைப்
புல்லவிழை வோர்பிரம சர்யநெறிப் புக்கிருப்பர்
சில்லுரையிற் சொல்வனதைத் தேர். (கக)

(பின்னிரண்டும் ஒருதொடர்.)

**பிரமத்தை அடைதற்குரிய தியானமார்க்கம் இன்னதென் றுணர்த்துதல்.**

*வாயில்வழி யாவும் அடைத்து மனந்தன்னைத்*
*தூயஇத யந்திருத்தித் துன்னுசிரத் - தேயிருப்ப*
*ஆவிதனை நன்கமர்த்தி ஆருமொரு யோகநிலை*
*மேவினனாய் வீற்றிருந்து மேல்.* (கஉ)

வாயில் - உணர்ச்சிக்கு வழிகளாயுள்ள இந்திரியங்கள். ஆவி - பிராணவாயு.

*உற்றபிர மந்தனக்கோர் ஒண்பெயராம் ஓமென்னும்*
*பெற்றியெழுத் தொன்றதனைப் பேசுநனாய்ப - பற்றியெனைச்*
*சிந்தித் திருந்துதன் தேகம்விடுத் தேகுமவன்*
*அந்தமிலபே றெய்தும் அறி.* (கங)

**மற்றெல்லா நினைப்பையும்விட்டு என்னையே சிந்தித்திருப்பவன் என்னை எளிதில் அடைவன் எனல்.**

*வேறொன்றும் எண்ணு மனத்தனாய் விட்டொழியா-*
*தீறின்றி எந்நாளும் எண்ணியெனை - மாறின்றி*
*ஓர்நிலைகொள் பத்தியுறு யோகியெவ னேஅவற்குச்*
*சேரவெளி யேனென்று தேர்.* (கச)

**என்னை அடைந்தவர்க்குப் பின்பு பிறப்பில்லையெனல்.**

*என்னையடைந் தாரெவர்க்கும் எய்தருமோர் சித்தியினை*
*மன்னவடைந் தேயுயர்ந்து வாழ்தலினால் - பின்னரவர்*
*வெய்யதுயர்க் காலயமாய் மேவிநிலை யற்றதொரு*
*நொய்யபிறப் பெய்தாரே நோக்கு.* (கரு)

சித்தி - மோக்ஷம். எவர்க்கும்... அடைந்து - வேறொருவருக்கும் அடைதற்கரிய மேலான சித்தியை யடைந்து. ஆலயம்-இருப்பிடம்.

மேற்கூறியதைப் பின்னும் வற்புறுத்துதல்.

*மூண்டகன்வாழ் தூய உலகம் முதலாகும்*
*அண்டமெலாம் மீள்வனவே ஆதலினில் - கண்டாய்*
*எனையடைந்தார்க் கில்லையே எந்நாளும் மீண்டும்*
*துனிசெய்பிறப் பென்னத் துணி.* (கசு)

பிரமலோகம் முதலானவை காலவரையறைக்குட்பட்டவை எனல்.

*பகலிரவை நன்கு பகுத்தறிவோர் வேதற்*
*குகமவைசேர ராயிரங்கள் ஒன்றிற் - பகலெனவும்*
*மற்றுமுகம் ஆயிரங்கள் வாய்த்தஇர வாமெனவும்*
*உற்றறிவர் இந்நிலத்தில் ஊங்கு.* (கஎ)

பகலின் ஆரம்பத்தில் உலகத்துக்குத் தோற்றமும், இரவின் ஆரம்பத்தில் ஒடுக்கமும் உண்டாமெனல்.

*அவ்வியத்தம் நின்றுளவாம் அப்பகல்தான் போதுங்கால்*
*எவ்வுலகும் காணும் இரவுவரச் - செவ்வியொடு*
*மற்றவைதாம் அவ்வியத்தத துள்ளே மறைந்திடுமே*
*உற்றுணர்தி உண்மை இது.* (கஅ)

'அப்பகல் போதுங்கால் எவ்வுலகும் அவ்வியத்தம் நின்றுளவாம்' என்று முடிக்க. அவ்வியத்தம் நின்று - தூக்கநிலைமையில் உள்ள பிரஜாபதியில் நின்று.

ஒடுங்கிய ஜீவராசியே மீண்டும் கர்மாநுஸாரமாகத் தோன்றுமெனல்.

*ஒன்றதுவே பூதவினம் உற்பவித்துப் பன்முறையும்*
*சென்றொடுங்கும் கங்குல் செறிதராலும் - பின்றைப்*
*பகல்வரலும் மீளவது பண்டுபோல் உண்டாம்*
*வசுவயமொன் றின்றி மதி.* (கசு)

ஒன்றதுவே பூதவினம் - முன் கற்பத்திருந்ததாகிய பூதக்கூட்டமே. கற்பம் - பிரமாவினுடைய ஒருநாள். வசு - தனக்குரியதாகச் சொல்லப்பட்ட.

**அவித்தையாகிய இந்த அவ்யக்தத்தினின்று வேறாகிய ப்ரஹ்மம் என்னும் அவ்யக்தம் நாசமற்றதேனல்**

*அவ்வியத்தம் இன்னதனில் வேறாய் அநாதியாம்*
*அவ்வியததம் மற்றதுதான் அண்ணல்கேள் - எவ்வகைய*
*பூதங்க ளும்சிதைந்து போம்பொழுதும் நாசமிலா*
*தேதம் தவிர்ந்திருக்கும் ஏய்ந்து.* (உ0)

*அவ்வியத்தம் வேறாய் - பூதவர்க்கத்துக்கு வித்தாயுள்ள கீழ்க் கூறிய அவித்தையாகிய அவ்யக்தத்தினும் பிரஹ்மமான அவ்யக்தம் முற்றும் வேறான பொருள். அவ்யக்தமற்றது - பிரஹ்மம்.*

**அந்த அழிவில்லாத பிரஹ்மபதவியைப் பெற்றவர்க்குப் பிறப்பில்லையேனல்.**

*அன்னதனை அவ்வியத்தம் அக்கரமென் றாங்குரைப்பார்*
*மன்னுமது யாவினுமேல் வாய்த்தகதி - என்னவுமே*
*சாற்றுவரால் மற்றதனைச் சார்ந்தார்மீ ளாரதுதான்*
*ஏற்றமலி என்னுறைவாம் ஈங்கு.* (உக)

*அவ்வியத்தம் - வெளிப்படையாய் இல்லாதது. அக்கரம் - அழியாதது. கதி - அடையவேண்டிய புருஷார்த்தம். என்னுறைவு-விஷ்ணுவின் பரமபதம்.*

**கீழே கூறிய பரமபுருஷன் மற்றொரு பற்றில்லாத பக்தியினால் அடையப்படுவனெனல்.**

*யாவனிடத் தெப்பொருளும் எய்தி இருப்பனவோ*
*யாவனால கெங்கும் இயைந்துளனோ - மேவப்*
*பரமபுரு டன்வேறோர் பற்றறுபத் திக்கே*
*மருவவுரி யானீ மதி.* (உஉ)

*வேறோர் பற்றறு - வேறு விஷயத்தில் செல்லாத.*

**புநர்ஜந்மத்தை அடையாமைக்கு மார்க்கமும் புநர்ஜந்மத்தை அடைவிக்கும் மார்க்கமும் கூறுதல்.**

எப்பொழுதின் யோகி இறந்திடலால் என்றொன்றும்
இப்புவிக்கு மீளானோ எப்பொழுது - தப்புதலால்
மீண்டுமிங்குப் போதுவனோ விலவல்லாய் அன்னவற்றை
ஈண்டுரைப்பல் கேளாய் இனி. (உ௩)

தப்புதலால் - இறத்தலால். 'யோகி' தியானயோகிகளையும் கர்மிகளையும் உணர்த்தும். தியானயோகிகள் புநர்ஜநமத்தை அடையார், கர்மயோகிகள் அடைவார்.

**தியானயோகிகள் புநர்ஜந்மத்தை யடையாமல் முக்தியை அடையும் தேவயானமார்க்கம் இன்னதெனல்.**

எரியில் ஒளியில் இலங்குபகற் கண்ணே
முருவியமுன் பக்கத்தில் மற்றும் - விரவயனம்
உத்தரத்தும் ஆவி விடுத்தகலும் ஒண்பிரம
வித்தகர்பிர் மத்தமர்வர் மேல். (உ௪)

பிரமவித்தகர் - ஸகுணப்ரஹ்மத்தை உபாஸிப்பதிலே அமைந்து நின்ற தியானயோகிகள். பிர்மத்தமர்வர் - காலக்ரமத்தால் அடைவர்.

**கர்மயோகிகள் புநர்ஜந்மத்தை யடையும் பிதிர்யான மார்க்கம் இன்னதெனல்.**

புகையிரவு பின்பக்கம் போதயனம் தென்பால்
வகைபுறுமிக் காலத்தில் மாறும் - தகைமலியும்
யோகியர்தாம் வெண்மதியின் ஒள்ளொளியை உற்றதன்பின்
வாகுடனே மீள்வர் மதி. (உ௫)

தென்பால் அயநம் - தக்ஷிணாயநம். யோகியர் - யஜ்ஞம் முதலியவற்றைச் செய்யும் கர்மிகள். வெண்மதியின் ஒளி - சுவர்க்கம்.

### இவ்விரண்டு மார்க்கங்களும் இவ்விருதிறத்தாருக்கும் நித்தியமெனல்.

ஒன்மைஇருள் என்றிங் குரைத்தநெறி இவ்விரண்டும்
எண்ணிடுவர் நித்தியமென் றிப்புவிக்குக் - கண்ணிவற்றில்
முன்னதனால் எஞ்ஞான்றும் மொய்ப்புவிக்கு மீளலிலர்
பின்னதனால் மீண்டிடுவர் பேர்ந்து. (௨௬)

பவிக்கு - ஸகுணவித்தைக்கும் கர்மத்துக்கும் உரியவர்க்கு.

### இவ்விரண்டு மார்க்கங்களின் இயல்பையும் உணர்ந்த யோகி மோஹத்தை அடையானெனல்.

இவ்விரண்டு மெய்ந்நெறியும் இன்னதிறம் என்றுணரும்
எவ்வமறு யோகிமயல் எய்தானால் - செவ்வையுற
ஆதலினால் என்றும் அருச்சுன யோகத்தில்
தீதறவே நின்றிடுநீ தேர்ந்து. (௨௭)

யோகத்தில் நின்றிடு - ஒருநிலைப்பட்டவனாகத் தியானயோகத்தைக் கூடியிருப்பாயாக.

### கீழே கூறிய விஷயங்களை அறிந்தநுஷ்டிக்கும் யோகியானவன் ஸர்வோத்க்ருஷ்டமான மோக்ஷத்தை அடைவனெனல்.

நான்மறையில் வேள்விகளில் நற்றவத்தில் தானத்தில்
பான்மையுறு புண்ணியநற் பல்பயனை - தான்வகுத்த
முற்றும் கடப்பணிதை முன்னறிந்து மாயோகி
பெற்றிடுவன் பேராம் இடம். (௨௮)

இதை - கீழே எழுவினாக்களை நிர்ணயித்தல் மூலமாக உபதேசிக்கப்பட்ட விஷயத்தை. பேராம் இடம் - ஈசுவரனது உயர்ந்த நிலையை. மறையில்...பயனாகவகுத்த - வேதமோதுதல், வேள்விகளை அநுஷ்டித்தல், தவத்தைச்செய்தல், தானம்கொடுத்தல் என்னும் இந்தப் புண்ணியங்களால் அடையும்பயனாகச் சாஸ்திரங்களிற் கூறியவற்றை.

### அக்ஷரபரப்ரஹ்ம யோகம் முற்றிற்று.

ஒன்பதாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.



1-10. அதிரஹஸ்யமான பர ப்ரஹ்ம தத்வ ஞானோப தேசம் உணர்த்துதல்.

11-12. பகவான் தம்மை மூடர் அவமதித்தற்குக் காரணம் ஸ்வதத்வஜ்ஞானம் இல்லாமையே யென்றுணர்த்துதல்.

13-15. மஹாத்மாக்களுக்கு பகவத்பக்தி ரூபமான மோக்ஷமார்க்கத்தில் பிரவிருத்தியைச் சொல்லுதல்.

16-19. சுருக்கமாக ஈசுவர விபூதியைச் சொல்லுதல்.

20-21. ஆசையோடு கூடினவர்களுக்கு ஸம்ஸாரமே அடையும் பொருள் என்று கூறல்.

22. ஞானத்தைப் பெற்ற நிஷ்காம பக்தர்களுடைய யோகக்ஷேமங்களைப் பகவான் தாமே விசாரிப்பதாகக் கூறுதல்.

23-25. அந்யதேவதைகளைச் சேவிப்பவர்கூட பகவத்பக்தர்களே யென்றும் அவர்கள் அந்தப் பூஜையினாலே கருதிய பலனை அடைவரென்றும் கூறுதல்.

27-29. பகவதாராதனத்தில் அருச்சுனனைப் பிரவர்த்திக்கச் செய்தல்.

30-33. பக்திமார்க்கம் எல்லாவற்றினும் உயர்ந்ததென்று கூறி அதில் அருச்சுனனைப் பிரவர்த்திக்கச் செய்தல்.

34. ஈசுவரஸேவை இன்னவிதம் செய்யவேண்டுமெனல்.

# ஒன்பதாம் அத்தியாயம்.

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்.



### காப்பு.

மண்ணீர் அனல்வாயு வானமெனும் பூதத்தின்
கண்ணூர் பெரும்புவனம் எங்குமே நிறை - விண்ணோர்தம்
கோமானை நெஞ்சே கொழுந்துளவத் தார்மார்பிற்
பூமானை வைத்தவனைப் போற்று.

### பாயிரம்.

பற்றற்று நிற்கும் பரம மறைப்பொருளும்
முற்றத் துறந்தார்க்கே முத்தியும் - குற்றமறு
பத்திநெறி யேஎவைக்கும் மேலாகும் பான்மையும்
அத்தன் அறைந்திடுவான் ஆங்கு.

மறைப்பொருள் - ரஹஸ்யம்.

---

### நூல்.

**எந்த ஞானத்தால் மோக்ஷம் அடையக்கூடுமோ அந்த ஞானத்தை ஓதுவேனெனல்.**

ஏதையறியிற் றீமையினில் வீடுறுவாய் ஏந்தால்
அதிமறையாம் அன்னதனை அன்பால் - மதிதெளிய
விஞ்ஞானத் தோடுரைப்பன் வெய்ய அசூயையிலாய்
அஞ்ஞானம் தீரஇனி ஆங்கு. (௧)

அதிமறை - அதிரஹஸ்யம்.

நான் உபதேசிக்கப்போவது எல்லாவித்தைகளிலும் உயர்ந்ததும் உணர்தற்கெளியதுமாமெனல்.

*வித்தைகளுள் வேந்தாய் மறைப்பொருளுள் மேலாகி*
*உத்தமமாய்த் தூய்தாய் உணர்வெளிதாய் - மெத்தவுயர்*
*தன்மநெறி யிற்பிறழா தாகிச் சமைத்தற்கும்*
*அம்மஎளி தாமழியா தாங்கு.* (உ)

*மறைப்பொருளுள் - ரஹஸ்யங்களுள். சமைத்தல் - செய்தல். அம்ம - வியப்பையுணர்த்தும் சொல்.*

இந்தத் தர்மத்தில் சிரத்தையைவயாதவர் ஸம்ஸாரத்தில் உழல்வாரெனல்.

*ஊனமிலித் தன்மத் துயர்சிரத்தை உற்றிடலில்*
*மானிடர்தாம என்னை மருவாராய் - ஈனமுற*
*மாய்ந்துகெடும் சம்சார வன்னெறியில் எனறுமவர்*
*ஓய்நதுழல்வர் என்றே உணர்.* (௩)

*சிரத்தை - நம்பிக்கை. கெடும் - கெடுதற்கேதுவாகிய. சம்சார வன்னெறி - நரகத்தையும் விலங்கு முதலான பிறவிகளையும் அடைதற்குக் காரணமான மார்க்கம். மருவாராய் - மருவுதற்குச் சாதனமாகிய கேவலபக்தியும்கூட இல்லாதவராய். ஓய்ந்துழல்வர் - உழன்று ஓய்வார் என மாற்றிக்கொள்க.*

என் உருவம் அறிதற்கரியது; எல்லாம் என்னை ஆதாரமாகக்கொண்டிருப்பன; எனக்கு ஆதாரம் ஒன்றும் இல்லையெனல்.

*அவ்வியத்த மாம்வடிவம் ஆர்தருமென் னால்நிறையும்*
*இவ்வுலகம் எங்கும் இலங்குபொருள் - எவ்வகையும்*
*என்னிடத்தே தங்குவன யானவற்றில் ஓர்பொழுதும்*
*மன்னியுறேன் உண்மை மதி.* (௪)

*அவ்வியத்தமாம் - வெளிப்படையல்லாத; இந்த்ரியங்களுக்குப் புலப்படாத.*

**நான் அனைத்துக்கும் காரணமாயினும் ஒன்றிலும் தட்டாமல் நிற்பேனெனல்.**

*சாற்றுபொருள் என்னிடத்துத் தங்காவென் தெய்விகமாம்*
*ஏற்றமுறும் யோகவியல் ஈதறிக - போற்றுமென்*
*ஆன்மா அனைத்துக்கும் ஆதியாய்த் தாங்கியுறும்*
*தான்அவற்றில் தங்கா தறி.* (ரு)

யோகவியல் - செய்கையின் சுபாவத்தை. ஆதியாய் - காரணமாய் : உண்டாக்குவதாய.

**வாயு ஆகாசத்தில் தங்கினும் அதனோ டொட்டாதது போல ஸர்வபூதங்களும் என்னிடத்தில் நிற்பன எனல்.**

*எங்குமுல வும்பெருமை ஏறும்வளி வானிடத்துத்*
*தங்கியதில் தட்டாத தன்மைபோல் - இங்குள்ள*
*பூதமெலாம் என்னிடத்துப் புக்கிருப்ப எந்நாளும்*
*ஏதமற இன்ன துணர்.* (சு)

ஏதமறப் புக்கிருப்ப என்று கூட்டுக.

**எல்லாவுயிர்களும் கற்ப முடிவில் என்னுள் ஒடுங்கிக் கற்பாரம்பத்தில் மீண்டும் வெளிப்படு மெனல்.**

*எப்பொருளும் கற்பத் திறுதிக்கண் புக்கொளிப்ப*
*ஒப்பரிய என்பகுதிக் குள்ளவைதாம் - அப்பொருளைக்*
*கற்பத் தொடக்கத்தில் காணுய்நீ மீண்டும்நான்*
*உற்பவிக்கச் செய்திடுவேன் ஊங்கு.* (எ)

பகுதி-முக்குணவடிவான தாழ்ந்த பிரகிருதி. கற்பத்திறுதி-பிரளயகாலம்.

பிரகிருதிவசத்திற்பட்ட உயிர்களை என் பிரகிருதியைத் துணையாகக்கொண்டு பலகாலும் தோற்றுவிப்பேனெனல்.

ஆரும் பகுதிவலி யால்அவசம் உற்றிடுமிப்
பாரிற் பொருள்முழு துமே பார்வேநதே - சீருறுமென்
நற்பகுதி யின்துணையால் நான்பலகால் மீண்டுலகில்
உற்பவிக்க உய்த்திடுவேன் ஊங்கு. (அ)

ஸ்ருஷ்டித்தலாலாகிய இந்தக் காரியங்களால் எனக்குப் பந்தமில்லையெனல்.

படைத்தலினும் கன்மங்கள் பார்வேந்தே பாராய்
அடுத்திடுவ தாம்பயனில் ஆசை - விடுத்தவற்றில்
பற்றற்ற ஏதிலன்போற பாஙகாகப் பண்ணிடலால்
சற்றுமெனைக் கட்டில தாம். (கூ)

படைத்தலினும் கன்மங்கள்-பொருள்களை ஏற்றத்தாழ்ச்சியாகப் படைத்தலினால் உண்டாகும் கன்மங்கள்.

ஸாக்ஷிமாத்திரமாயிருக்கும் என் ஆஜ்ஞையினாலே பிரகிருதி தோற்றுவிக்க உலகம் தோன்று மெனல்.

எப்பொருட்கும் சான்று இருந்திடுமென் ஆணையினால்
உற்பவிப்பிக் கும்பகுதி ஓருலகைச் - செப்பியஇவ்
வேதுவினால் இப்பவஞ்சம் என்றும் சுழன்றுவரும்
தீதறவே என்று தெரி. (க0)

என் ஆணையினால் பிரகிருதி உலகை உற்பவிப்பிக்கும் என்றுகூட்டுக.

என் பரத்வத்தை அறியாத மூடர்கள் என்னைக் கேவலம் மனிதனாக எண்ணி அவமதிப்பா ரெனல்.

எப்பொருட்கும் பேரான ஈசன்யான் என்னுடைய
ஒப்பிலுயர் நன்னிலையை ஓராமல் - இப்பொழுதோர்
மானிடத்தே கத்தை வகித்தவெனை வந்திகழ்வார்
ஊனெடுத்த ஏழையர்கள் ஊங்கு. (கக)

ஊனெடுத்த - மாம்ஸதேஹத்தைப் பெற்று மதிமயங்கிய.

மூடர்கள் ராக்ஷஸ அஸுரபாவங்களைப் பூண்டு என்னை இகழ்வாரெனல்.

விணாசை விண்கருமம் விணறிவார் ஏழையர்கள்
பூணுநராய் மோகம் புணர்த்துமொரு - மாணு
அரக்கரியல் ஆசுரவெந் தன்மையினை அந்தோ
தருக்கியிகழ் வாரென்னையே தாம். (௧உ)

தன்மையினைப் பூணுநராய் என்று கூட்டுக.

ஞானிகள் தெய்வபாவத்தைப் பூண்டு என்னைப் பரமாத்மா வென்றறிந்து பூஜிப்பாரெனல்.

பேரறிவு பெற்ற பெரியோர்கள் தெய்வவியல்
ஆருநராய் எப்பொருட்கும் ஆதியாய்ச் - சாருமழி
வற்றவனாய் என்னையுணர்ந் தன்புடனே பூசிப்பார்
பற்றிலராய் வேறகத்துப் பார். (௧௩)

அவர்கள் இந்த்ரிய நிக்ரஹம் முதலான விரதங்களை அநுஷ்டித்து என்னைப் பக்தியோடு பூஜிப்பாரெனல்.

இந்தியத்தைச் செற்றல் முதலா இசைக்கின்ற
சிந்தைபெய ராவிரதச் செல்வராய்ச் - சந்ததமும்
எற்றுதித்துப் பத்தியினால் என்னைவழி பட்டிருப்பர்
பற்றுமிலை பேராராய்ப் பார். (௧௪)

சிலர் விசுவதோமுகனாகிய என்னை ஞானயஜ்ஞத்தால் ஏகனாகவும் அநேகனாகவும் பாவித்துப் பூஜிப்பாரெனல்.

ஞானமெனும் வேள்வியினால் நன்கு நினைந்துதொழும்
ஏனையர்கள் எங்கும் இலங்குமுகம் - தானுடைய
என்னையே ஏகமா வேறாகப் பல்வகையா
உன்னி இறைஞ்சுவர்காண் உற்று. (௧௫)

ஏகமா - ஒன்றுதான் பரப்ரஹ்மம் என்னும் அறிவோடு. வேறாக - அந்தப் பகவானே சூரியன் சந்திரன் முதலான பேதத்தோடு பலவிதமாயிருக்கிறானென்னும் அறிவோடும்.

**நான் கிரது முதலான யாவும் ஆவேன் எனல்.**

யானே கிரதுவும் எக்கியமும் யானேகாண்
யானே பிதிர்பலியும் ஔடதமும் - யானேகாண்
மந்திரமும் யானே மருவுமொரு நெய்யும்நான்
செந்தழலும் நான்உதமும தேர். (கசு)

கிரது - வைதிக கர்மங்களுள் ஒருவகுப்பு. யஜ்ஞம் இன்னொரு வகுப்பு. ஔடதம் - நெல் முதலிய உணவுகள்; மருந்தும் ஆம். உதம் - ஹவிஸ்ஸை அர்ப்பிக்கும் செயல்.

**உலகத்துக்குப் பிதா முதலான யாவும் நானெனல்.**

பேருலகுக் கத்தனும் தாயும் பிதாமகனும்
தாரகனும் கற்றுணரத் தக்கோனும் - சீருடைய
தூய்மையுமோங் காரமும் சொல்இருக்கும் சாமமும்
வாய்மையசுர் வேதமும்நான் மற்று. (கஎ)

தாரகன் - ரக்ஷகன்.

**நற்கதி முதலானதும் நானேயெனல்.**

நற்கதியும் போடகனும் நான்உடையா னும்கரியும்
பொற்பின்உறை யுள்ளும் புகலிடமும் - அற்புடைய
நண்பனும்நான் தோற்றமும் நாசமும்நான் நற்றிதியும்
எண்ணிதியும் பீசமும்நான் ஈங்கு. (கஅ)

கதி - கர்மங்களின் பயன். போடகன் - வளர்ப்பவன். உடையான் - பிரபு. கரி - ஸாக்ஷி. உறையுள் - வாழுமிடம். நண்பன் - கைம்மாறு வேண்டாது உதவிபுரிவோன். நிதி - பொக்கிஷம்.

### வெயில் முதலிய கொடுப்பவனும் அமிர்தமுதலிய பொருள்களும் நானேயெனல்.

வெயிலருள்வேன் விண்ணருள்வேன் விண்பொழியா தாங்குஞ்
செயல்புரிவேன் சீரமுதத் தோடு - வயமார் [நீத
மிருத்துவும்நான் உண்மையும்நான் இன்மையும்நான் வென்
திருத்தவிரா வேந்தே தெரி. (கக)

அமுதம் - சாகாமை.

### ஸகாமர்களாகிய அந்தணர் வேள்விகளால் என்னைப்பூஜித்து ஸ்வர்க்கத்தைப் பெறுவாரெனல்.

மும்மறையும் தேர்ந்த முனிவோர்கள் சோமநுகர்
செம்மையராய்த் தீவினையிற் நீர்ந்துநனி தூயவராய்
மெய்ம்மையுறு வேள்விகளால் மேவியெனை பூசித்து
வெம்மைதவிர் வானுலகை மேவவவர் வேண்டுவோர்
நன்மையின்அவ் வானமரர் நாயகனன் னுடைந்து
வண்மையுறு போகமெலாம் வானகத்து மாண்பார
வுண்மையுடன் உண்டுவப்பர் ஊங்கு. (உ0)

சோமம்-யாகத்தில் உபயோகிக்கும் ஒருவகைக் கொடியின்சாறு.

### பின்பு புண்யம் தேய்ந்தவுடன் மீண்டும் இந் நிலவுலகில் வந்து பிறப்பாரெனல்.

அன்னார்கள் அந்தப் பெருந்துறக்கத் தாரும்நலன்
நன்னார்நெடு நாளுண்டு நல்வினைகள் தேய்ந்திடலும்
பின்னரும்இப் பூவுலகைப் பெற்றிடுவர் இப்பரிசு
மன்னுமறை மூன்றில் வருத்தஅறம் பின்பற்றி
உன்னியுறு காமத் துளம்பதிந்தார் ஆயுறுவர்
இன்னலொடு போதல்வரல் ஈண்டு. (உக)

இவர்கள் போவதும் வருவதுமன்றி ஸ்வதந்த்ரமான நிலைமையை ஓரிடத்திலும் பெறுவதில்லை என்பது பொருள்.

என்னையேதியானித்திருக்கும் பக்தர்களுடைய யோகக்ஷேமங்களை நான் வஹிப்பேனெனல்.

என்றனையே சிந்தனைசெய் தென்னில்வே றல்லாராய்
மன்றவெனை யெங்கும் வழிபட்டே - என்றுமநிலை
அன்புடையார் தங்கட் களிப்பேன் அளித்தவற்றை
இன்புடனே காத்திடுவேன் யான். (உஉ)

இதர தேவதைகளைப் பூஜிப்பவரும் ஒருவாறு என்னையே பூஜிக்கின்றார் எனல்.

சித்தியருள் வேறுபல தேவர்களைச் சென்றடுத்துப
பத்தியொடு நன்கு பரவுநரும் - முத்திதரும்
என்னையே பூசித் திறைஞ்சிடுவார் ஆவார்காண்
பன்னுமவி தியாமையினுற் பற்று. (உ௩)

வேள்விகளை உண்டு அவற்றின் பலத்தைக் கொடுப்பவன் நானே, ஆயினும் அவ்வுண்மையை அறியாராய்த் தக்க பயன் அடைகின்றிலர் எனல்.

வேள்வியெலாம் உண்பவனும் மேவனைக்கு நாதனும்நான்
ஆள்வினையில் வல்ல அரசேகேள் - நீள்புவியில்
என்னையறி யார்மெய்யா ஆதலினால் ஏற்றபயன்
தன்னையடை யாரவர்கள் சார்ந்து. (உ௪)

தேவதைகள் முதலானோரைப் பூஜிப்பவர் அவர்களையே அடைவார்கள், என்னைப் பூஜிப்பவர் என்னையே அடைவாரெனல்.

தெய்வவிர தத்தர் பிதிர்விரதர் சேர்பூத
மெய்விரதர் அவ்வவரை மேவிடுவார் - பொய்யில்
எனைப்பூசிப் போர் என்றனையே என்றும
இனிப்புறவே எய்துவர்கள் ஈண்டு. (உ௫)

பக்தியோடு கொடுப்பது பத்திரமாயினும் கனியாயினும் நீராயினும் நான் மகிழ்ந்து கொள்ளுவேனெனல்.

யாவனே பத்தியொடும் என்பொருட்டுப் பச்சிலையும்
பூவும் நறுங்கனியும் பூம்புனலும் - ஏவனே
தூமனத்தன் அன்னோன் துலங்கக் கொடுத்தவற்றை
நான்மகிழ்ந்து கொள்ளுவனே நன்கு. (உ௬)

எதைச்செய்யினும் எதைப்புசிக்கினும் எனக்கர்ப்பணமாகச் செய்யெனல்

யாதொன் றியற்றினும் யாது நுகர்ந்திடினும்
யாதொன்றை ஓமித்தங் கீந்திடினும் - யாதோர்
தவஞ்செயினும் குந்தி தவப்புதல்வ செய்வாய்
உவந்தெனக்கிங் கர்ப்பணமா ஓர்ந்து. (உ௭)

ஸந்யாஸ யோகத்தால் கர்மபந்தம் நீங்கினையாயின் என்னை அடைவாயெனல்.

நல்லனவும் தீயவுமாய் நண்ணும் பயன்களுறும்
சொல்லரிய கன்மத் தொடக்கிவ்வா - றல்லலற
நீங்குவையேற் சந்யாச யோகத்தை நேர்ந்தென்னை
ஆங்கடைவாய் கன்மமெலாம் அற்று. (உ௮)

எனக்கு உறவுமில்லை பகையுமில்லை, பக்தரிடத்தில் நானிருப்பேன் என்னிடம் பக்தர்கள் இருப்பாரெனல்.

எவ்வுயிர்க்கண் உள்ளும் இருப்பேன் ஒரேநிலையாத்
தெவ்வுமிலை சேரும் உறவுமிலை - தவ்வலறு
பத்தியினால் என்னைப் பரவுநரென் பாலுளர்யான்
அத்தகையர் பாலுமுளன் ஆர்ந்து. (உ௯)

**துராசாரம் உடையவனும் என்னையே பூஜிப்பானாயின் பரிசுத்தனாவானெனல்**

*தீயொழுக்கம் மிக்கோனும் தெய்வமது வேறொன்றை*
*ஆயுமனம் இல்லா தடுத்தென்னையே - நேயமுடன்*
*போற்றுவனேல் ஏதமறு புந்திநிச்சயம்கொளலால்*
*வற்றமுறு தூயோனும் ஈங்கு.* (௩௰)

**அவன் சிறிதுகாலத்திலேயே மோக்ஷத்தை அடைவார்; என்பக்தன் என்றும் கெடுதியை அடையானெனல்.**

*சிற்பொழுதில அன்னோன் அறத்திற் செறிந்தோனாய்*
*எப்பொழுதும் சாந்தியினை எய்துவனால் - பொற்புறுமென்*
*பத்தனென்றும் கேடு படானென்று நிச்சயமாய்ச்*
*சித்திரவிற் சேவகநீ செப்பு.* (௩௧)

**பெண்டிர்முதலானவரும் என்னைச் சேவிக்கின் மோக்ஷத்தைப் பெறுவரெனல்.**

*பெண்டிரும் வாணிகரும் பிறதவிர் சூத்திரரும்*
*கொண்டிடுதீனக் குலத்தினரும் - அண்டியெனை*
*மிக்காரச சேவித்து மேலான நற்கதியிற்*
*புக்கார் வாழ்ந்திடுவார் போந்து.* (௩௨)

**ஆதலின் பிராமணரும் க்ஷத்திரியரும் அடைதலைப்பற்றிச் சொல்வ தநாவசிய மெனல்.**

*புண்ணியநற் பூசுரரும் போதமலி ராஜரிஷிக்*
*கண்ணியரும் மேலாம் கதியதனை - நண்ணுதலைச்*
*சொற்றிடலிங் கென்னே துயர்மலிபுன் வாழ்விதனைப்*
*பெற்றுளநீ நன்கென்னையே பேண்.* (௩௩)

### நீ என்மீது மனம்வைத்துப் பக்திசெய்யின் முக்தியடைவாயெனல்.

*வைத்திடுகென் மீது மனம்புரிக வேள்வியெனைப்*
*பத்தியொடும் பாதம் பணிந்திடுக - உத்தமமாம்*
*நற்கதியா எண்ணி நவையில்மனம் வைத்தலினால்*
*உற்றிடுவாய் என்னை உவந்து.* (௩௪)

ராஜவித்யா ராஜகுஹ்யயோகம் முற்றிற்று.



## பத்தாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.



1-11. பகவானது விபூதியோக ஞானத்தைச் சுருக்கி உபதேசித்து அந்த ஞானத்தின் பலம் கூறுதல்.

12-18. விபூதியோகத்தை விஸ்தரித்துச் சொல்ல வேண்டுமென்று அருச்சுனன் கேட்டல்.

19-42. விபூதி யோகத்தை விஸ்தரித்துக் கூறுதல்.

# பத்தாம் அத்தியாயம்.

# விபூதியோகம்.

## காப்பு.

*சிந்திப்பார் உள்ளச் செழுந்தவிசில் மேயானை*
*வந்திப்பார் வல்வினையை மாற்றுநனை - முந்திப்பார்*
*ஈரேழும் உண்டுமிழ்ந்த எந்தலைநெஞ் சேயெண்ணி*
*ஓரேழ் பிறப்பறுப்பாய் உற்று.*

## பாயிரம்.

*ஓங்குபொருள் எவ்வெவற்றில் ஓதருதன் பூதிவிரிந்*
*தாங்குநிலை கொண்டிருப்ப தப்பொருளைத் - தூங்கும்*
*களிறனையான் கேட்பக் கழறியவன் மோக*
*அளறொழிப்பான் அச்சுதனும் ஆர்ந்து.*

---

## நூல்.

**இன்னமும் நான் சொல்லும் மேலான வார்த்தையைக் கேளென்று பகவான் கூறுதல்.**

*உள்ளமகிழ் வோங்கும் உனக்கிங் கிதம்புரியக்*
*கொள்ளும் விருப்பதனாற் கூறுமொரு - விள்ளரிய*
*மேலான என்மொழியை மீண்டும்கேள் வெற்றிமலி*
*மாலார் வரைப்புயத்தாய் வாய்த்து.* (க)

இதம்புரிய - அநுபவத்தால் அறிதற்கரிதான மெய்யறிவை கொடுக்க. மேலானமொழி - மேலானபொருளை வெளியிடும்மொழி.

### என் பெருமையை ஒருவரும் அறியார்கள், நான் தேவர் முனிவர் யாவருக்கும் ஆதியானேனெனல்.

என்மகிமை தன்னை இமையோர் இருங்குலமும்
தொன்முனிவர் தாமும் அறிந்தறியார் - மன்றும்
சுரர்முனிவர் எல்லோர்க்கும் தோன்முதல்நான் ஆவேன்
அரியமுதல் எத்திறத்தும் ஆங்கு. (௨)

'ப்ரபவம்' என்னும் முதல்நூல் மொழிக்குப் 'பிறப்பு' என்று இன்னொரு பொருளும் கொள்ளலாகும். 'நான் முதல் ஆவேன்' என்று கூட்டுக.

### என் பெருமையை அறிபவர் மோஹம்நீங்கிப் பாவ நிவிர்த்தியை அடைவாரெனல்.

பிறவாத ஆதியிலாப் பெற்றியனை என்னை
இறையாவும் எவ்வுலகுக் கட்டும - அறிகின்றான்
ஆடவருள் என்றும் மயங்கான் அரும்பவத்தின்
விடுறுவன் வேந்தே மிக. (௩)

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

### உயிர்களுக்குப் புத்தி முதலிய வெவ்வேறு குணங்கள் என்னால் உண்டாகின்றன எனல்.

புத்தியொடு ஞானம் புகர்செய்மயல் இன்மைகமை
சத்தியம்தமம்சமம்உட் சார்சுகமும் - மொய்த்துவரும்
துக்கமுடன் தோற்றம் இறப்பச்சம் அஞ்சாமை
மிக்கதிறல் வேந்தேகேள் மீது. (௪)

புத்தி - நுட்பமான பொருள்களைத் தெரிந்துகொள்ளும் திறமை. ஞானம் - ஆத்மா முதலிய பொருள்களை உணர்தல். கமை - பொறுமை. தமம் - இந்திரியங்களை அடக்கல். சமம் - அந்தக் கரணங்களின் அமைதி. தவம் - இந்திரியங்களை ஒடுக்கிச் சரீரத்தை வருத்தப்படுத்தல்.

துன்பமிழை யாமைசந் துட்டி தவம்சமதை
அன்பினருள் தானம் அரியபுகழ் - வன்பினப
கீர்த்தியிவை பல்விதமும் கிட்டுவன ஆருயிர்க்குப்
பார்த்தஅருள் என்னின்றும பார். (௫)

சமதை - நடுவுநிலைமை.

ஏழு முனிவரும் நான்கு மநுக்களும் என் மனத்தில் உற்பவித்தாரெனல்.

ஆதியினேழ் மாமுனிவர் அவ்வாறே நான்மநுக்கள்
ஓதும்நினைப் பென்பால் உறுமிவர்தாம் - ஏதமற
என்மனத்தே உற்பவித்தார் இன்னோர் இடத்துதித்த
நன்மையினில் எவ்வுயிரும நாடு. (௬)

என் விபூதியையும் யோகத்தையும் உண்மையாய் அறிபவன் உறுதியான ஞானத்தைப் பெறுவான் எனல்.

இத்திறத்தென் பூதியினை ஏற்றமுறும் யோகத்தை
மெய்த்திறத்தின் ஒருபவன் வேந்தேகேள் - சற்றும்
தளராத யோகத்தைச் சார்ந்திடுவான் அன்னோன்
அளியுடையாய் ஐயமிலை ஆங்கு. (௭)

யோகம் : முன்னதற்கு பொருள்களை ஸ்ருஷ்டிக்கும் ஸாமர்த்தியம் என்றும், பின்னதற்கு மெய்யறிவிலே அசையாமல் நிலைத்தல் என்றும் பொருள் கொள்க.

எல்லா உலகமும் என்னிடத்திருந்து உற்பத்தியாதும், இதை அறிந்து ஞானிகள் என்னைப் பூஜிப்பரெனல்.

எவ்வுலகும் தோன்றற் கிடமாவேன் என்னின்று
மெய்வகையின் யாவும் வெளிப்படுமே - இவ்விதத்தை
நன்கறிந்து பூசிப்பர் ஞானிகடாம் என்றனையே
என்கணியல் பாவனையோ டேய்ந்து. (௮)

அந்த ஞானிகள் என்னைத் தியானித்து என் புகழைப் பாடுவாரெனல்.

அவ்வறிஞர் சிந்தையையும் ஆவியையும் என்கணமைத்
தெவ்வெற என்னையொரு வாசகமொருவா - செவ்வியுறப்
போதிப்பர் பேசிடுவர் போதும்நிறை வைப்பெறுவர்
மோதிபபா காதலினால் முன். (௯)

நிறைவு - ஸந்துஷ்டி: திருப்தி.

என்னை அடைதற்கு ஸாதகமாகிய புத்தி யோகத்தை என் பக்தர்களுக்கு உபதேசிப்பேனெனல்.

என்னையிவர் யாதொன்றால் எய்துவரோ வதமிலா
தன்னதொரு புத்தியோ கந்தனை - மன்னும்
மனமுடைய ராயென்றும் மாஞ்சையுடன் போற்றி
நினையும்இவர்க் கீவேன்யான் நேர்ந்து. (௧0)

மன்னும் - ஒரு நிலைப்பட்ட.

அஞ்ஞானமாகிய இருளை ஞானமான தீபத்தால் நான் அவர் புத்தியில் இருந்து போக்குவேன் எனல்.

அஞ்ஞானத் தாற்பவித்த ஆரிருளை ஆரிய
மெய்ஞ்ஞானம் என்னும் விரிசுடரால் - எஞ்ஞான்றும்
மற்றிவர்தம் சித்தத்தில் வாய்த்திருந்து போக்கிடுவேன்
உற்றஅரு ளால்இரங்கி ஓர். (௧௧)

அஞ்ஞான...இருள் - அவிவேகத்தால் உண்டான பொய்யறிவாகிய மயக்கவிருள். சுடர்-தீபம்.

அருச்சுனன் பகவானைத் துதித்தல்.

மேலாம் பிரமமுநீ மேலான பேரொளியும்
மேலாம் புனிதமுமா மேவுவைநீ - மேலோனே
நித்தன்நீ எங்கும் நிறைவாய் பிறப்பிலிநீ
சுத்தன்முத லாம்கடவுள் நீ. (௧௨)

உன் பெருமையை ருஷிகள் எல்லாரும் கூறியிருக்கிறார்கள், நீயும் இன்று கூறினாயெனல்.

பன்முனிவர் தாமும் பகர்அசிதர் தேவலரும்
தொன்முனிவர் நாரதரும் தூய்மையுறு - சொன்மலிவி
யாதருமே கூறியுளார் இத்திறத்தை நீயும்இன்
றோதினாய் உற்றுணர ஊங்கு. (கங)

நீ கூறியதெல்லாம் உண்மையே, உன் வடிவத்தை தேவரும் அஸுரரும் ஒருவரும் அறியாரேனல்.

அத்தனே நீயின் றருளால் அறைந்தவெலாம்
சத்தியமென் றிங்குணர்ந்தேன் சாற்றியநின் - உத்தமமாம்
நல்வடிவை வானவரும் நாடி உணர்ந்திலரால்
வல்லசுர ரும்தெரியார் மற்று. (கச)

உன் பெருமையை நீயே உணர்கின்றாயெனல்.

புருடோத் தமபூத பாவன்பூ தேச
திருவுடைய தேவர்க்குத் தேவே - விரியும்
சகப்பதியே தானாகத் தன்னால்நின் பேராம்
மகத்துவம்நீ தேர்கின்றாய் மற்று. (கரு)

உனது விபூதியெல்லாம் எடுத்துரைக்க வல்லவன் நீயேயெனல்.

அற்புதமாம் யாதோர் விபூதியினால் ஆரியனே
ஒப்பவுல கெங்கும்நிறைந் துள்ளாயோ - செப்பருமப்
பூதிவடி வத்தனையும் பொற்புடனே விண்டுரைக்கப்
போதுதகை பெற்றுளோநீ புக்கு. (கசா)

போதுதகை - போதுமான ஸாமர்த்தியம்.

உன்னை நாடீ எப்பொருளில் எவ்வாறு அறியத் தருமெனல்.

எப்பொழுதும் சிந்தித் திருக்குமியல் பெற்றுநான்
செப்பரிய செல்வமிறை தேவனே - எப்படிநின்
றன்னை அறி கிற்பதுநீ சற்பொருள்கள் எவ்வெவற்றில்
உன்னஉரி யாய்அதனை ஓது. (௧௭)

உன் விபூதியையும் யோகத்தையும் விரித்துச்
சொல்லவேண்டுமெனல்.

வித்தரித்துன் மேலாம் விபூதியினை யோகத்தை
உத்தமனே மீண்டும் உரைத்திடுவாய் - புத்தமுதம்
போலும்உரை நின்வாயாற் போதச செவிமடுத்தும்
ஏலும் திருத்தியிலேன் ஈங்கு. (௧௮)

என் பூதிக்களவில்லையாதலின் சிலவற்றைச்
சொல்வேனெனல்.

அருட்குரியாய் நிற்கென் விபூதிகளுள் ஆய்ந்து
திருக்கிளரும் சில்லவற்றைச் சொல்வேன் - பெருக்கமுறும்
என்னரிய பூதிவிரி விற்கிறுதி இல்லையெனக்
கன்னவிலும் தோளாய்நீ காண். (௧௯)

நான் எல்லா உயிருள்ளும் விளங்கும் பரமாத்மாவும்
எவ்வுயிர்க்கும் ஆதிமத்யாந்தமும் ஆவேனெனல்.

எவ்வுயிர்க்கண் உள்ளும் இலங்குபர மான்மாநான்
எவ்வுயிர்க்கும் ஆதி இடையும்நான் - எவ்வுயிர்க்கும்
அந்தமும்நான் என்றே அடலார் அருச்சுனநீ
சிந்தையுற நன்கு தெரி. (௨௦)

**நான் விஷ்ணுவும், சூரியனும், மரீசியும், சந்திரனும் ஆவேனெனல்.**

ஆதித்த ருட்டகைசேர் விட்டுணுயான் ஆரொளியுள்
சோதிச சூடரோன்யான் தொன்மருத்துள் - மேதகமார்
வெண்மரிசி நான்காணும் வானூர் உடுக்கணத்துள்
ஒண்மதியம் யானே உணர். (உக)

மருத் - ஓர் தேவதாவகுப்பு. மேதகம் - மேன்மை.

**நான் ஸாமமும், இந்திரனும், மனமும், அறிவும் ஆவேனெனல்.**

வேதத்துட் சாமம்நான் மேலான விண்ணவருட்
போதுற்ற காவிற் புரந்தரன்யான் - ஓதுற்ற
இந்தியத்துள் நன்மனமயான் எண்ணுமுயிர் தோறும்நான்
முந்தும்அறி வாவேனநீ முன். (உஉ)

காவில் - கற்பகநிழலில் வீற்றிருக்கும். புரந்தரன் - இந்திரன்.

**நான் சங்கரனும், குபேரனும், அக்கினியும், மேருவும் ஆவேனெனல்.**

உருத்திரருட் சங்கரன்யான் ஓதியக்க ரோடு
பெருத்தஅரக் கர்குலதநுட் பேசும - அருத்தபதி
ஆவேன் வசுக்களுளே அக்கினியான் மால்வரையுட்
கோவாகும் மேருவெனக் கொள். (உங)

அருத்தபதி - குபேரன். கோ - அரசு.

**நான் பிருஹஸ்பதியும், ஸ்கந்தனும், ஸமுத்திரமும் ஆவேனெனல்.**

புரோகிதர்க ளுட்சிறந்த பொன்னுவேன் ஓர்தி
பராவுறுசே னுபதியுட பாகு - இராறுடைய
சூர்வலிகொள் கந்தன்யான் தோயநிலை கட்குளகல்
ஆர்கலியான் ஆவேன் அறி. (உச)

பொன் - பிருஹஸ்பதி. பாகு - புஜம்: தோள். ஆர்கலி - ஸமுத்திரம்.

**நான் பிருதவும், ஓங்காரமும், ஜபமும், இமயமும் ஆவேனெனல்.**

மாதவரு ளேபிருகு மாமுனியான் வாக்குகளுள்
ஓதரிய ஓங்காரம் ஒருகயான் - நீதகனும்
வேள்விகளுள் மெய்ச்செபமநான் மேலான தாவரத்துள்
நீளிமய பூரிகழ்வேன் நின்று. (உ௫)

தாவரம் - அசையாப்பொருள்.

**நான் அசுவத்தமும், நாரதனும், சித்ராரதனும், கபிலனும் ஆவேனெனல்.**

ஆரும் தருக்களுளே அசுவத்தம் ஆரிடருட்
சீருடைய நாரதன்யான் தேர்வேந்தே - எருடைய
கந்தருவர் தம்முட் கவின்தேரோன் யான்கபிலன்
முந்துமொரு சித்தருளே முன். (உ௬)

ஆரிடருள் - தேவ ருஷிகளுள். தேவர்களாகவே இருப்பவர்கள் மந்திரங்களைக் காண்பவராயிருந்ததலால் ருஷித்தன்மையை அடைந்தவர்கள். சித்தர் - பிறக்கும்போதே தரும ஞான வைராக்கியங்களை மிகுதியாகப் பெற்றவர்கள்.

**நான் உச்சைசிரவமும், ஐராவதமும், அரசனும் ஆவேனெனல்.**

வாம்பரிகள் உள்ளேயவ் வானமுதத் தோடுதித்த
பூமபரியான் பொங்குசினப் பூட்கைகளுள் - தேமபில்
அயிரா வதமாவேன் ஆடவருள் ஓங்கும்
வயமேறும் மன்னவன்யான் மற்று. (உ௭)

பூட்கை - யானை. தேம்பில் - மெலிவில்லாத. வயம் - வெற்றி.

**நான் வஜ்ரமும், காமதேநுவும், மன்மதனும், வாஸுகியும் ஆவேனெனல்.**

ஆயுதங்க ளுட்குலிசம் ஆன்குலத்துள் தேனுஉயிர்
காயமதில் தோற்றுதற்குக் காரணமா - மேயமதன்
ஆவேன்ஓர் சென்னி அரவின் குலத்துள்ளே
கோவான வாசுகிநான் கொள். (உ௮)

குலிசம் - வஜ்ராயுதம். தேனு - காமதேநு. கோ - அரசன்.

**நான் சேஷனும், வருணனும், அர்யமனும், யமனும் ஆவேனெனல்.**

*நாகங்க ளுட்சேடன் நண்ணிநீர் வாழ்பவருள்*
*வாருடைய மன்வருணன் மற்றுமேவன் - போகப்*
*பிதிரர்களுட் பேரரிய மானுமேவன் தண்டம்*
*விதிசெய்வா ருள்ளியமன் மிக்கு.* (உகூ)

**நான் ப்ரஹ்லாதனும், காலனும், சிங்கமும் கருடனும் ஆவேனெனல்.**

*சீரார் தயித்தியருள் தேர்பிரக லாதன்யான்*
*காரார் கணிப்பவருட் காலன்யான் - பேரார*
*விலங்கினத் துட் கோளரியான் மேவுபல புள்ளுள்*
*இலங்குவணம ஆவேன்யான் ஈங்கு.* (ஙூ0)

*தயித்தியர் - அஸுரர். காரார்-பெருமைபொருந்திய. கோளரி-சிஙகம். உவணம் - கருடன்.*

**நான் வாயுவும், ராமனும், மகரமும், கங்கையும் ஆவேனெனல்.**

*பாவனம்செய் பல்பொருளுட் பாராய் பவனன்யான்*
*காவல்மலி கைப்படைகொள் காவலருள் - மேவும்ரகு*
*ராமன்யான் மீனினத்துள் நான்மகரம் நற்புனலுள்*
*தேமலியும் கங்கையெனத் தேர்.* (ஙூக)

*பவனன் - காற்று.*

**நான் பஞ்சபூதங்களுக்கு ஆதிமத்யாந்தமும், ஆத்மவித்தையும், வாதமும் ஆவேனெனல்.**

*ஐம்பெரிய பூதங்கட் காதிநடு அந்தம்யான்*
*கம்பமறு கல்விகளுட் காணுப்நீ - இன்பமருள்*
*ஆன்மவியல் தேற்றும் அருங்கலைநான் வாதிப்போர்*
*பான்மையுறு வாதமும்நான் பார்.* (ஙூஉ)

நான் அகாரமும், த்வந்த்வமும், காலமும், பிரமனும் ஆவேனெனல்.

அக்கரங்களுள்ளே அகாரம்நான் ஆறுவகைத்
தொக்கசமாசத்துள் தொந்துவம்நான் - எக்காலும
நாசமறு காலமும்நான் நாடி வினைப்பயனைத்
தேசினருள் நான்முகன்யான் தேர். (௩௩)

நான் மிருத்யுவும், செல்வமும், லக்ஷ்மியும், ஸரஸ்வதியும், நினைவும், புகழும், ஞானமும், உறுதியும், க்ஷமையும் ஆவேனெனல்.

எல்லாம கவரும் மிருத்யுவும்நான் எங்காவார்
மல்லாரும் ஆக்கமும்நான் மாதருளே - நல்லாளும்
வாணியும் நன்னினைவும் வண்புகழும் ஞானமும்
கோணில்துணிவும்கமையும் கொள். (௩௪)

நான் ப்ருஹத்ஸாமமும், காயத்ரியும், மார்கழியும், வஸந்தமும் ஆவேனெனல்.

சாமத்துளேபிருகத் சாமமுமநான் சந்தத்துள்
தோமறுகா யத்திரிநான் தூயாய்கேள் - தீமையறு
மாதத்துள் மார்கழியும் மாசில்இருதுக்களுளே
போதுற்ற வேனிலும்யான் போற்று. (௩௫)

நான் சூதாட்டமும், தேஜஸ்ஸும், வெற்றியும், முயற்சியும், ஸத்வமும் ஆவேனெனல்.

வஞ்சகர்தம் சூதும்நான் மாவொளிசேர் வார்தமது
விஞ்சொளிநான மேவிய வெற்றிநான் - எஞ்சா
முயற்சியும்நான் சத்துவத்து முன்னவர்பால் மேய
அயர்ச்சியறு சத்துவம்நான் ஆங்கு. (௩௬)

**நான் கண்ணனும், அருச்சுனனும், வியாஸனும், சுக்கிரனும் ஆவேனெனல்.**

*யாதவருட் கண்ணன்யான் எண்மலியும் பாண்டவருள்
மேதகமார் பார்த்தன்யான் வேதமுனி - நாதர்களில்
மாதவமார் வியாதன்யான் வண்கவிஞர் தம்குலத்தில்
ஓதுமுயர் சுக்கிரன்யான் ஓர்.* (௩௭)

மேதகம் - மேன்மை.

**நான் தண்டமும், நீதியும், மௌனமும், ஞானமும் ஆவேனெனல்.**

*தண்டிப்பார் தண்டமும்நான் தக்கவ்யம் வேண்டுமவர்
கொண்டதொரு நீதியும்நான் கூறரிதென் - றென்றும்
மறைப்பவற்றுள் மௌனம்யான் மாணறிஞர் பெற்ற
சிறப்புடைய ஞானமும்நான் தேர்.* (௩௮)

**நான் எவ்வுயிர்க்கும் வித்தாயிருப்பவன்; சராசரங்கள் ஒன்றும் என்னை விட்டிருக்க முடியாதெனல்.**

*யாதொன்று வித்தாகும் எவ்வுயிர்க்கும் யானதுகாண்
ஓதும் சராசரமாய் ஓங்கிவளர் - பூதங்கள்
ஒன்றேனும் என்னை ஒழிந்திருக்க வன்மையுள
தன்றேயிவ் வுண்மை அறி.* (௩௯)

**என் விபூதிக்கு அளவில்லை; அதிற் சிறிதே உனக்குக் கூறினேனெனல்.**

*அற்புதமாம் என்றன் விபூதிக்கோர் அந்தமிலை
விற்படையில் வல்ல விறலோனே - பொற்புடைய
பூதவிரி விற்சிறிதோர் கூறே புகன்றிட்டேன்
ஏதமறத் தேர்ந்திடுவாய் ஈங்கு.* (௪௰)

**திருவும் தேசும் குணாதிசயமுமான பொருள்களெல்லாம் என் தேஜஸ்ஸில் ஒரு பாகத்தால் உண்டாகுமெனல்.**

*திருவுடைய தாய்விளரும் தேசுடைய தாகி*
*மருவும் குணாதிசயம் வாய்த்த - பொருவில்பொருள்*
*என்னுளவோ அன்னவெலாம் என்தேசின் ஓர்கூற்றால்*
*மன்னுலகில் தோன்றும் மதி.* (சக)

**அகிலலோகங்களையும் என்னுடைய ஒருபாகத்தால் நான் தாங்கி நிற்பேனெனல்.**

*இப்பரிசின் ஈறில் பெரும்பொருளில் சிற்சிலவாச்*
*செப்பியறி யும்அறிவாற் சேர்பயன்யா - தெப்புவியும்*
*என்னுடைய கூறொன்றால் யானெளிது தாங்கிடுவேன்*
*கன்னவில்தோ ளாயிதுநீ காண்.* (சஉ)

விபூதியோகம் முற்றிற்று.



## பதினோராம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1-4. விசுவரூபத்தைப் பார்க்கவேண்டு மென்னும் இச்சையால் அருச்சுனன் பகவானைப் பிரார்த்தித்தல்.

5-8. பகவான் அருச்சுனனோடு அவ்வுருவைப் பாரென்று கூறுதல்.

9-14. திருதராஷ்டிரனோடு சஞ்சயன் பகவான் அருச்சுனனுக்கு விசுவரூபம் காட்டியருளினாரென்று கூறுதல்.

15-31. பகவானால் காட்டப்பட்ட விசுவரூபத்தை அருச்சுனன் அநுபவத்தில் காண்கின்றேனென்று கூறிவிவரித்தல்.

32-34. பூபாரத்தை நீக்குதற்கு அவதரித்துள்ளேன்; ஆதலின், என்னாலேயே இவரெல்லாம கொல்லபபடுவார்கள், நீ நிமித்தமாத்திரமே என்று கூறல்.

36-43. அருச்சுனன் தோத்திரம்.

44-46. முன் னுருவத்தைக் காட்டவேண்டு மென்று அருச்சுனன் பிரார்த்தித்தல்,

47-49. பகவான் அருச்சுனனைத் தேற்றுதல்,

51. முன்னுருவைக் கண்டதனால் அருச்சுனனுக்குண்டாகிய மகிழ்ச்சி கூறல்.

52-54. இந்த விசுவரூப தரிசனம் பக்திமான்களுக்கேயன்றிப் பிறருக்குப பெற லரிதெனல்.

55. ஈசுவரார்ப்பணமாகக் கர்மங்களைச் செய்பவருக்குப் பகவத்பக்தி உண்டாமெனல்.

# பதினோராம் அத்தியாயம்.

# விசுவரூபசந்தர்சனயோகம்.

## காப்பு.

மெய்ஞ்ஞானம் என்னும் விரிசுடரை ஏற்றிமனத்
தஞ்ஞானக் கங்குல் அறநீக்கி - எஞ்ஞான்றும்
வியாதநு இன்பத்தில மேவ விடுத்தருளும
காயாம்பூ வண்ணன் கழல்.

## பாயிரம்.

எவ்வுலகும் ஓங்கி இருக்குமொரு பேருருவச்
செவ்வினிதனைக் காணவிழை தேர்விசயற - கவ்வுருவைக்
காட்டியவன் மோகமெனும் கட்டறுபபான் காரவண்ணன்
ஈட்டரிய பேரருளால் ஈங்கு.

---

## நூல்.

### எனக்குபதேசித்த அதிரஹஸ்யமான ஆத்மநுபந்தை விளக்கும் தேவரீர் வாக்கினால் என்மோஹம் நீங்கிற்றென்று அருச்சுனன் சொல்லல்.

என்னலத்துக் காக இலங்கும் மறைப்பொருள்கள்
அன்னவற்றுள் மேலாகும் அத்யான்மம் - தன்னை
எடுத்துரைக்கும் நின்னுரையால் இன்றொழிந்தேன் எந்தாய்
அடுத்திடுமென் மோகமெலாம் ஆங்கு. (க)

என்னலத்துக்காக - எனக்கு நன்மையுண்டாகும் பொருட்டு. இதனை 'எடுத்துரைக்கும்' என்பதோடு கூட்டுக. மறைப்பொருள்கள் அன்னவற்றில் - ரஹஸ்யப் பொருள்கள் எல்லாவற்றினும். அத்யான்மம் - ஆத்மாநாத்ம விவேகத்தைக் கூறுவது.

**அன்றியும், உயிர்களின் தோற்றமும், நாசமும், தேவரீரது மஹத்துவமும் உரைக்கக் கேட்டேனெனல்.**

*பல்பொருளின் உற்பவமும் வீவும் பரக்கவிவண்*
*சொல்லியான் கேட்டுத் துகளற்றேன் - மல்லலுறும்*
*உன்முடிவில் மான்மியமும் உற்றுரைக்க நான்கேட்டேன்*
*நன்முளரிக் கண்ணா நயந்து.* (௨)

*துகள் - மோஹம்.*

**தேவரீரது பெருமைகளை உணர்ந்தேன்; உமது ஈசுவர ரூபத்தைக் காணவும் விரும்புகிறேனெனல்.**

*நின்பெருமை யாவும் நிகழ்த்தியவா றுண்மையெனக்*
*கொன்பெரிய கோவேநான் கொண்டிட்டேன் - மன்பெரிய*
*ஈசவடி வந்தனையும் எந்தாய் விழைந்தேன்யான்*
*மாசகலக் காணவிங்கு மற்று.* (௩)

*கொன்பெரிய - மிகப்பெரிய. ஈசவடிவு - ஞானம், ஆட்சி, சக்தி, பெருமை, வீரம், ஒளி முதலியவற்றோடு கூடிய விஷ்ணுவுககுரிய ரூபம்.*

**அந்த ரூபத்தைக்காண நான்சக்யனாயின் அதனைக்காட்டியருளவேண்டுமெனல்.**

*அவ்வுருவைக் காணலெனக் காகுமென எண்ணுதியேல்*
*செவ்வுருவிற் கார்முகிலைச் செற்றோனே - எவ்வமறும்*
*நின்னுருவம் அன்னதனை நேர்ந்திடுமா யோகேச*
*என்னிருகண் முன்னருள்வாய் ஈங்கு.* (௪)

*ஆகும் - முடியும். எவ்வமறும் - அழிவில்லாத. நேர்ந்திடுமா - எதிரேகாணுமாறு.*

எனது எண்ணிறந்த வடிவங்களைக் காட்டுவேன் பார் என்று பகவான் கூறல்.

பாராய் படிவங்கள் பார்த்தஇவண் பன்னூறாய்ப்
பேராரபல்லாயிரமாய்ப் பேசும்வகை - ஆர்வினவாய்த்
திப்பியமாய் வெவ்வேறு தேசார் நிறம்வடிவோ
டொப்பிலவாய் உற்றவற்றை ஊங்கு. (ரு)

படிவம் - ரூபம். திப்பியம் - திவ்யம்: பிரகிருதியினால் ஆகாத.

ஆதித்யர், வஸுக்கள், ருத்ரர், அசுவினிதேவர், மருத்துக்கள் முதலானோரைப் பாரெனல்.

ஆதித்தர்க் காணாய் வசுக்கள் உருத்திரரைத்
தீதற்ற அச்சுவினித் தேவர்களை - ஓதும்
மருத்துவரை முன்காணு மற்றுளபல் விந்தை
திருத்தமுறக் காணுகநீ தேர்ந்து. (சு)

விந்தை - ஆச்சரியகரமான பொருள்களை.

சராசரங்களோடு கூடிய உலகத்தையும், இன்னமும் நீ காண விரும்பும் பொருள்களையும் பாரெனல்.

ஓதும் சராசரங்க ளோடுலகம் முற்றினையும்
காதலொடு காணக் கருதியவாம் - தீதில்பிற
எப்பொருளும் ஒன்றினிலே என்உடற்கண் நிற்பதனைக்
கைப்படையாய் காணுயிக் கண். (எ)

கருதியவாம் எப்பொருளும் - நீவிரும்பிய எவ்வகைப் பொருள்களையும். ஒன்றாக - ஓரிடத்தில் நிலைபெற்றனவாக. இக்கண்-இவ்விடத்தில்.

ஆனால் ஊனக்கண்களால் பார்க்கமுடியாதாதலால் ஞானக்கண் தருகின்றேன் பாரெனல்.

இவ்விழியால் எந்தாய் எனைக்காணும் ஈடில்லாய்
திவ்வியமாம் கண்ணுனக்குச் சேர்த்திடுவேன் - அவ்விழியால்
என்கடவுள் யோகமதை ஏதமறக் கண்டிடுக
பொன்கடவு தேராய் புரிந்து. (அ)

ஈடு - சக்தி. யோகம் - அற்புதங்களைச செய்யும் சக்தி. பொன் - அழகிய. கடவு - செலுத்தற்குரிய. புரிந்து - விரும்பி.

இவ்வாறு கூறிப் பகவான் தமது ஈசுவர ரூபத்தைக் காட்டியருளினாரெனல்.

இவ்வா றுரைத்தப்பின் எந்தாய்கேள் ஏற்றமலி
தவ்வாத யோகத் தலைவனும் - அவ்வரியும
மேலான தன்கடவுள் மெய்வடிவைக் காட்டினான்
மாலோயப் பார்த்தனுக்கு மற்று. (க)

எந்தாய் - அரசனே. இது திருதராஷ்டிரனை நோக்கிச்சஞ்சயன் கூறியது. கடவுள்வடிவு - விசுவரூபம். மாலோய - மயக்கம்தீர.

அஃது எண்ணிறந்த முகமும், கண்ணும், காட்சிகளும், திவ்யாபரணங்களும், ஆயுதங்களும் பெற்ற தெனல்.

பல்வதனம் கண்கள் படைத்துளதால் அற்புதமாம்
பல்வகைய காட்சிகளும் பார்க்கரிய - பல்வகைய
திப்பியமாம் சீரணியும் திப்பியமாம் ஆயுதமும்
ஒப்பறவே உற்ற தது. (கO)

படைத்தல் - பெறுதல். திப்பியமாம்-தெய்வத்தன்மை பொருந்திய.

ஹாரமும் வஸ்த்ரமும் களபமும் பூண்டு ஆச்சரியமானது, பிரகாசமானது, எங்கும் முகமுள்ள தெனல்.

*வானார் மலர்த்தொடையும் வண்துகிலும் பூண்டுளது*
*கானார் களபம்மெய் பூசியது - நோனா*
*வியப்பருள்வ தீறிலது விங்கொளிய தெங்கும்*
*நயப்பமுகம் நண்ணியதால் நன்கு.* (கக)

*வானார் - திவ்யமான. கானார் - வாசனைபொருந்திய. நோனா பொறுத்தற்கரிய.*

ஆயிரம் ஸூர்யோதயம் போலத் தேஜோ காந்தி வீசுவதெனல்.

*செங்கதிர்கள் ஓரா யிரமதிகழச் சேர்ந்தொருபோழ்*
*தங்கணொடு வானத் தவிர்ந்திடுமேல் - எங்குமதன்*
*பேருருவாய் நின்ற பெரியோன் பிறங்கொளிக்கு*
*நேருமெனலாகுமே நின்று.* (உக)

வெவ்வேறு வகையான ஸமஸ்த லோகங்களையும் அந் திருமேனியிற் கண்டானெனல்.

*மல்லலுறப் பற்பலவாம் வண்ணம் பிரிந்தொன்றில்*
*எல்லையற நிறகும இரும்புவனம் - எல்லாமத்*
*தேவாதி தேவன திருவுருவிற் சேர்ந்தங்கு*
*மேவா உறக்கண்டான் வேந்து.* (கங)

*பற்பலவாம் வண்ணம்-தேவர்கள், பிதிர்க்கள, மக்கள் முதலான பலவகை உயிர்களாக. மேவா - மேவி: பொருந்தி.*

பின்பு அருச்சுனன் பெருவியப்படைந்து கைகூப்பிச் சொல்லலுற்றானெனல்.

*பின்னர் இறும் பூதடைந்து பேரான மேனியெலாம்*
*துன்னுபுள கங்கவரத் தோன்றலவன் - முன்னுறுமத்*
*தேவைமுடி யால்வணங்கிச் செங்கரங்கள் அஞ்சலித்துக்*
*கூவியிவை கூறலுற்றான் கூர்ந்து.* (கச)

*இறும்பூது - பெருவியப்பு. கூவி - அழைத்து.*

**உனது திருமேனியில் எல்லாத்தேவர்களையும் ஜீவராசிகளையும் காண்கின்றேனெனல்.**

தேவேநின் தேசார் திருவுருவில் தேவர்களை
மேவும் சராசரமாம் வெவ்வே றுயிர்க்குலத்தைப்
பூவுறையும் நான்முகனைப் போதமுனி வோர்தம்மைத்
தாவிலொரு பாதலத்தில் தங்கும்உர கங்களையும்
யாவினையும் கண்ணுறுவேன் இன்று. (கரு)

**பல்லாயிரம் அவயவங்களையுடைய உன் எல்லையில்லா உருவத்தை எங்கும் காண்கின்றேனெனல்.**

பல்வயிறு கைகளொடு பார்வைமுகம் பெற்றுருவம்
எல்லையிலாய் உன்னைநான் எவ்விடத்தும் காண்கின்றேன்
தொல்லுலகத் தின்வடிவாய்த் தோன்றிப் புரந்திடுவாய்
வல்லைநின் ஆதியையும் மத்தியையும் ஈற்றினையும்
அல்லலுறக் கண்டிலனே ஆங்கு. (கசு)

**ஜோதிஸ்வரூபனாகிய உன்னை எங்கும் காண்கின்றேனெனல்.**

சீரார் முடிதரித்துச் செங்கைத் திகழ்கதையும்
ஏராரும் ஆழியும் ஏந்தி இலங்கொளியின்
பேரார் பிழம்பாகிப் பேருலகம் எங்கும்நிறை
ஆராத நோக்கின் அரிதுகாண் மேனியாய்
சோராமல் எங்கும் சுடர்இரவி போலொளிர்வாய்
பாரோர் அளவறுக்கும் பான்மையிலாய் பல்லிடத்தும்
நேராகக் காண்பேன் நினை. (கஎ)

சுடர் இரவிபோல் - அக்கியையும் சூரியனையும் போல.

**நீயே பரமும், உலகங்களுக்கிருப்பிடமும், தர்மத்தைக் காப்பவனும், புருஷனும் ஆவாயெனல்.**

*அறியத் தகும்பரமும் அக்கரமும் நீயே*
*செறியிப் புவிக்குறையும் தானமும்நீ சென்று*
*குறையாமல் எந்நாளும் கூடும்அறம் பேணும்*
*இறவாத காவலனீ ஈசனும்நீ என்ன*
*நெறியால் நினைந்திடுவேன் நேர்ந்து.* (கஅ)

*அக்கரம் - அழிவில்லாதவன். உறையும் தானம் - இருப்பிடம். காவலன் - காப்பவன்.*

**எண்ணிறந்த கைகளையும், ஸோமஸூர்யர்களாகிய கண்களையும், அக்நி முகத்தையும் உடையாயெனல்.**

*ஆதிநடு வந்தம் அடையாதாய் அந்தமிலாப்*
*பேதமறு வீரியத்தைப் பெற்றாய் பிறங்குகரம்*
*தீதகருவும் எண்ணிறந்த சேர்ந்துடையாய் திங்களையும்*
*ஓதுகதிர்ச் செல்வனையும் உற்றாய் இருவிழியாச்*
*சோதிவளர் அக்கினியைத் தோன்றுமுக மாவுடையாய்*
*ஏதமறு காந்தியினால் எவ்வுலகும் சுட்டெரிப்பாய்*
*நீதிகழல் கண்ணுற்றேன் நின்று.* (கக)

**ஆகாயமும் எண்டிசையும் உன்னுருவாலே நிறைந்துள்ளன, உன்னுருவைக்கண்டு மூவுலகும் அஞ்சுமெனல்.**

*வானோடு மண்ணுக் கிடையிடமும் மாதிரமும்*
*ஆனாத நின்னொருவ னாலே நிறைந்துளவால்*
*மேனின் வியப்பருளும் வெய்யவுருக் கண்டு*
*வானோடு மூவுலகும் மன்னும் மனத்துளக்கம்*
*கோனும் பெரியோனே கூர்ந்து.* (உ0)

*வானோடு மண்ணுக்கு - வானுக்கும் மண்ணுக்கும். மாதிரம் - எண்திசைகள். வானோடு மூவுலகும்-சுவர்க்கம் முதலிய மூவுலகத்தவரும். கூர்ந்து - அச்சம் மிகுந்து; 'மனத்துளக்கம் மன்னும்' என்று கூட்டுக.*

அச்சத்தால் தேவர் முநிவர் ஸித்தர் முதலானோர் துதிப்பாரெனல்.

மற்றுமிந்தத் தேவர்குலம் வந்துன்றன் உட்புகுமால்
உற்றசிலர் அச்சத்தால் உச்சிக் கரம்குவித்துக்
கற்றபொருள் யாவும் கழறித் துதித்திடுவார்
பற்றிநந்த மாமுனிவர் சித்தர்களும் பாரனைத்தும்
குற்றமற வாழ்கவெனக் கூறி உனைப்புகழ்வார்
நற்றுதிக ளாலே நயந்து. (உக)

இந்தத் தேவர்குலம் - பூபாரத்தை நீக்கும் பொருட்டுப், போர் வீரராய அவதரித்துள்ள தேவர் கூட்டம். வாழ்கவெனத் துதிப்பார்- போர் நோக்கவளவில் உற்பாதம் முதலிய கெட்ட சகுனங்களைக் கண்டு துதிப்பார். நற்றுதிகள் - நிரம்பியதுதிகள்.

ருத்ரர் ஆதித்யர் முதலான அனைவரும் வியந்து காண்பாரெனல்.

ஆரும் உருத்திரரோ டாதித்தர் எண்வசுக்கள்
சீருடைய சாத்தியர்கள் விசுவ தேவதைகள்
வாரமலி அசுவினித தேவர் மருத்துக்கள்
பேருடைய தூய பிதிர்கணங்கள் கந்தருவர்
நேரும் இயக்கர்களோ டாசுரர்கள் நீள்சித்தர்
யாரும்உனைக் காண்பார்வி யந்து. (உஉ)

உன்பேருருவைக்கண்டு உலகத்தார் அஞ்சுவாரெனல்.

பன்முகங்கள் பல்விழிகள் பல்கரங்கள் ஊருகழல்
துன்னுவதாய்ப் பல்வயிறு தோன்றுவதாய்த் தந்தங்கள்
இன்னவெனும் எண்ணின் றிலங்குறும்நின் பேருருவை
மன்னும் நெடும்தோளாய் மாநிலங்கள் கண்ணுற்று
உனனரிய அச்சம்கொண் டோய்ந்திடுவ யானுமே
அன்னதகை ஆயினேன் ஆர்ந்து. (உங)

ஊரு - தொடை. இன்ன - இவ்வளவின. அன்னதகையாயினேன் - அஞ்சினேன்.

உன்னைக்கண்டு நான்தைரியமும் சாந்தமும் இழந்தேனெனல்.

வானளவ நின்றுபல வண்ணத் தவிர்ந்துபிலம்
போனிகழும் வாய்களொடு பொங்கழற்கு நேரொளிரும
தானமகல் கண்ணுர் தனியுருக்கண் டஞ்சினேன்
மானமுறு தைரியமும் மாண்புடைய சாந்தமும்
யானடைதல் இல்லேனே ஈங்கு. (உச)

தானமகல் - இடமகன்ற: விசாலமாகிய. மானம் - பெருமை.

உன் பயங்கரமான உருவத்தைத்தவிர வேறொன்றையுங்காணேன்
என்மேல் அருட்கண்வைப்பாயாக எனல்.

தேவர்களுக் கீச செகத்துக்கு வாழிடமே
மேவும் கொடும்பல்லால் மிக்க பயங்கரமாய்த்
தாவில்லி ஊழித் தழல்போல் முகமகண்டு
பூவில் திசைகாணேன் பொன்றினேன் உள்ளமைவும்
காவலனே வைக்கஅருட் கண், (உரு)

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

நூற்றுவர் முதலானவர் எல்லாரும் உன்வாய்க்குள் புகுந்து
பற்களிடை நொறுங்குவார்களெனல்.

நூற்றுவர்கள் யாரும் நுவலும் திறல்மன்னர்
சாற்றும் குழுவோடு சால்புடைய - சீற்றமலி
வீட்டுமனும் த்ரோணனும் கன்னனும் மேவியநம்
நாட்டமலி வீரரொடும் நன்கு. (உசு)

மின்றிறந்த பற்கள் விளங்கிப் பயங்கரமாம்
நின்றிறந்த வாய்க்குள் நெடிது புகுந்திடுவார்
வன்றிறங்கொள் பற்களிடைப் பட்டுத்தம் மத்தகங்கள்
மென்றுதுகள் ஆகுவரால் மிக்கு. (உஎ)

மத்தகம் - சிரம். மென்று - மெல்லப்பட்டு.

**நதிகள் கடல்முகமாகச் செல்வதுபோல வீரர்களெல்லாம் உன்வாய்க்குள் புகுவாரெனல்.**

வெள்ளம் திரண்ட வியனதிபல் பாய்ந்தோடிக்
கொள்ளும் கடன்முகமாக் கூடுவது போலேஇவ்
வெள்ளரிய வெந்திறலார் இப்புவியின் வீரரெலாம்,
விள்ளும் பெருந்தழல்போல் மேவியெரி நின்வாயின்
உள்ளிடையே பாய்ந்திடுவார் உற்று. (உஅ)

**எரிநெருப்பில் வீழ்ந்திறக்கும் விட்டிலைப்போல இவ்வீரர்களெல்லாம் உன்வாயில் வீழ்ந்திறப்பாரெனல்.**

எரிதழலுள் விட்டிலினம் எவ்வா றிறக்க
விரைதருமோ அவவாறு வீழ்ந்து - மருவுமுயிர்
மாளுதற்கு நின்வாயுள் வந்து புகுந்திடுவார்
நீளுறுமிம் மாநதரெலாம் நேர்ந்து. (உகூ)

**எல்லாஉலகங்களையும் நீ விழுங்குகின்றாய், உன் காந்தியினால் திசைகளெல்லாம் கொளுந்துகின்றன எனல்.**

பேருலகம் எங்கும் பிறங்குமொள்ளி யாய்எரியும்
கோரமுறு வாயாற் குவலயங்கள் யாவினையும்
ஈரமற வேவிழுங்கி இன்சுவையும் கொண்டிடுவாய்
கூரும்நின் காந்தி கொளுத்துமே எத்திசையும்
சீருடைய தேவே சிறந்து. (௩௦)

**நீ யாவன் சொல்லாய், உன்னைப்பணிந்து வேண்டுகின்றேன் கிருபைசெய்வாய் எனல்.**

வெய்யவுரு மேவியநீ யாவன் விளம்பிடுவாய்
ஐயனே தேவர்க் கதிபதியே அம்புயத்தாள்
பையவே வீழ்ந்து பணிகின்றேன் ஆரருள்செய்
மெய்யமுத லாம்நின்னை நன்குணர வேண்டினனின்
செய்கை அறிந்திலனே தேர்ந்து. (௩௧)

**நான் உலகமெல்லாம் அழிக்கும் காலம், உன்னை ஒழிந்தவீரர்கள் யாவரையும் கொல்லவந்தேனெனல்.**

*ஆருலகம் எல்லாம் அழிக்குமொரு காலம்யான்*
*பேருலகைச் சங்கரிக்கப் பெட்பினொடும் இங்குற்றேன்*
*போர்கருதி நிற்கும் பொருநரிவர் எல்லோரும்*
*வீரமலி நீபொருதல் விட்டொழியி னும்வீவர்*
*தேருகநீ செப்பும் இது.* (௩உ)

**ஆதலினால் நீ அதைரியத்தைவிட்டுப் போர்புரிந்து புகழும் வெற்றியும் ராஜ்யமும் பெறக்கடவாயெனல்.**

*ஆகலினால் நீயெழுக ஆரும் புகழ்பெறுக*
*ஓகையொடு முன்னின்ற ஒன்னலரைக் கொன்றொழித்து*
*வாகையடைந் தொப்பரிய மாநிலத்தைப் பெற்றிடுக*
*சாகஇவர் யாவருமென் றன்னாற் கொலப்பட்டார்*
*ஆகுகநீ ஓர்நிமித்தம் மாத்திரமே அம்பெய்வாய்*
*வாகின் இடக்கரத்தும் வாய்த்து.* (௩௩)

**[என்னால் கொல்லப்பட்ட பீஷ்ம த்ரோணாதியரைக் கொன்று வெற்றியடைகவெனல்.**

*வீட்டுமனைத் த்ரோணனை வெய்யசெயத் தேரோனைப்*
*பீட்டுனுயர் கன்னனைப் பேசுபிற வீரர்களை*
*வாட்டமுற என்னால்முன் மாய்த்தொழிக்கப் பட்டவிவர்*
*கூட்டமெலாம் நீயின்று கொன்றிடுக அஞ்சற்க*
*மூட்டியவெம் போர்புரிக முன்னெதிர்த்த மேவலரை*
*ஈட்டும்வயம் கொள்க இனி.* (௩௪)

*பெயர் குறித்துச் சொல்லப்பட்ட வீரர்களெல்லாம் கொல்லுதற்கரிய வலிபெற்ற மஹாவீரர்களாதலின், அவர் பொருட்டு அருச்சுனனுக் குண்டாகிய கலக்கம் நீங்கும்பொருட்டுக் குறிப்பிட்டுக் கூறினர்.*

**அருச்சுனன் பகவானைப்பணிந்து பயத்தோடு சொல்லுதல்.**

கேசவனிவ் வாசகத்தைக் கேட்ட கிரீடிதன்
வாசமலர்க் கைகூப்பி மன்னுமுடல் கம்பித்து
நேசமொடு தாளில் நினைவாக வேபணிந்து
கூசி வணங்கிக் குலைந்தஞ்சிக் கண்ணனொடு
பேச லுற்றான் பின்னும் சில. (கூரு)

கூசி - நாவுளறி.

**உன் பெருமையைக்கண்டு உலகம் களிக்கும், அரக்கர் அஞ்சு வார்கள், ஸித்தர் வணங்குவாரெனல்.**

தேவேநின் சீர்த்தியினால் திண்புவியெ லாம்களிக்கும்
ஆவானன் றஞ்சி அரக்கர் அகன்றோடிப்
போவார்கள் எண்டிசையும் சித்தர்கணம் போதத்தால்
மேவா வணங்குவரால் விள்ளுமிவர் செய்கையெலாம்
கோவே பொருந்தியவே கூர்ந்து. (கூசு)

பொருந்தியவே - அவ்வாறு அவர்கள் களித்தலும், அஞ்சலும், வணங்கலும் நியாயமே.

**பெரியோனும், ஆதியும், அந்தமிலானும், தேவதேவனும், உலகுக் குறைவிடமும், ஸத்தும், அஸத்தும், எல்லாம் நீயே எனல்.**

பரிவின்அவர் எங்ஙன் பணியா தொழிவர்
பெரியோனே யாவர்க்கும் பெம்மானே பூமேல்
அரியஅய னுக்குமுதல் ஆனோனே அந்தம்
மருவாத வானவனே வானோர்தம் வேறே
ஒருவா வுலகுக் குறைவிடமா உற்றோய்
பொருவில்அழி வில்லாய் புகலசத்தாய்ச் சத்தாய்ப்
பரமாய் இலங்கிடுவாய் பார்த்து. (கூஎ)

ஆதிதேவனும், ஆதிபுருஷனும், உலகத்துக் குறைவிடமும், அறிவானும், அறியத்தக்கவனும், எல்லாம் நீயே எனல்.

தேவாதி தேவனீ சீரார் புருடன்நீ
மேவும்இவை யாவைக்கும் மேலாம உறைவிடமும்
யாவும் உணர்பவனும் ஏய்ந்துணரத் தக்கோனும்
தாவாத மேலாம் தனியிடமும் நீயேகாண்
ஓவாது நீஎங்கும் உற்றுநிறை யப்படுமால்
மாவுருவம எல்லையிலாய் மற்று. (௩௮)

உன்னை மீண்டும் மீண்டும் வந்திக்கக்கடவேனெனல்.

வாயுநமன் அங்கி வருணனொடு மாமதியம்
ஏயபிர சாபதியும் எண்பிரபி தாமகனும
ஆயவிவர் யாவருமநீ ஆயிரங்கால் நின்னடிகள்
மேயமுடி சூடுகநான் மீண்டவற்றை மீண்டும்நான்
நேயமுடன் கொள்கமுடி நேர்ந்து. (௩௯)

பிரஜாபதி - காசியபர் முதலானோர். பிரபிதாமஹன - பிரமனுக்குத் தந்தை.

உனக்கு எண்ணிறந்த வந்தனம், எல்லாம் நீயே யாவாய் எனல்.

வந்தனம்காண் நிற்கு மருவியமுன் பின்னிலையும
வந்தனம்காண் எப்புறமும் எல்லாமாய் வர்த்திப்பாய்
அந்தமிலா வீரியமும் அந்தமிலா விக்ரமமும்
சொந்தமுறு வாயெங்கும் துன்னிநிறை வாயதனால்
எந்தஉரு வும்நீயே ஈங்கு. (௪0)

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

## என் பிழைகளை யெல்லாம் பொறுத்தருள வேண்டும் எனல்.

கண்ணனே யாதவனே காதலார் நண்பவென
எண்ணரிய நின்பெருமை இன்னதனை ஓராதேன்
உண்ணிகழா லோசனையில் லாமையினல் உன்னையொரு
வண்ணமலி நண்பா மதித்துமதி யாமையினே
தண்ணியலும் அன்பாலோ சாற்றியவென் மாற்றமெலாம்
எண்ணலொழிந் தேதமிலாய் ஈங்கு. (சக)

மதித்து மதியாமையினே - எண்ணி அலக்ஷியத்தாலோ.

ஆடல் கிடத்தல் அமர்ந்துறைதல் உண்ணலென
நாடுமச் செய்கைகளில் நாமாம தனிமையிலோ
கூடுபல ரோடும் குலவியுறு வேளையினே
நீடுபரி காசத்தால் நேர்ந்தபல நிந்தனைகள்
பீடுடைய பெம்மானே யாவும் பொறுத்தருள்வாய்
தேடும்அள வில்லாதாய் தேர்ந்து. (சஉ)

## உனக்கு ஒப்புயர்வானவர் உலகில் இல்லையெனல்.

இயங்குவன அல்லாத எவ்வுயிர்க்கும் அத்தன்
வயங்குபல பூசனையால் வந்திக்கத் தக்கோன்
மயங்கல் ஒழித்தருளும் வண்குரவன் யாவும்
உயங்கல் ஒழித்தருள்வாய் நீயேயென் றோர்ந்தேன்
தயங்குமொரு மூவுலகும் தானிலைநின் ஒப்பார்
சயங்கொள் தனிப்பெருமை சான்றோனே நின்னின்
நயங்கொள்பெரி யோரார் நவில். (சங)

இயங்குவன அல்லாத - இயங்குவனவும், இயங்காதவும் : சரா சரங்களாகிய. அத்தன் குருமுதலான யாவும் நீயே யென்றோர்ந்தேன் என்று கூட்டுக.

நான் செய்த பிழைகளை யெல்லாம் பொறுத்தருள வேண்டுமெனல்.

ஆதலால் ஏத்தத் தகும்பரிசார் ஆண்டவனே
பாதமிசை வீழ்ந்து பரிவாற் பணிந்துன்னைப்
பேதையேன் செய்த பிழைபொறுக்க வேண்டினேன்
காதன்மகன் செய்பிழைக்குக் கண்ணோடும் தந்தையெனத்
தீதறுநே சன்பிழையைச் சிந்தியா நேசனெனக்
கோதைபிழை யைக்கருத்திற் கொள்ளாத கொண்கன்போல்
ஏதமறு என்பிழைகள் யாவும பொறுத்தருளல்
ஓதின்முறை யாமேயிங் குற்று. (சச)

வந்தித்தற்காவாய் - வந்திக்க யோக்கியமானவனே.

உன் முன்னுருவத்தை எனக்குக் காட்டியருள்வாயெனல்.

பண்டுகாணுததனைப் பார்த்திடலால் உள்மகிழ்ச்சி
கொண்டுமுளம் அச்சத்தால் கூடும குழப்பமும
அண்டர் பிரானே அனைத்துலகும் வாழிடமே
கண்டுவக்க அவ்வுருவே காட்டி யெனைத்தேவே
தண்டலையகூர்ந் தாள்வாயே சார்ந்து. (சரு)

பண்டு காணுததனை-முன்னொருவராலும் காணப்படாத இந்த விசுவரூபத்தை. அவ்வுருவே - எனது தோழனுக உள்ள வடிவம் எதுவோ அதையே.

உனது முன்னுருவைக் கொண்டருள்வா யெனல்.

திருமுடியும் கைக்கதையும் சக்கரமும் சேர்ந்த
உருவினைமுன் போற்கண் டுவக்கவிழை வுற்றேன்
பெருமையுறும் ஆயிரம்கைப் பெம்மானே யாவும்
அரியவுரு வானவனே ஈரிருகை ஆர்ந்த
உருவதையே கொண்டருள்வாய் உற்று. (சசா)

### பகவான் அருச்சுனனை நோக்கிக் கூறுதல்.

தேசோ மயமாய்த் திகழுனைத்தாய் ஈறிலதாய்
ஆசில்முத லாய்நின்னால் அல்லாமல் மற்றவரால்
காசகல முன்னென்றும் காணாத இவ்வுருவை
நேசமுடன் நினபால் நெகிழாத பேரருளால்
மாசறவே நீகாண வள்ளால்யான் காண்பித்தேன்
ஓசைமலி யோகத்தால் உற்று. (சஎ)

### இந்த விசுவரூபம் உன்னால் அல்லாமல் பிறரால் காணப்பெறுவ தன்றெனல்.

வேதம்நனி ஓதலினால் வேள்விகளைக் கற்றலினால்
நீதில்பல தானத்தாற் செய்வினையால் இவ்வுருவம்
ஏதமறு நற்றவத்தால் யாதானும் இவ்வுலகில்
காதலின்நின் னலல்லால மற்றவர்களுக காணவசம்
ஓதுகுரு வீரவிலை ஓர். (சஅ)

### நீ அஞ்சாதே, என் மானுட வுருவைக் காட்டுவேனெனல்.

கோரமாம் என்னிக் கொடியவுருக் காணலினால்
ஆரலைநீ அச்சம் அடையற்க உட்கலக்கம்
நேரும் பயம்தவிர்ந்து நெஞ்சத் துவந்தெனது
சீருடைய முன்னுருவைச் செவ்விதுநீ காண்கிற்பாய்
வீரவினிக் காட்டிடுவன் மீண்டு. (சகூ)

### பகவான் தமது சொந்த ரூபத்தைக் காட்டி அச்சம் தீர்த்தாரெனல்.

இந்தவிதம் பார்த்தற் கிசைத்தருளி ஏதமிலான்
சொநதவுருக் காட்டியவன் துனனியஅச் - சந்தவிர
இன்னுருவ னாகி இனியவுரை கூறினனால்
தன்னுவமை யில்பெரியோன் தான். (ரு0)

அருச்சுனன் அச்சம் தீர்ந்து மனக்களிப் படைந்தேனெனல்.

*ஈங்குனது மானுடநல் இன்னுருவம் காண்டலினால்*
*ஏங்கியவென் உட்டெளிவுற் றின்புற்றேன் - பாங்கின்*
*எனதியற்கைத் தன்மையும்நான் எய்தினேன் மீண்டும்*
*கனியுகிர்க்கக் கன்றெறிந்தாய் காண்.* (ருக)

இந்த விசுவரூப தரிசனம் தேவர்களுக்கும் பெறலரிதேனப் பகவான் கூறல்.

*கண்ணுறற இவ்வுருவம் காணலரி தால்நெடிய*
*விண்ணுற்ற தேவர்களும் வேட்டேகேள் - எண்ணுற்ற*
*இவ்வுருவம் காணுதலுக் கென்றுமவிழை வெய்துவரால்*
*தெவ்வுருவும் கோலாய் தெரி.* (ருஉ)

இவ் விசுவ ரூபத்தைப் பிறர் யஜ்ஞ தான தர்மம் ஒன்றினாலும் காணப்பெறா ரெனல்.

*வேதத்தா லேனும் வியன்தவத்தால் தானத்தால்*
*ஓதுமொரு வேள்வி உரத்தாலும் - யாதாலும்*
*நீக்கண்ட இவ்வுருவில் நேர்கதென்னை வேறொருவர்*
*வாகொன்றக் காணார் மதி.* (ருங)

இந்த ரூபத்தை அநந்யபக்தியால் மாத்திரமே அடையக்கூடு மெனல்.

*வேறொன்றிற் செல்லாத மெய்வளரும் பத்தியினால்*
*வீறொன்றும் இவ்வடிவின் மேவவெனை - ஊறின்றிக்*
*கண்டறிந்து கூடிக் கடைத்தேறல் ஆவதுகாண்*
*அண்டர்புகழ் வென்றியினாய் ஆங்கு.* (ருச)

**பகவான் பொருட்டுக் கர்மங்களைச் செய்து வழிப்டுபவர்களே அவனை யடைவா ரெனல்.**

*என்பொருட்டுக் கன்மம் இழைத்தெனையே தற்பரமா*
*அன்பினொடு கொண்டிருபற் றற்றோனாய் - மன்புவியில்*
*யாரிடத்தும் வைரம் இலாதவனே என்னைஉறும்*
*நேரலருக் கேறே நினை.* (௫௫)

விசுவரூப சந்தர்சன யோகம் முற்றிற்று.



பன்னிரண்டாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1. விசுவரூபத்தை உபாஸிப்பவர் அக்ஷரத்தை உபாஸிப்பவர் ஆகிய இவர்களுள் யாவர் யோகம நன்ருகத் தெரிந்தவரென்று அருச்சுனன் கேட்டல்.

2-7. விசுவரூப உபாஸகர்களுக்கும் அக்ஷர உபாஸகர்களுக்கும் தாரதமயம் உணர்த்துதல்.

8. விசுவரூப த்யானமாகிய பக்தியோகத்தில் அருச்சுனனைப் பிரவிர்த்திக்கச் செய்தல்.

9-11. கீழேகூறிய பக்தியோகத்தில் அஸமர்த்தர்களாயிருப்பவர்களுக்கு அப்யாஸ யோகம் கூறுதல்.

12. ஸர்வ கர்மபல த்யாகத்தை விதித்தல்.

13-19. த்வேஷமின்மை முதலியன அக்ஷர உபாஸகர்களுக்கு தர்மம் எனல்.

20: தம்மால் சொல்லப்பட்ட தர்மங்களை ஆசரிப்பவர் தமக்கு அத்யந்த ப்ரேமையுள்ளவரென்று பகவான் கூறுதல்.

# பன்னிரண்டாம் அத்தியாயம்.

## பக்தியோகம்.



### காப்பு.

ஒன்றாகிப் பல்லுருவாய் ஒருமூல கெங்கண்ணும்
நின்றானை நெஞ்சத்தால் நேடுநர்க்குப - பொன்று
வினைத்தளையைச் சேதித்து வீடளிப்பான் தனனை
நினைத்தொழிவாய் நெஞ்சே துயர்.

### பாயிரம்.

ஓங்குமுரு வைப்பரவும் உத்தமராம் பத்தர்தமைத்
தாங்குறமேல க்ஷரம திறமும்பின் - நீங்கரிய
அக்கரத்தை உன்னுபவர் ஆரியனும் அர்ச்சுனற்கு
மைக்கடல்வண் ணன்புகல்வான் மற்று.



### நூல்.

**விசுவரூபத்தை த்யானிப்பவர் அக்ஷரத்தை உபாஸிப்பவர் ஆகிய இவருள் நன்றாக யோகத்தை உணர்ந்தவர் எவரெனல்.**

இத்திறத்தால் என்றும் இதயம்நிலை பெற்றனராய்ப்
பத்தியொடு நின்னைப் பரவுமுயர் - உத்தமர்கள்
அக்கரத்தைத் தியானிப்பார் ஆமிவருள் மேலோர்யார்
தக்கதொரு யோகத்தில் தான். (க)

இத்திறத்தால் - கீழத்தியாயத்தின் முடிவில் கூறியவாறு. இத்திறத்தால் பத்திசெயும் என்று கூட்டுக. நின்னை - கீழேகூறிய உமது விசுவரூபத்தை. அக்கரம் - பர ப்ரஹ்மம்.

என்னுடைய விசுவரூப த்யானம் செய்பவர்களே மேலானவரெனப் பகவான் சொல்லுதல்.

என்பால் நிறுத்திமனம் எப்பொழுதும் என்னிடத்தே
அன்பாகி உள்ளம் அலைவற்று - முன்பார்
சிரத்தையினோடு உற்பரவும் தேசினர்தாம் மேலாம்
திருத்தவிரா யோகரெனத் தேர். (உ)

என்பால - எனது விசுவரூபத்தில். முன்பார் - முதன்மை பெற்ற. மேலாம்யோகர் - யோகியருள் மேலானவர்.

(பின்னிரண்டும் ஒருதொடர்.)

அக்ஷரத்தை உபாஸித்து இந்த்ரிய நிக்ரஹம் செய்து ஸர்வபூதங்களுக்கும் ஹிதம்புரிபவரும் என்னையே அடைவாரென்றல்.

கண்ணுக்கும் சொற்கும் கருத்துக்கும் எட்டரிதாய்
எண்ணுமிடம் எங்கும் இலங்குவதாய் - நண்ணுமசை
வில்லாதாய் வேற்றுமையற் றென்றுமுள அக்கரத்தை
வல்லை மகிழ்ந்திறைஞ்சி மற்று. (௩)

இந்தியங்கள் யாவினையும் நன்கடக்கி எப்பொழுதும்
புந்தியொரு வண்ணம் பொருந்துநராய்ச் - சிந்தைமகிழ்ந்
தெவ்வுயிர்க்கும் என்றும் இதமே விரும்புமவர்
செவ்விதென்னை யேயடைவர் சென்று. (௪)

புந்தியொரு வண்ணம் பொருந்துநராய்-நன்மை தீமைகளில் மனம் சலியாதவராய்.

**தேஹாபிமானம் உள்ளவர்க்கு அவ்யக்தோபாஸனை செய்தல் கஷ்டமாகுமெனல்.**

*சிந்தையினை அவ்வியத்தம் சேர்த்துநர்க்கு மற்றவரின்*
*வெந்துயரம் மிக்கு விளைந்திடுமால் - பந்தமறச்*
*செப்பும்அவ்வி யத்தநெறி சேருதல்தம் மெய்யில்நசை*
*வைப்பவர்க்கு மாதுயர்காண் மற்று.* (ரு)

*அவ்யக்தம்-இந்திரியஙகளுக்கு கோசரமாகாதது: பிரமம்: அக்ஷரம். மற்றவரின்-ஈசுவரனுக்காகக் கர்மமுதலானவற்றைச் செய்வோரைக் காட்டிலும். மெய்யில் - தேஹத்தில்.*

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

**ஈசுவரனுகிய தம்மை உபாஸிப்பவர்களை ஸம்ஸாரத்தினின்று கரையேற்றிக் காப்பேனெனல்.**

*'செய்கருமம் யாவினையும் சேரத் துறந்தென்பால்*
*மெய்யின்எனை யேபரமா மேவினராய்ப் - பொய்யில்மனம்*
*மற்றொன்றைச் சாராத மாயோகத் தால்நினைந்து*
*குற்றமறப் போற்றுநரார் கொண்டு.* (சு)

*என்பால்துறந்து - என்னிடத்தில் ஸமர்ப்பித்து. யோகம்-மனநிலைத்தல்: மன உறுதி. நினைந்து - என்னையே தியானித்து.*

*என்னில்நிலை பெற்ற இதயத்தர் அன்னவரைத்*
*துன்னுறுசம் சாரமெனும் துன்பமிகு - மன்னும்*
*கடலகத்து நின்று கரையேற்றிக் காப்பேன்*
*விடையனையாய் சில்பகலில் மிக்கு.* (எ)

*அன்னவரென்றது மேற்கூறியவர்களைச் சுட்டுகின்றது. துன்பம் - மரண முதலிய துன்பங்கள். ஸம்ஸாரத்தைக் கடலென்றது கடத்தலின் அருமைபற்றி. மிக்கு: அருள் என்னும் சொல்லை வருவித்து அருள் மிகுந்து என்று பொருள் கொள்க.*

### விசுவரூபத்யானமாகிய பக்தியோகத்தைச் செய்யின் என்னை அடைவாயெனல்.

என்னிடத்தே உள்ளம் இருத்திடுக புந்தியினை
என்னிடத்தே வைத்திடுக வந்தாலநீ - என்னிடத்தே
அன்னதன்பின் என்றும் அமர்வாய் அரந்தையொழிந்
தின்னதிலோர் ஐயம் இலை. (அ)

என்னிடத்து-எனது விசுவரூபத்தில். அரந்தை யொழிந்தென்னிடத்தே அமர்வாய் என்று கூட்டுக. அரந்தை-துன்பம். என்னிடத்தமர்வாய் - நானேகவே ஆவாய்.

### இப் பக்தியோகம் செய்ய ஸாமர்த்திய மில்லையாயின் அப்யாஸயோகம் செய்யெனல்.

சித்தத்தை யென்பாற் றிரமா நிறுத்தற்குச்
சத்தியிலை ஆயிற் றனஞ்சயகேள் - புத்திநிலை
அப்யாச யோகத்தால் என்னை அடைந்திடற்குத்
தப்பாமற் பின்முயல்க சார்ந்து. (கூ)

நிறுத்தற்கு - நானிப்போது சொல்லியவாறு நிலையாக நிறுத்துதற்கு. அப்யாஸமாவது நினைவைப் புறப்பொருள்களினின்று மீட்டு யாதேனும் ஒருபொருளில் அடிக்கடி நிறுத்தல். அப்யாசயோகமாவது அவ்வித அப்யாஸத்தாற் பெறும் ஸமாதானம் அல்லது மன உறுதி.

### அப்யாஸயோகத்துக்கும் திறமையில்லாவிடின் ஸகலகர்மங்களையும் என்பொருட்டுச் செய்க எனல்.

செப்பியஅப் யாசத்தைச் செய்திறமை இல்லாயேல்
ஒப்பில்செயல் எற்கா உஞற்றிடுக - மெய்ப்படவே
என்பொருட்டுக் கன்மம் இயற்றினும்நீ சித்தியினை
இன்புறவே எய்துவையால் ஈங்கு. (கo)

உஞற்றிடுக-செய்க. கன்மம் இயற்றினும் - யோகப்பயிற்சி யில்லாமல் கர்மமே செய்யினும். சித்தி எய்துவாய் - கர்மத்தால் சித்த சுத்தியும், பின்பு யோகமும், பின்பு ஞானமும் பெற்று அந்த ஞானத்தால் மோக்ஷத்தைப் பெறுவாய்.

**இதுவும் செய்யமுடியாவிடின் என்னைச் சரணமாக அடைந்து கர்மபலத்தை த்யாகம் செய்க எனல்.**

இன்னதுவும் செய்தற் கியலாதேல் எற்கன்பு
மன்னிவச முற்ற மனத்துடனே - முன்னிவினை
யக்கருமத் தின்பயனும் எண்ணாது கைவிடுவாய்
மற்றுலவும் தோளாய் மகிழ்ந்து. (கக)

எற்கன்பு மன்னி - என்னிடத்தில் நிலைபெற்ற பக்தியைப் பெற்று. வசமுற்ற - தனக்கு ஸ்வாதீனமாகிய.

**அப்யாஸத்திலும் ஞானமும், ஞானத்திலும் த்யானமும், த்யானத்திலும் கர்மபலத்யாகமும் உயர்ந்த தெனல்.**

அப்பியா சத்தினுமேல் ஆகுமறி வாரறிவின்
ஒப்பமுறு தியானம் உயர்ந்திடுமால் செப்பியவத்
தியானத்திற் கன்மப பயன்றுறத்தல் சீர்மைத்தாம்
தானதனால் சாந்தியுறும் பின். (கஉ)

மற்ற வழிகளைத் தொடர முடியாதபோது கர்மபல த்யாகத்தை ஸாதனமாகக் கற்பித்ததனாலே, இங்கு இதனைச் சிறப்பித்தது உபசாரமாத்திரமாகவேயன்றி உண்மையாகவன்று.

**(பின்னிரண்டும் ஒருதொடர்.)**

**ஸர்வஜீவ காருண்யனும் ஸுகதுக்கங்களை ஸமமாகக் கருதுபவனும் அடக்க முடையனுமாய் என்னையே த்யானிக்கின்ற பக்தன் எனக்குப் பிரியன் எனல்.**

எவ்வுயிர்க்க ணும்பகைமை இல்லானாய் மித்திரனாய்த்
தவ்வில் தயாமலியும் தன்மையனாய் - எவ்வமுறு
பற்றிரண்டும் அற்றுப படர்சுகமொன் றாகநினைந்
துற்றபொறை உள்ளானாய் ஊங்கு. (கங)

தவ்வில் - சிதைதலில்லாத. படர் - துன்பம். பகையில்லாமை முதலிய குணங்கள் அக்ஷரத்தை த்யானிப்பவர்களாய் ஆசைகளை முற்றும் துறந்த ஸந்யாஸிகளுக்கு மோக்ஷத்தைப்பெறுதற்குக் கருவியான குணங்களாகக் கற்பிக்கின்றனர்.

எப்பொழுதும் சந்துட்ட னுயடக்கம் எய்நதானுய்
மெய்பபடுகி யானத்தில் மேவினனுய்த - அப்பின்மனம்
புததியுமென் பால்நிறுத்திப போதுநிட நிசசயனும
பத்தனெனக் குப்பிரியன் பார். (கச)

மேவி - நிலைபெற்று.

ஒருவருக்கும் துன்பம் செய்யானுய் ஒருவராலும் துன்பமடையானுய் மகிழ்ச்சி, கோபம், கலக்கம் என்பன இல்லாதவன் எனக்குப் பிரியனுவன் எனல்.

யாவனிட்டர் இவ்வுலகுக் கெந்நாளும் உற்றிழையான்
யாவனிட்டர் தானடையான் இவ்வுலகால் - யாவன்
மகிழ்ச்சிசினம் அச்சம மனக்கலக்கம் சாரான்
இகழ்சசியிலன் ஏற்கினியான் ஈங்கு. (கரு)

விருப்பமின்மை, தூய்மை, ஸாமர்த்தியம், ஓரமின்மை, மனத்துயரின்மை, வன்தொழிலின்மை என்னும் குணங்களையுடையவன் எனக்குப் பிரியனுவன் எனல்.

விருப்பிலனுய்த் தூயோனுய் மிக்கசமர்த் தோனுய்
ஒருத்தரிடை ஓரமிலா துற்று - வருத்தும்
மனத்துயரோன் றில்லாதெவ் வன்தொழிலும் விட்ட
எனக்கன்பன் ஏற்கினியான் ஈங்கு. (கசு)

வன்றொழில் - சாஸ்த்ர விருத்தமான கர்மங்கள். அன்பன் - பக்தன்.

**விருப்பு வெறுப்பின்மை, துன்பின்மை, வேண்டுதலின்மை, நன்மை தீமைகளில் பற்றின்மை ஆகிய குணங்களையுடைய பக்தன் எனக்குப் பிரியனுவனெனல்.**

*மகிழ்ந்திடலும் உள்வெறுப்பு மல்குதலும் துன்பம்*
*மிகுந்திடலும் வேண்டுதலும் மேவா - தகந்தனிலே*
*நன்மையொடு தீமையினிற் பற்றொழிந்த நற்பத்தன்*
*என்மனதிற் கினியன னென்று.* (கஎ)

*துன்பம் மிகுந்திடல் - துக்கித்தல்: துக்கத்தை வெறுவாகக் கொள்ளுதல். மேவாது - அடையாமல். இதை மகிழ்ந்திடல் முதலிய ஒவ்வொன்றோடும் கூட்டுக.*

**சத்ரு, மித்ரு, மானம், அவமானம், வெம்மை, குளிர்ச்சி என்பவற்றில் ஸமபுத்தியுடைய பக்தன் எனக்குப் பிரியன் எனல்.**

*வார்ந்தபகை நட்பினிடை மானவை மானத்தில்*
*கூர்ந்தவொரு வெம்மை குளிர்ச்சியினில் - தேர்ந்துமனம்*
*ஒத்திருப்பான் ஆகி ஒருபொருளி லும்பற்று*
*வைத்தலிலன் எற்கினியன் மற்று.* (கஅ)

**வசை புகழ் ஒன்றாகக் கருதி, மௌனியாய் கிடைத்தது கொண்டு ஸந்தோஷித்து, ஓரிடத்தும் தங்கானுய், மனக்கலக்கமில்லாறு யுள்ள பக்தன் எனக்குப் பிரியன் எனல்.**

*உற்ற வசைபுகழொன் றாஉணர்ந்து மௌனியாய்ப்*
*பெற்றபொரு ளாலுவக்கும் பெற்றியனுய்ச் - சற்றுமொரு*
*தானத்தே தங்கானுய்த் தன்னுட் டுளங்கானும்* (கக)
*மானவன்தான் எற்கினியன் மற்று.*

*தானத்தே தங்கான் - ஓரிடத்தும் ஸ்திரவாஸம் இல்லாதவன். உள் துளங்கான் - ஸ்திரபுத்தி யுள்ளவன்.*

**இந்த தர்மாம்ருதத்தை அன்போடேற்று என்னைப் போற்றுகின்ற ஸந்யாஸிகள் எனக்குப் பிரியமானவரேனல்.**

*சாறறுமுள்ளே பேபெயவர்க்கும் மேலாகத் தாம்கருதி*
*எற்றும் சிரத்தையிலே டீங்குரைத்த - போற்றரிய*
*தன்மாமிர் தத்தைத் தழுவுமொரு பத்தர்களே*
*மன்னஇனி யாரெனகரு மற்று.* (உ0)

ஈங்குரைத்த-இம் ககூ-ம் செய்யுள்முதற் கூறிப்போந்த. தர்மாமிர்தம் இறப்பற்ற மோக்ஷத்தில் செலுத்தலாலே அமிர்தம் என்னப்பட்டது. தழுவும் பத்தர் - அநுஷ்டிக்கும் ஸந்யாஸிகள். மன்ன - மிகவும்.

பக்தியோகம் முற்றிற்று.



௳

பதின்மூன்றும் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1. க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் முதலியவைகளைப்பற்றி அருச்சுனன் பகவானைக் கேட்டல்.

2. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களின் ஸ்வரூபத்தைப் பகவான் சுருக்கமாகச் சொல்லுதல்.

3. ஸர்வ க்ஷேத்ரங்களிலும் உள்ள க்ஷேத்ரஜ்ஞனும் ஈசுவரனும் வேறல்லவென்று கூறி க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப்பற்றித் தமது அபிப்பிராயத்தை வெளியிடுதல்.

4. விசேஷமாய் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களின் யதார்த்த ஞானம் கூறுதல்.

5. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களின் யதார்த்த ஞானத்தை வியத்தல்.

6-7. விசேஷமாக க்ஷேத்ரத்தின் உண்மை கூறுதல்.

8-12. அமானித்வம் முதலான ஞானஸாதனங்களைக் கூறுதல்.

13-18. க்ஷேத்ரஜ்ஞனின் உண்மை கூறுதல்.

19. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ யதார்த்த ஞான பலன் கூறுதல்.

20. பிரகிருதி புருஷர்களின் அநாதித்வம் கூறல்.

21. கார்ய காரணங்களுக்கு பிரகிருதியும் ஸுக துக்கங்களுக்குப் புருஷனும் ஹேதுவெனல்.

22. புருஷனுடைய போக்த்ருத்துவத்துக்கு நிமித்தம் கூறுதல்.

23. புருஷன் உபத்ருஷ்டாவாய் ஸாக்ஷிமாத்திரமாய் இருத்தல் கூறுதல்.

24. பிரகிருதி புருஷஜ்ஞானபலன் சொல்லுதல்.

25-27. ஆத்மஞானத்துக்குரிய த்யானாதி உபாயங்களைக் கூறுதல்.

28-35. யதார்த்த ஞானமும் அதன் பலமும் கூறுதல்.

# பதின்மூன்றும் அத்தியாயம்.

## க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாகயோகம்.



### காப்பு.

என்னிதயத் துள்ளிருந்தும் இன்பா நடம்பயிலும்
பொனனிதயத் துபபொருந்தும் புண்ணியன்றன்-முன்னோர்
படஙகொள்அர வின்முடியிற் பண்பாக நின்று
நடஙகொள்ளெ னக்கழலகள் நன்கு.

### பாயிரம்.

கேத்திரத்தின் தன்மையையும் கேத்திரஜ்ஞ னின்தகையும்
சாற்றுமடியர் ஈசன் தனிஇயலும் - போற்றும் ஒரு
வில்விசயற் குறறுரைபபான் வென்றிமலி தானவரைப
பலவிசயம் கொண்ட பரன்.

---

### நூல்.

**பிரகிருதி முதலியவற்றைத் தெரிந்துகொள்ள விரும்பினேன், கூறவேண்டுமெனல்.**

ஓதும் பகுதியினே டொண்புருடன் கேத்திரமும்
தீதிலொரு கேத்திரஜ்ஞன் சேர்ஞானம் - ஆதியவா
மற்றறியத் தக்கவையும் வள்ளால் விருப்புற்றேன்
உற்றறிய அன்பால் உரை. (க)

உற்றறிய விருப்புற்றேன் என்று கூட்டுக.

**தேஹத்தை க்ஷேத்ரமென்றும் அதை அறிபவனை க்ஷேத்ரஜ்ஞனென்றும் கூறுவரெனல்.**

*தேகம் இதைக் கேத்திரமாச் செப்புவர்காண் மற்றிதனை*
*ஆகுடனே தானறிய வல்லானை - மோகமறு*
*கேத்திரஜ்ஞன் என்று கிளத்துவரால் இன்னவற்றைப்*
*பார்த்தறியும் பண்பினரே* ( )

வினைப்பேறுகளை விளைநிலம்போல இத் தேஹத்தில் பெறுதலினாலேயே இது க்ஷேத்திரமாகக் கூறப்பட்டது. அறிவுடைமை பற்றிக் கூறியதெனினும் அமையும்.

**தேஹங்கள்தோறும் நானே க்ஷேத்ரஜ்ஞன், க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களைப் பிரித்தறியும் ஞானமே மெய்ஞ்ஞானம் எனல்.**

*கேத்திரங்கள் தோறுமெனைக் கேத்திரஜ்ஞன் என்றறிக*
*கேத்திரமும் கேத்திரஜ்ஞனும் தெளிவிற் - பார்த்தறியும்*
*ஞானமிது போமறுவே நாடுறுமெய்ஞ் ஞானமெனல்*
*ஊனமில்என் கொள்கையென ஓர்,* (௨)

எனைக் கேத்திரஜ்ஞனென்றறிக - க்ஷேத்ரஜ்ஞனுக்கு உண்மையில் யாதோர் உபாதியுமில்லையென்றும், ஸத்தென்றும் அஸத்தென்றும் வியவஹரிக்கப் படானென்றும் அறிக.

**க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களின் குணம் முதலியவற்றைச் சொல்வேனெனல்.**

*யாதொன்றக் கேத்திரந்தான் யாதொன் றதன்குணமும்*
*யாதோர் விகாரமுள வெதங்கிருந்து - போதுவதென்*
*யாவனக் கேத்திரஜ்ஞன் யாதாம் அவன்திறமை*
*மேவியிவை யாவும்கேள் மிக்கு.*

எங்கிருந்து போதுவதென் - எந்தக் காரணங்களில் இருந்து எந்தக்காரியங்களுண்டாவன? திறமை - உபாதிகளினின் றுண்டாகும் சக்தி. மேவி - விரும்பி. மிக்கு - அன்பு மிகுந்து; சிரத்தை மிகுந்து.

**இவற்றின் யதார்த்தம் ரிஷிகளாலும், வேதங்களாலும், ப்ரஹ்ம ஸூத்ரங்களாலும் பாடப்பட்டிருக்கின்ற தெனல்.**

இன்னவற்றின் உண்மை இருடிகளால் பல்வகையாப்
பன்னுபல சந்தத்தால் பாங்காகச் - சொன்னிகழும்
ஏதுவொடு நிச்சயமார் எண்பிரம சூத்திரத்தால்
தீதறவே செப்பப் படும். (ரு)

நிச்சயமார் - நிச்சயஞானத்தைக் கொடுப்பனவாகிய. பிரமசூத்திரத்தால் - பிரமத்தைக் குறித்துச்சொல்லும் வாக்கியங்களால். இச் சூத்திரங்களில் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞர்களின் யதார்த்தம் கூறப்பட்டுள்ளது.

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

**பஞ்சபூதங்கள், அஹங்காரம், அவ்யக்தம், புத்தி, தசேந்த்ரியம், மனம், விஷயம் ஆகிய இவைகள் கூடினது க்ஷேத்ரமா மெனல்.**

ஐந்துமகா பூதம் அகங்காரம் அவ்வியத்தம்
நந்தலறு புத்தி நவிலுறுபத் - திந்தியங்கள்
ஒன்றும் மனம்விடயம் உற்றவிவை கூடியது
நன்றான கேத்திரமாம் நாடு. (சா)

மகாபூதம் - ஸூக்ஷ்மபூதங்கள். அஹங்காரம் - ஸூக்ஷ்மபூதங்களுக்குக் காரணமானது. புத்தி-நிச்சயிப்பது; இது அஹங்காரத்துக்குக் காரணம். அவ்யக்தம் - ஈசுவரசக்தி; இது புத்திக்குக் காரணமாவது. விடயம் - சப்தாதி புறப்பொருள்கள். இவை - இந்த இருபத்து நான்கு தத்துவங்களும்.

**ஆசை, வெறுப்பு, இன்பம், துன்பம், தேஹம், அறிவு, மனத்திட்பம் ஆகிய இவையும் முன் கூறியவற்றோடு கூடி க்ஷேத்திரமாமெனல்.**

*ஆசைவெறுப் பின்பமொடு துன்பமுடல் ஆரறிவு*
*மாசுதவிர் கின்ற மனத்திட்பம் - பேசிவையும்*
*கேத்திரமாம் இன்னவற்றைக் கேளாய் விகாரமொடு*
*சாற்றினனீ ருத்தொகுத்துத் தான்.* (எ)

மேலேகூறிய இருபத்துநான்கு தத்துவங்களேயன்றி ஆசை முதலானவை கூட பிரகிருதியின் குணங்களேயன்றி ஆத்மாவின் குணங்கள் அல்ல; ஏனெனில், இவை யெல்லாம் அறியப்படுவனவாத லின்.

(பின்வருந்தும் ஒரு தொடர்.)

**தற்புகழ்ச்சியில்லாமை முதலானவை ஞானத்துக்குரிய குணங்களென்றும், இவற்றிற்கு மாறுபட்டவை அஞ்ஞானத் துக்குரிய குணங்களென்றும் கூறல்.**

*தற்பெருமை இன்மை தருக்கின்மை தீமைபிறர்க்*
*குற்றிழைத்தல் இன்மைகர வின்மைபொறை - உற்றுடைமை*
*மேவுகுரு வற்பணிதல் தூய்மை விடாமுயற்சி*
*காவல்மலி தன்னடக்கம் காண்.* (அ)

*தற்பெருமையின்மை - தாழ்மை : அடக்கம். தன்னடக்கம் - தேஹேந்த்ரியங்களை அடக்குதல். அடக்கலாவது தீநெறியின் மீட்டு நன்னெறியிற் செலுத்துதல்.*

விடயங்க ளில்விருப்பம் மேவாமை நானென்
றடையும்அகங் காரமறல் ஆங்குத் - தொடரும்
பிறப்பிறப்பு மூப்பு பிணிதுயரில் தீமை
உறப்படுவ தோர்ந்திடலும் ஊங்கு. (௯)

விடயங்கள் - விஷயஸுகங்கள் பிறவி முதலானவை துக்ககர மானவை யென்று காணலாலே தேஹேந்த்ரிய ஸுகங்களில் விரக்தியும் ஆத்மஞானத்தில் விருப்பமும் உண்டாகுமாதலின் அது ஞான ஸாதன மாயிற்று.

மக்கள்மனை யாள்மனையென் றின்னவற்றில் வாஞ்சையறல்
தொகைஅபி மானம் தொடராமை - புக்க
விருப்புவெறுப பென்பவைதான் மேவவரின் நெஞ்சம்
திரப்படஓர் தன்மையுறல் தேர். (௧0)

வாஞ்சை-அன்பு. அபிமானம் - பற்று: விருப்பம்; தொடராமை - ஒரு பொருளிலும் பற்றில்லாமை. விருப்பு...யுறல் - விரும்பும் பொருள்கள் கிடைத்தகாலத்தில் களிப்படையாமலும் வெறுக்கும் பொருள்கள் நேர்ந்தபோது சலிப்படையாமலும் ஒரே நிலையாயிருத்தல்.

வேறொருவ ரைக்கருதா யோகத்தால் மேவென்பால்
கூறுநிலை கொண்டதொரு பத்திமையும் - தேறுகநீ
ஊனமறு தூயதலம் உற்றிடலும் மாந்தரொடு
தான்மருவ லில்வெறுப்பும் தான். (௧௧)

வேறொருவரைக்கருதா - வேறொருதெய்வத்தை ரக்ஷகனாக நினையாமல் வாஸுதேவனையே ரக்ஷகனாக நினைக்கின்ற. தூயதலம் உறுதல்: ஏனெனில், தூயதலத்தில் தான் மனம் நிலைகொள்ளும். தூயதலமாவது அசுத்த மில்லாததும் பாம்பு முதலிய கொடிய ஜந்துக்க ளில்லாததுமான இடம். மாந்தரொடு - அவிவேகிகளான ஜனங்களோடு.

ஆருமத்தி யான்ம அறிவில்நிலை பெற்றிடலும்
சாரரிய தத்துவஞா னப்பொருளைத் - தேரலுமென்
றின்னவையே ஞானம் இவைக்கெதிரா உள்ளவெலாம்
பன்னியஅஞ் ஞானமெனப் பார். (௧௨)

அத்தியான்ம அறிவு - ஆத்மாவைப்பற்றின ஞானம். தத்துவஞானப்பொருள் - தத்வ ஜ்ஞானத்தால் அடையும் பொருள் : மோக்ஷம் : ஸம்ஸார நிவிர்த்தி. ஞானம் : ஞானஸாதனமாய ஞானத்தை அடைவித்தலாலே இவையெல்லாம் ஞானம் என்னப்பட்டன.

க்ஷேத்ரஜ்ஞனாகிய பிரமத்தைக் கூறந்தொடங்கி அது ஸத்து மன்று அஸத்துமன்று எனல்.

அறிதற் குரித்தெதுவோ ஆங்கெதனைத் தேர்ந்து
பெறுகிற்பன் வீடொருவன் பெட்பால - உறுமுதலில்
அபபிரமத் தைப்புகலவேன் அன்னதுசத் தன்றசத்தும்
செபபினதீ தன்றென்ப தோ. (௧௩)

முதல் - ஆதி. முதலில் - அநாதியான. சத்தன்று அசத்தன்று - குணம் குறியில்லாமையால் ஸத்து முதலிய வார்த்தைகளால் எடுத்துரைக்கத் தக்கதன்று.

அது எங்கும் வியாபித்துள்ள தெனல்.

எங்குமது கையுளதால் எங்கும் கழலுளதால்
எங்கும்விழி சென்னிமுகம் எய்ந்துளதால் - எங்கும்
செவியுளதாற் செப்புமது சென்றனைத்தும் சூழ்ந்து
புவனமெலாம் உற்றிருக்கும் புக்கு. (௧௪)

இரிபில்லாத க்ஷேத்ரஜ்ஞனுக்குக் கைகால் முதலிய அவயவங்கள் கற்பிக்கப்பட்டன; அதன் உண்மையைக் குறிப்பிக்கும்பொருட்டு அவ்வாறு கூறப்பட்டது.

இந்த்ரியங்களின் செய்கைகளை யுடையதாயினும் இந்த்ரியங்கள் இல்லாததென்றும் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் எல்லாக்குணங்களையும் அனுபவிப்பதென்றுங் கூறல்.

*இந்தியங்க ளின்செயல்கள் யாவும் இலங்கினும்*
*இந்தியங்கள் ஒன்றும் இலாததுகாண் - முந்துறுபற்*
*றில்லதெனும் பற்றும் எப்பொருட்கும் எக்குணமும்*
*இல்லதெனும் துய்த்திடுமே ஏற்று.* (கரு)

*இந்தியங்கள்யாவும் - கர்மேந்த்ரிய ஞானேந்த்ரிய அந்தக்கரணங்களாகிய எல்லாவற்றின் செயல்கள் எல்லாம். பற்றில்லது-ஸம்பந்தம் இல்லாதது. பற்றும் - ஆதாரமாகும்.*

எப் பொருளுக்கும் உள்ளும் புறம்புமாய், அறிதற்கரிதாய், தூரத்திலும் ஸமீபத்திலும் உள்ளதெனல்.

*எப்பொருட்கும் உட்புறமா எய்தும்அச ரம்சரமாம்*
*மெய்ப்படவே தேரரிதாம் மென்மையினல் - செப்பினது*
*தூரத்து மேவரிய தூர்லபமாம் துன்னியுடன்*
*சேரஅரு காவதுமாம் தேர்.* (கசா)

*உட்புறம் - உடம்புக்கு வெளியிலும் உள்ளிலும். உள்ளாவது பிரத்யகாத்மாவா யுள்ளது. அசரம் சரம் - பெயர்வதும் பெயராமல் இருப்பதுமான தேஹம். தேஹத்துக்கு உள்ளும் புறம்புமாயன்றி அத் தேஹமாயும் இருப்பது. மென்மை - ஸூக்ஷ்மம். தூர்லபமாம் - அஞ்ஞானிகளால் அறியப்படாதது. அருகாவது - ஞானிகளுக்கு ஸமீபமாவது.*

**பூதங்களோடு கலந்தும் பிரிந்தும் உள்ளது, எல்லாவற்றையும் விழுங்குவதும் படைப்பதுமாமெனல்.**

பூதங்கள் தோறும் பிரிவற்ற பூரணமாம்
ஓதும்அவற் றிற்பிரிந்தும் உள்ளதுகாண் - ஏதமற
எப்பொருளும் தாங்குவதாம் யாவும் விழுங்குகினும்
எப்பொருளை யும்படைப்ப தீங்கு. (கஎ)

* பிரிவற்ற - ஆகாசம்போல ஸர்வபூதங்களிலும் ஒன்றாயிருப்பது. பிரிந்தும் - ஒவ்வொரு தேஹத்திலும் வெவ்வேறாகப் பிரிந்ததுபோல வும் காணப்படுவது. படைப்பது - பழுதையில் பாம்புபோல ப்ராந்தி. யால் தோற்றுவிப்பது.

**ஒளிக்கொளியாய், இருட்கப்பாலாய், ஞானமாய், ஞேயமாய், அறிவாலறியப்படுவதாய், எல்லார் மனத்திலும் தங்கியிருப்பதெனல்.**

ஒளிக்கொளியாய் ஓங்கிஇருட் கப்புறமாம் என்ப
விளக்கறிவாய் ஞேயமுமா மேவித் - துளக்கமிலா
அவ்வறிவி னலடைவ தாகியெவர் உள்ளத்தும்
எவ்வமற வைகுவதாம் ஈங்கு. (கஅ)

* ஒளிக்கு ஒளி - ஸூர்யன் முதலிய புற ஒளிகள் உள்ளொளி யாகிய ஆத்மாவாலன்றிப் புலப்படாமையால் அவற்றிற்கெல்லாம் ஒளியைத் தருவதாயிற்று. இருள் - அஞ்ஞான விருள்.

**இந்த க்ஷேத்ர ஞான ஞேயங்களை அறிபவன் என்னிலையை அடைவானெனல்.**

கேத்திரமும் ஞானமும் கேடிலொரு ஞேயமும்
சேர்த்துனக்குச் செப்பினேன் சில்லுரையில் - பார்த்தகேள்
என்பத்த னாகி இதையுணர்வான் என்னிலையைத்
துன்பற் றுறற்குரியன் சூழ். (கக)

என்னிலை - மோக்ஷம்.

**பிரகிருதி புருஷன் இரண்டும் அநாதி, எல்லாப் பொருள்களும் அவற்றினின் றுண்டாமெனல்.**

*பகுதி புருடனெனும் இவ்விரண்டும் பார்த்த*
*சகமீ தநாதியெனும் தன்மை - அகமுணர்வாய்*
*எண்ணரிய தோற்றமும் எக்குணமும் அப்பகுதிக்*
*கண்ணிருந்து போதுமெனக் காண்.* (உ0)

*பகுதி புருடன் - ஜடம் ஜீவன். இவை யிரண்டும் ஈசுவரனு டைய அபர ப்ரகிருதியும் பர ப்ரகிருதியும் ஆகும்; ஆதலின் அநாதி. போதும் - ஈசுவர ஸங்கற்பத்தாலே உண்டாகும்.*

**காரணகாரியங்களுக்குப் பிரகிருதியும் ஸுகதுக்காநுபவத்துக்குப் புருஷனும் ஹேதுவெனல்.**

*காரணமும் காரியமும் தோற்றுவிக்கும் காற்பகுதி*
*காரணமாம் என்று கழறுவரால் - ஆரும்*
*சுகதுக்கம் என்னிவற்றைத் துய்க்குமிடைச் சொல்வர்*
*தகுபுருடன் ஏதுவெனச் சார்ந்து.* (உக)

*காரியம் - ஸ்தூலதேஹம். காரணம்-கர்மேந்த்ரியம் ஞானேந்த்ரியம் மனம் புத்தி அஹங்காரம் என்னும் பதின்மூன்று கருவிகள். இவையெல்லாம் பிரகிருதியினின்று உண்டாகின்றன. புருஷன், ஜீவன், க்ஷேத்ரஜ்ஞன், போக்தன் எல்லாம் ஒருபொருளன. ஸுக துக்கங்களின் உணர்ச்சிக்குப் புருஷன் காரணம். ஸுகதுக்கங்களை அநுபவிப்பதே ஸம்ஸாரம்.*

### பிரகிருதியோடு கூடிய புருஷன் பிரகிருதியால் உண்டாகும் இன்பதுன்பத்தை அடைந்து அந்தப் பற்றினாலே பிறப்பை அடைவானெனல்.

*பகுதிதனைத் தற்கிடனாக் கொள்புருடன் பாராய்*
*பகுதிதரும் இன்பொடுதுன் பத்தை - நுகர்வுருவன்*
*உற்றகுணப் பற்றதுவே ஒதுபல யோனியினும்*
*பெற்றபிற விக்கேது பேண்.* (உஉ)

*இடனாக்கொள்புருடன் - பிரகிருதியே தான் என்று பாவிக்கும் புருடன். அக் காரணத்தால் ஸுகதுக்கங்களை அடைகிறான். பிரகிருதி என்பது அதன் கார்யமாய தேஹத்தைக் குறித்தது. குணப் பற்று - ஸுகதுக்க மோஹங்களாகிய குணங்களை அபிமானித்து அவையே தானாகக் கருதுதல்.*

### புருஷன் காண்பவன் முதலான ஸகலமும் ஆவனெனல்.

*காண்பேரன் அநுமதிப்போன் காலாகித் தாங்குப்பவன்*
*மாண்புடனே துய்ப்போன் மகேசனே - பேணுபர*
*மான்மாவென் றின்னவெலாம் ஆகுவனே ஆருடற்கண்*
*வழுன்புருடன் என்று மதி.* (உரு)

*காலாகி - தூண்போல ஆதாரமாகநின்று. துய்ப்போன் - ஸுக துக்காதிகளை அறிந்து அநுபவிப்பவன். ஆருடற்கண் வான்புருடன் - இந்த தேஹத்தில் நிலைபெற்றவனாகிய புருஷன்.*

### பிரகிருதி புருஷர்களை விவேகித்தறிபவன் புநர்ஜந்மத்தை அடையானெனல்.

*இப்பரிசு சொற்புருடன் ஏற்ற குணங்களினோ*
*டப்பகுதி என்னிரண்டும் அம்புவியில் - மெய்ப்படவே*
*நன்கறிவான் எந்நெறியில் நண்ணுகினும் மீண்டுமொரு*
*வன்பிறவி எய்தான் மதி.* (உசு)

*இப்பரிசு அறிவான் - புருஷனைத் தான் என்றும் பிரகிருதியைத் தனக்கு அந்யமென்றும் அறிபவன்.*

**சிலர் தியானத்தாலும், சிலர் சாங்கிய யோகத்தாலும், சிலர் கர்மயோகத்தாலும் ஆத்மாவை அறிவாரெனல்.**

ஆன்மாவை ஆன்மாவில் ஆன்மாவால் ஆங்குசிலர்
பான்மையுறு தியானத்தாற் பார்ப்பர்சிலர் - மேன்மையுறு
சாங்கியமாம் யோகத்தாற் சார்ந்தறிவார் வேறுசிலர்
ஆங்கரும யோகத்தால் ஆர்ந்து. (உரு)

ஆன்மாவை - உள்ளேநின்ற சைதந்யத்தை. ஆன்மாவால் - தியானத்தால் பரிசுத்தமாகிய அந்தக்கரணத்தால். ஆத்மாவில் - புத்தியில். தியானமாவது இந்த்ரியங்களை விஷயங்களில் மீட்டு மனத்துட் செலுத்திப் பின்னர் மனத்தைக் காண்பவனாகிய ஆத்மாவில் செலுத்தி அந்த ஆத்மாவைச் சிந்தித்திருத்தல். சாங்கியமாவது காணப்படுவதெல்லாம் குணபேதமென்றும் காண்பவனாகிய ஆத்மா இவற்றில் வேறென்றும் நித்யனென்றும் அறியும் அறிவு.

**சிலர் பிறருடைய உபதேசத்தால் பூஜித்து அதனால் மோக்ஷத்தைப் பெறுவாரெனல்.**

வேறுசிலர் இந்நெறியின் மெய்ம்மையுண ராதுபிறர்
கூறுமொழி கொண்டணைந்து பூசிப்பர் - தேறுகீ
அம்மொழியைப் பற்றுதலால் அன்னார்தா மும்கடப்பர்
வெம்மைதரும் வீவை மிக. (உசு)

இந்நெறியின் - கீழே கூறிய தியானயோக மார்க்கங்களால். மொழிகொண்டு - உபதேசத்தைப் பெற்று. அணைந்து பூசிப்பர் - சிரத்தையோடு தியானிப்பர். அன்னார்தாமும்: தாமே விசாரித்துணரும் சக்தியில்லாராய்ப் பிறர்சொன்னதை நம்பினவரே ஸம்ஸாரத்தைக் கடப்பாராயின் சொந்தமாக விசாரித்து நிச்சயித்துணர்பவர்கள் கடத்தலில் ஸந்தேகமும் உண்டோவெனல். வீவை - இறப்பை: ஸம்ஸாரத்தை.

### எல்லா உயிர்களும் க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகத்தால் உண்டாவதெனல்.

தாவரமோ சங்கமமோ யாது சனிப்பதுகாண்
பூவுலகிற் பாரதருட் போரேறே - தாவிலது
கேத்திரமும் கேத்திரஜ்ஞ னும்புணரக் கேடின்றி
வாய்த்திடுமென் றோர்ந்திடுக மற்று. (உஎ)

புணர: க்ஷேத்திர க்ஷேத்ரஜ்ஞர்களின் ஸம்பந்தம் எப்படிப்பட்டதெனில், புழுதையைப் பாம்பென்றும் கிளிஞ்சலை வெள்ளியென்றும் அறிவது போல ஒன்றைமற்றொன்றாக மாறுபட உணரும் அத்தியாஸ ஸம்பந்தமாம்.

### எல்லா உயிரிடத்தும் ஒரே தன்மையாயிருக்கும் ஈசுவரனை அழிவில்லாதவனென்று அறிபவனே ஞானியெனல்.

எல்லா உயிர்க்கண்ணும் ஏகநிலை யாஉறையும்
சொல்லாரும் ஈசனையே தோள்வலியாய் - நில்லா
தழியும்உயிர்க் கண்ணே அழியாதான் என்னக்
கழியஉணர் வான்உணர்வான் காண். (உஅ)

அழியாதான் - இறப்புப்பிறப்பு முதலிய எவ்வகை விகாரமும் இல்லாதவன். கழிய உணர்வான் - தீர விசாரித்தறிபவன். உணர்வான் - மெய்யாக உணர்பவன்.

### எங்குமுள்ள ஈசுவரனைக் காண்பவன் முக்தியை அடைவானெனல்.

எங்கும் ஒரேநிலையாய் எய்ந்திருப்பன் ஈசனெனச்
சங்கையுறக் காணுமவன் தன்னைத்தான் - மங்க
அழியானாய் அந்தத் தடைவானே என்றும்
கழியா உயர்கதியைக் கண்டு. (உகூ)

தன்னை அழித்தலாவது தானாகிய ஆத்மாவைத் தானென்று கருதாமல் தானல்லாத தேஹத்தைத் தானென்று கருதி அதனால் ஒன்றின்பின் னொன்றாக அநேக ஜன்மங்களை யடைந்து ஒவ்வொரு தேஹத்தின் அழிவுக்கும் தான் காரணமாதல்.

**எல்லாக் கர்மங்களும் பிரகிருதியினால் உண்டாகுமென்றும் ஆத்மாவுக்கு ஒருகருமமும் இல்லையென்றும் காண்பவனே ஞானியெனல்.**

எவ்வகையாம் கன்மமும ஈங்குப பகுதியினால்
அவ்வகையின் ஆமென்றும் ஆதலினால - செவ்வியுறும்
ஆன்மாவுக் கோர்செயலும் ஆங்கிலையென் றும்நெறியிற்
காண்பானே காண்பானாய காண். (௩௰)

*பகுதி - ஈசுவரமாயை; காரணகாரியங்களாக மாறுபடுகின்ற மாயையினாலே.*

**பூதங்களெல்லாம் ஒன்றில் வெவ்வேறாகத் தங்கியிருந்து அதினின்றும் வெளிபடுதலை அறிபவனே ஞானியெனல்.**

பூதங்கள் வெவ்வேறு ஒன்றிற் பொருந்துறலும
ஓதுமதன் கண்ணினின்றே உற்பவித்து - மீது
விரிதரலும் என்றொருவன் மெய்யாகக் காண்பான்
ஒருபிரமம் அன்றவனே ஊங்கு. (௩௰௧)

*ஒன்று - ஆத்மா.*

**பரமாத்மா தேஹத்தில் நின்றபோதிலும் அதற்குக் கர்மமுமில்லை பாவமும் இல்லையெனல்.**

ஆதிகுணம் இன்மையினால் ஆங்கொரழி வாராத
தீதில்பர மான்மாஇத் தேகத்தில - பேதமற
நின்றாலும் ஓர்செயலும் நேர்ந்தியற்றா தன்னதுதான்
ஒன்றாலும் மாசடையா தற்று. (௩௰௨)

*மாசடையாது - கர்மபலனாகிய ஸுக துக்கங்களை அடையாது.*

**அது ஆகாசத்தைப்போல யாதொருமாசும் அடையாதேனல்.**

எங்கும்நிறை வுற்றவெளி சூக்குமமாம் ஏதுவினால்
அங்கதுவோர் மாசும்அடை யாததுபோல் - இங்குடலுள்
எல்லாம் நிறைந்துறையும் ஆன்மாவும் எய்தாதே
வல்லாய்ஓர் மாசும் மதி. (௩௰௩)

### ஒரே ஸூர்யன் உலகமெல்லாம் விளங்குவதுபோல ஒரே பரமாத்மா க்ஷேத்ர மெல்லாம் விளக்கும் எனல்.

கதிரோன் ஒருவனே காணும்உல கெங்கும்
புதியொளிபரப் பெய்யுமது போல - மதிதனுறு
க்ஷேத்திரங்கள் யாவும் க்ஷேத்ரி ஒளிவிப்பான
க்ஷேத்திரி தானகோனாய் இங்கு. (௩௪)

க்ஷேத்திரி - பரமாத்மா. இவ்வுபமானத்தால் பரமாத்மா ஒன்றே எல்லா க்ஷேத்ரங்களிலும் பிரகாசிக்கின்றதென்றும் அது மலினம் அடைவதில்லையென்றும் பெறப்படும்.

### கீழே கூறியவற்றை அறிபவர் ஞானத்தைப்பெற்று மோக்ஷத்தை அடைவாரெனல்.

க்ஷேத்திரமே க்ஷேத்திரஜ்ஞன் என்னக் கிளக்கிலங்கின்
வாய்த்தவொரு பேதமும் வண்பூதம் - தோற்றுமுதற்
காரணத்தின் விவரமும் காண்பார்ஞா னக்கண்ணாற்
சாருவரே தற்பரத்தைத் தாம். (௩௫)

### க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ விபாகயோகம் முற்றிற்று.



பதினான்காம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1-2. உத்தமஞானோபதேசம் செய்வேனெனல்.

3-4. க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகத்தால் ஹிரண்ய கர்ப்பன் உண்டாதலும், அவ் வழியே எல்லா உயிர்களும் உண்டாதலும் கூறல்.

5. ஸத்வாதி குணங்கள் ஜீவனுக்கு பந்தமெனல்.

6-18. ஸத்வாதி குணங்களையும் அவற்றின் கார்யங்களையும் தெரிவித்தல்.

19-20. பாரமார்த்திக ஞானத்தால் மோக்ஷம் உண்டாதல் கூறல்.

21. குணாதீதனுடைய இலக்கணம் யாதென்று அருச்சுனன் கேட்டல்.

22-25. குணாதீதனுடைய இலக்கணங்களைக் கூறுதல்.

26. குணாதீத ஸாதற்கார்ஹம் நிலையான பக்தியோகத்தால் உண்டாமெனல்.

27. எல்லாவற்றிற்கும் ஆத்மாவே ஆதாரம் எனல்.

# பதினான்காம் அத்தியாயம்.

## குணத்ரய விபாக யோகம்.



### காப்பு.

பத்துருவம் கொண்டடைந்து பாரோர் படர்தீர்த்த
நித்தனருள் அல்லாலிந் நீணிலத்தில் - சித்தம்
தெளிவிப்ப தியாதுவினைச் சேதிக்கல் ஆகாத்
தளையுற்ற மானுடர்க்குத் தான்.

### பாயிரம்.

முக்குணமும் அன்னஉயிர் மோகமுறக் கட்டுவதும்
அக்குணத்தின் ஆன்மா அகல்நெறியும் - புக்கவற்றை
நீங்கியபின் நிற்கும் நிலைமையும் நேர்ந்துரைப்பான்
பூங்கமலக் கண்ணன் புரிந்து.



### நூல்.

**மோக்ஷத்தைப் பெறுவிக்கும் உத்தமஞானத்தை உனக்குக் கூறுவேனெனல்.**

ஞானங்க ளுள்முதன்மை நண்ணுவதாம் மேலான
ஞானமதை மீண்டுனக்கு நான்புகல்வேன் - ஞானமதை
ஓர்ந்துமுனி வோரெல்லாம் ஓங்குமொரு சித்தியினைச்
சார்ந்தனரோ மற்றதனைத் தான். (க)

**இந்த ஞானத்தை அநுஷ்டிப்பவர் என்றும் ஜநநமரணம் அடையாரெனல்.**

செப்புறுமிஞ் ஞானத்தைத் தீதின் றநுட்டித்தே
ஒப்பருமென் றன்னியலை உற்றோர்கள் - எப்பொருளும்
தோற்றும் படைப்பினிலும் தோன்றார் ஒடுக்கத்தும
மாற்றமடை யார்நீ மதி. (உ)

**பிரகிருதியாகிய கருப்பையில் கருவை நான் வைத்தலினாலே உயிர்கள் உற்பவிக்கின்றன எனல்.**

பேரான மாயையே என்கருப்பை பெட்பினதில்
ஆரும் கருப்பத்தை ஆர்வமுடன் - சேரயான்
வைத்திடுவேன் மற்றதனுல் வாழுமுயிர் யாவைக்கும்
உற்றுளதா கும்பிறபபென் றோர். (ங)

என்கருப்பை - எனக்குக் கர்ப்பத்தை வைத்தற் குரிய இடமாகும். கருப்பம் - ஹிரண்யகர்ப்பனைத் தோற்றுவிக்கும் பீஜம். அதனுல் - அந்தபீஜத்தால்.

**எல்லா உயிர்களுக்கும் பிரகிருதி கருப்பையும், நான் வித்தைக் கொடுக்கும் தந்தையும் ஆவேனெனல்.**

எவ்வகைய யோனிகளில் எவவுயிர்கள் தோன்றுகினும்
அவ்வுயிர்க்கெ லாம்கருப்பை அப்பகுதி - செவ்விபொடு
வித்தளிக்கும் தந்தையான் மெய்மையிது மற்றிதனைக்
குத்திரமில் கோவே குறி. (ச)

யோனி - ஜாதி. பகுதி - பிரகிருதி : மாயை.

**ஸத்வாதி முக்குணங்களும் பிரகிருதியில் தோன்றி தேஹியை பந்திக்குமெனல்.**

சத்துவமும் ராசதமும் தாமதமும் அப்பகுதி
உற்றிருந்து தோன்றி உடலின்கண் - குற்றமற
வாழுகின்ற மாய்வில்லா மாண்பாரும் தேகிதனைத்
பிழையுறக் கட்டும் பெரிது. (ரு)

ஸாத்விகமானது ஸுகம் ஞானம் என்னும் பந்தங்களால் தேஹியைக் கட்டுமெனல்.

இன்னவற்றுட் சாத்துவிகம் யாதுமலம் இன்மையினால்
பன்னொளிய தாகுமிடர் பண்ணாது - துன்னும்
சுகத்தினிலும் ஞானத்தும் தோன்றும் விருப்பால்
தகைத்ததனைக் கட்டுமது தான். (௬)

தகைத்து - தடுத்து. அதனை - ஆத்மாவை.

ஆசை நுபமாகிய ராஜஸம் பற்றையும் வேட்கையையும் கொடுத்துக் கர்மப்பற்றினாலே பந்திக்குமெனல்.

ஆசைவடி வாகி இராசதந்தான் ஆருயிர்க்குப்
பாசமொடு வேட்கை பயந்திடுமென் - றோசைமலி
குந்தியருள் மைந்த குறித்தறிதி கன்மத்தால்
பந்தனைசெய் யுமுயிரைப் பார். (௭

வேட்கை - திருஷ்ணை; அதாவது அடையாததை அடைய வேண்டுமென்னும் விருப்பம். பாசம் - ஸங்கம்; அதாவது அடைந்த தன் மேல் பற்று. கன்மத்தால் - கர்மங்களில் இச்சையைக் கொடுத்தலால்.

தாமஸம் அஜ்ஞானத்தால் உண்டாகி, மோஹத்தை விளைந்து, சோம்பல் அஜாக்கிரதை தூக்கம் என்பவற்றால் தேஹியை பந்திக்கும்.

தாமதம்அஞ் ஞானத்தாற் சம்பவிப்ப தெவ்வுயிர்க்கும்
தீமையுறு மோகத்தைச் செய்வதுகாண் - ஆமதுதான்
சோம்பல் அசட்டையொடு துன்னுதுயில் இன்னவற்றால்
தாம்பெனவே கட்டுவது தான். (௮)

## ஸாத்விகாதி குணங்களின் செயலைக் கூறுதல்.

சாத்துவிகம் இன்பதனிற் சார்விக்கும் ராசதமோ
பூதநிடுகன் மத்திற் புகுவிக்கும் - நீத்தலரும்
தாமதமதான் ஞானம் தனைமறைத்த சட்டையினில்
நிமைடறச் சேர்க்கும் தெரி. (௯)

அசட்டை - தனக்கு நியமித்தவைகளாகிய உடனே செயயவேண்டிய காரியங்களைச் செய்யாமை : பிரமாதம்.

## இரண்டு குணங்களை உள்ளடக்கி மூன்றாவது மேலெழுந்து தன் செயலைக் காட்டுமெனல்.

ராசதமும் தாமதமும் உள்ளடக்கி நன்கெழுமால்
ஆதிலொரு சாத்துவிகம் அவ்வாறே - ராசதமும்
சத்துவமும் உள்ளடக்கித் தாமதமாம் மற்றிரண்டும்
உய்த்தடங்கி ராசதமாம் ஓர். (௧௦)

தாமதமாம் - தாமதகுணம் மேலெழும்.

## பஞ்சேந்த்ரியங்களின் வழியாகவும் புத்தி பிரகாசிக்கும்போது ஸத்வம் மேலிட்டதென் றறியலாமெனல்.

உற்றதொரு தேகத்தின் ஒவ்வொருநல் வாயில்வழி
பெற்றதொரு ஞானப் பிறங்குமொளி - துற்றெழுமேல்
அப்போது சத்துவந்தான் ஆர்ந்துமே லிட்டதெனத்
தப்பா தறிந்திடலாம் தான். (௧௧)

வாயில்: சுரோத்ராதி இந்த்ரியங்கள் வெளிப்பொருள்களை உணர்தற்கு வாயில்போன்றிருத்தலால் வாயில் என்னப்பட்டன. ஞானவொளி - புத்தியால் நிகழ்கின்ற அறிவு.

ராஜஸகுணம் மேலிட்டபோது லோபம் முதலிய
குணங்கள் தோன்றுமெனல்.

*இவறல் செயல்முயற்சி ஏற்றபொறை இன்மை*
*தவமுதிரும் ஆசையெனச் சாற்றும் - இவைமலியும்*
*பாரதர்கள் ஏறே பகரும் இராசதமேல்*
*ஆரும்அம யத்தென் றறி.* (௧௨)

*இவறல் - பிறர் சொத்துக்கு ஆசைப்படுதல். பொறையின்மை - ஸ்நேஹ முதலியவற்றை அடக்க வலியில்லாது வெளிப்படுத்தல். தவ - மிகவும்.*

தமோகுணம் மேலிட்டபோது அவிவேகமுதலிய
குணங்கள் மிகும் எனல்.

*ஒளியின்மை சோம்புடைமை உற்ற அசட்டைத்*
*தெளிவிலொரு மோகநிலை சேரும் - குருகுலத்தார்*
*ஏறே தமோகுணமே விட்டதொரு போதென்னத்*
*தேறுநின் னுள்ளம் தெளி.* (௧௩)

ஒளியின்மை-*அவிவேகம். அசட்டை-பிரமாதம். தேறு - தேறி: அறிந்து.*

ஸத்வகுணம் மேலிட்டபோது ஒருவன் மரணமடையின்
மேலானலோகத்தை அடைவானெனல்.

*உடற்கணுறை தேகியதொண் சத்துவமேல் ஓங்கும்*
*இடத்ததைவிட் டேகுமெனில் எண்ணாய் - வடுத்தவிரும்*
*உத்தமரைப் பூசிப்போர் உற்றிடுமப் பேருலகைப்*
*பெற்றிடுமே பிழை அற.* (௧௪)

*ஓங்குமிடத்து - ஓங்கும்போது.*

**ராஜஸம் மேலிட்டபோ திறந்தால் கர்மத்தில் சிரத்தையுள்ள மனிதசாதியில் பிறப்பான்; தாமஸம் மேலிட்டபோ திறந்தால் பசு முதலிய இழிந்த ஜன்மங்களை அடைவன் எனல்.**

*ராசதத்தில் தானிறக்கின் நாடிச் செயல்விழையும்*
*தேசுடையார் தம்பாற் செனித்திடுமால் - ஆசுடைய*
*தாமதத்தி லேஇறக்கின் சார்ந்திடுமே ஆரறிவின்*
*பாமரமாம் யோனியிலே பார்.* (கரு)

*பாமரமாம் யோனியில் சாரும் - பகுத்தறிவில்லாத விலங்குகளாகப் பிறப்பன்.*

**ஸாத்விகம் நன்மையையும், ராஜஸம் துன்பத்தையும், தாமஸம் அஜ்ஞானத்தையும் பயனாகக் கொடுக்குமெனல்.**

*நன்மையுறு சாத்துவிக கன்மங்கள் நல்குபயன்*
*நின்மலமாம் என்ப நிலவுபயன் - புன்மையுறும்*
*ராசதத்துக் குத்துயராம் நாடுபயன் தாமதத்துக்*
*காசுடைய அஞ்ஞானம் ஆம்.* (கசா)

*நின்மலம் - பரிசுத்தமான ஸுகம் : துக்கலேசமில்லாத ஸுகம். ராசதத்துக்கு - ராசதச்செய்கைகளுக்கு. தாமதத்துக்கு - தாமதச் செயகைகளுக்கு.*

**ஸத்வத்தால் ஞானமும், ராஜஸத்தால் ஆசையும், தாமஸத்தால் அஜாக்கிரதையும் மோஹமும் அஜ்ஞானமும் உண்டாமெனல்.**

*சத்துவத்தால் ஞானம் தழைத்திடுமே ராசதத்தால்*
*உற்றிடுமே ஆசை உணர்வழிக்கும் - அத்தமத்தால்*
*சாக்கிரதை யின்மையொடு சம்பவிக்கும் மோகமும்*
*நீக்கருமஞ் ஞானமுமே நேர்ந்து.* (கஎ)

*சத்துவத்தால் - ஸத்வகுணம் மேலிட்டபோது.*

**ஸத்வகுணம் பிரதானமாக உடையவர் மேலுலகங்களையும், ரஜோகுணமே அதிகமாக உடையவர் மநுஷ்ய லோகத்தையும், தமோகுணமே முக்யமாக வுடையவர் இழிந்த ஜன்மங்களையும் அடைவாரெனல்.**

*சத்துவத்தில் தங்குபவர் சார்ந்திடுவார் மேலுலகை*
*மத்தியிடம் ராசதர்கள் வாய்த்திடுவார் - குற்றமுறு*
*தாமதத்தில் தங்குபவர் சார்ந்திடுவார் காணாய்நீ*
*ஏமமுறு கீழிடத்தை ஈங்கு.* (கஅ)

**குணங்களே எச்செயலுக்கும் காரணமென்று கண்டு குணங்களுக்கு மேலான பொருளை என்று ஒருவன் அறிகிறானோ அன்றைக்கு அவன் என் நிலையை அடைவானெனல்.**

*ஆரறிஞன் எஞ்ஞான் றறைகுணத்தினை வேறொன்றைக்*
*காரணமா ஓர்செயற்கும் காணானோ - சீருடனென்*
*றிக்குணத்தின் மேலாம் இரும்பொருளைத் தேர்ந்திடுமோ*
*அக்கணத்திற் சாரும்எனை ஆங்கு.* (கக)

*காரணமாக - கர்த்தாவாக.*

**முக்குணங்களையும் ஒருவன் கடந்தபோது முத்தியை அடைவனெனல்.**

*தேகியிந்தத் தேகம் செனித்துவரக் காரணங்கள்*
*ஆகியவிம் முக்குணமும் ஆங்குகடந் - தேகுமெனில்*
*பின்னர்ப் பிறப்பிறப்புப் பேசுதுயர் முற்றொழிந்து*
*துன்னுவனே வீடதனைச் சூழ்.* (உ0)

*குணத்தைக் கடத்தலாவது அவற்றின் பற்றொழிதல், குணரஹிதனாதல்.*

**குணங்களைக் கடந்தவன் தன்மை யாது, அவன் எவ்வாறு கடப்பான் என்று அருச்சுனன் கேட்டல்.**

*கூறியவாம் இம்முக் குணங்களையும் ஆங்குக்கடந்*
*தேறினவன் யாதாம் இயற்கையினன் - வீறுடையான்*
*தன்னடக்கை யாதவனிச் சாற்றுகுணத் தைக்கடத்தல்*
*எந்நடக்கை யாலிசைப்பாய் ஈங்கு.* (உக)

**அவர் குணங்களின் பயனாகிய ஒளி முதலியவற்றை விரும்பலும் வெறுத்தலும் இல்லானெனல்.**

*ஆரும்ஒளி யும்செயலும் ஆகாத மோகமும்*
*சார எதிர்ப்படினும் தான்வெறுன் - நேருமவை*
*நில்லா தொழிந்திடினும் நெஞ்சில்விழை யானவற்றைக்*
*கல்லாய்நீ இன்னதனைக் கண்டு.* (உஉ)

(பின்மூன்றும் ஒரு தொடர்.)

**பக்ஷபாதமின்றி குணத்தால் சலியாமல் செய்கைகளெல்லாம் குணத்தால் உண்டாகின்றன வென்று கருதுவானெனல்.**

*ஓரம் அகன்றவனே உற்றகுணத் தாற்சலியா*
*தாரும் குணங்கள்செயல் ஆக்குவன - தேரினென்*
*றெண்ணினனாய் நெஞ்சம் துளங்கானாய் என்றைக்கும்*
*நண்ணும்நிலை பேரானாய் நன்கு.* (உ௩)

ஓரம் - பக்ஷபாதம். சலியாது - அசையாமல். தேரின் குணங்கள் செயல் ஆக்குவன என - ஆலோசிக்குமிடத்து செய்கைகளெல்லாம் தேஹாதி காரணங்களாகிய மாறிய குணங்களால் செய்யப்படுவன என்று. 'எண்ணினனாய்', 'பேரானாய்' என்பவை அடுத்தபாட்டில் 'உறைந்திருக்கும்' என்பதைக்கொண்டு முடியும்.

இன்ப துன்பங்களையும், இகழ்ச்சி புகழ்ச்சிகளையும்,
பொன்னையும், கல்லையும், விருப்பு வெறுப்பையும்,
அவன் ஒரு தன்மையாகக் கருதுவனெனல்.

*இன்பமொடு துன்பும் இகழ்ச்சியொடு நன்மதிப்பும்*
*பைம்பொனொடு கல்லும் பகர்வெறுப்போ - டன்புமிவை*
*ஒன்று மதித்துத்தன் உள்ளே உறைந்திருக்கும்*
*குன்றுத ஞானியெவன் கூறு.* (உச)

*தன் உள்ளே உறைந்திருக்கும் - ஆத்ம த்யானத்தில் நிலைபெற்றிருப்போனாகிய.*

அவன் மானாவமானத்திலும் நண்பர் பகைவரிடத்தும்,
ஒரு தன்மையாயிருந்து கர்மங்களை விட்டிருப்பானெனல்.

*மானவ மானத்தும் வாய்த்தபகை நட்பிடத்தும்*
*ஆனமல் ஓர்நிலையா ஆங்கிருந்து - தானாகச்*
*செய்கருமத் தைத்தவிர்நேர்ந்தான் யாவனவன் சென்றேனும்*
*மெய்யகுணத் தைக்கடந்து மேல்.* (உரு)

நிச்சலமான பக்தியினால் பகவானைப் பூஜிப்பவன்
பிரமத்தை அடைவானெனல்.

*சலியாத பத்தியினால் என்றனையே சார்ந்து*
*நலியாது பூசிக்கும் நல்லோன் - வலிசெறியும்*
*முக்குணத்தை யும்கடந்து முன்னரிய பிரமத்தைத்*
*தக்கவனும் தானடையச் சார்ந்து.* (உசா)

*'பிரமத்தைச் சார்ந்தடையத் தக்கவனும்' என்று கூட்டுக*

**பிரமத்துக்கும், அழியாத மோக்ஷத்துக்கும், சாசுவதமான கர்மத்துக்கும், இன்பத்துக்கும், பகவானே இருப்பிடமெனல்.**

*ஆர்பிரமத் துக்கும் அழியாப் பதவிக்கும்*
*சாரநிலைய தான தருமமொடு - பேரரிய*
*இன்பினுக்கும் யானே இருப்பிடமா வேனென்று*
*அன்பின் அறிந்திடுவாய் ஆங்கு.* (௨௭)

குணத்ரய விபாக யோகம் முற்றிற்று.



பதினைந்தாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1-2. ஸம்ஸாரத்தை விருக்ஷமாக வர்ணித்தல்.

3-5. இந்த ஸம்ஸார விருக்ஷத்தை அஸங்கம் என்னும் ஆயுதத்தால் வெட்டி யெறிந்தால் ப்ரஹ்மபதம் உண்டாகு மெனக் கூறல்.

6. ப்ரஹ்மபத லக்ஷணம் கூறுதல்.

7-9. ஜீவன் ஈச்வரனுடைய அம்சமென்றும், அது உடலைவிட்டுப் போகும்போது இந்த்ரியங்கள் யாவற்றையும் தன்னுடன் ஆகர்ஷித்துக்கொண்டு போகுமென்றும் கூறல்.

10-11. மூடர்களுக்கு ஆத்மஞானம் உண்டாகாதெனல்.

12-15. சுருக்கமாக விபூதியை வர்ணித்தல்.

16-17. க்ஷரமும் அக்ஷரமும் உத்தம புருஷனின் நிருபணமும் உணர்த்துதல்.

18-19. பகவான் உத்தம புருஷனென்றும், அவனை அவ்வாறு தெரிந்துகொள்ளும் பலம் இன்னதென்றும், ஹேது பூர்வமாகச் சொல்லுதல்.

20. பகவத் தத்வஞானத்தை வியத்தல்.

# பதினைந்தாம் அத்தியாயம்.

# புருஷோத்தம ப்ராப்தி யோகம்.



## காப்பு.

*மாயாத வாழ்வை மனமே பெறுவாயேல்*
*தூயானைத் துட்டர்தமைச் சுட்டறுத்து - நேயமன்*
*நல்லார் தமைப்புரக்க நானிலத்திற் போநமறைச்*
*சொல்லானைச் சூழ்ந்து துதி.*

## பாயிரம்.

*சார்தருசம் சாரத் தருவைச் சிதைத்தெறியின்*
*சேரரிய வீடுறலும் சீவனது - நீரதுவும்*
*தானே எவர்க்குமமேல் ஆம்புருடன் என்பதுவும்*
*ஞானு கரன்வகுக்கும் நன்கு.*

---

## நூல்.

### ஸம்ஸாரத்தை ஒரு அரசமரமாக வைத்துக்கூறல்.

*வேர்மிசையும் கீழே விரிசினையு மாமிளிரும்*
*சேரழிவில் ஓரரசைச் செப்புவரால் - சீர்மறைகள்*
*அத்தருவின் பத்திரமாம் அன்ன தறிந்திடுவான்*
*உய்த்துணர்வன் எம்மறையும் தேர்.* (க)

*மிசை - மாயையோடு கூடிய ப்ரஹ்மத்தில். கீழ் - பிர்மாதிகள். ப்ரஹ்மத்தை வேராகவும் பிர்மாதியரைக் கிளைகளாகவும் உடைய ஸம்ஸாரமாகிய அரசமரம் ஒன்றைப்பற்றிச் சொல்வார்கள்.*

**அதன்கிளைகள் ஸத்வாதி குணங்களால் செழிப்படையும் எனல்.**

*ஆரும் அதன்கிளைகள் கீழ்மேல் அடர்ந்திருப்ப*
*சேரும் குணத்தாற் செழித்திடுவ - கூர்விடயம்*
*நற்றளிராம் ஞாலத்தில் கன்மத்தை நல்கும்வேர்*
*உற்றிடுமே கீழ்நோக்கி ஊன்று.* (உ)

*கீழ்மேல் - கீழுலகங்களிலும் மேலுலகங்களிலும். வேர் - சில்லி வேர்கள். தர்மாதர்மங்களை உண்டுபண்ணும் வாஸனைகள் இங்கு வேரெனப்பட்டன.*

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

**இது அறிதற்கரியது, இதை வைராக்கியமாகிய வாளால் சிதைத்து,**

*ஈங்கறிவார் இல்லை இருப்பும் இதன்வடிவும்*
*ஓங்கும் இதன் அந்தமும் உற்பவமும் - நீங்கரிய*
*வன்மையொடு வேரூன்றும் மற்றிதனை வைராக்கியமாம்*
*திண்படையி னாற்சிதைத்துத் தேர்ந்து.* (ங)

*இப் பாடலின் முற்பாதியை ஒருவாக்கியமாகவும், தனிச்சொல்லோடு பிற்பாதியை அடுத்தபாடலோடு கூட்டியும் பொருள்கொள்க.*

**புருஷனே புகலிடமென் றெண்ணி மீட்சியில்லாத விஷ்ணுபதவியை அடையவேண்டுமெனல்.**

*பின்னெதனைப் பெற்றோர்பின் மீளாரப் பேருலகுக்*
*கந்நிலையைத் தேடல்முறை ஆமேகாண் - முனனெவனில்*
*தொல்லைச்சம் சாரமெலாம் தோன்றிவரும் அப்புருடன்*
*நல்லருளே இன்புகலா நன்கு.* (ச)

*அந்நிலையை - அந்த விஷ்ணுபதத்தை. நல்லருளே புகலாகக் கருதி அந்நிலையைத் தேடல் முறையாம் என்று கூட்டுக.*

அந்த நித்யபதவியை அஜ்ஞானம் நீங்கிய ஞானிகள் அடைவாரெனல்.

செருக்கொடுமோ கம்கீழன்றே அத்யான்மத் தியானத்
திருப்பவராய் ஆசையொழிந் தின்பு - நெருக்குதுயர்
என்னிரண்டும் ஆற்றவராய் அஞ்ஞானம் இற்றொழிந்தார்
துன்னுவரந் நித்தநிலை சூழ். (ரு)

அது மேலாகிய விஷ்ணுபதவி யெனல்.

வெங்கதிரோன் அன்னதனை மேவவிளக் கான்மதியும்
பொங்கழலும் பொற்பிற் பொலிவியா - துங்கமுறும்
அத்தலத்தைச் சார்ந்தோர்பின் மீளார்கள் ஆயதுநான்
உற்றுறையும் ஒண்பதமென் றோர். (சு)

ஜீவன் பரமாத்மாவாகிய நாராயணனது ஒரு கூறு, அது இந்த்ரியங்களைத் தன்னிடத் திழுக்குமெனல்.

என்ன தநாதியாம் கூறதொன் றிவ்வுலகில்
மன்னுயிர்தான் ஆகுமது மாண்பகுதிக் - கண்ணுர்
மனத்தினொடு மூவிரண்டா வாய்ததஇந்தி யத்தை
இனத்தொடுதன் பாலிழுக்கும் ஏய்ந்து. (எ)

என்னது - பரமாத்மாவினது. உயிர் - ஜீவாத்மா. பகுதிக்கண்ணுர் - பிரகிருதியின் கார்யமாகிய செவி முதலிய அவயவங்களில் தங்கிய.

பிறக்கும்போதும் இறக்கும்போதும் ஜீவன் இந்த்ரியங்களை விட்டுப் பிரியாதெனல்.

சீவனொரு தேகத்தைத் தேடியெடுக் கும்பொழுதும்
பூவுலகில் விட்டதனைப் போம்பொழுதும் - மேவுமிவை
ஆறினையும் பற்றி அவற்றோ டகன்றிடுமால்
நாறுமணம் கொள்வளிபோல் நன்கு. (அ)

மெய் முதலிய அவயவங்களில் தங்கி விஷயங்களை அநுபவிக்குமெனல்.

மெய்வாய்கண் நாசிசெவி மேவுமனம் என்னிவற்றைப்
பொய்யாது தன்வசத்தில் போதக்கொண் - டையவவன்
ஐம்புலத்தால் ஆரும் விடயங்கள் அத்தனையும்
இன்புறவே தான்நுகரும் ஈங்கு. (௯)

மனத்தை ஒவ்வொரு இந்த்ரியங்களோடும் தனித்தனியே செலுத்தித் தனக்குக் கருவியாகக் கொள்ளுகின்றான்.

ஆச் சீவனை மூடர் அறியார் எனல்.

செல்பொழுதும் செல்லா திருக்கையிலும் சேர்குணத்தைப்
புல்லினுைய் ஒன்றைப புசிக்கையிலும் - சொல்லவனை
உற்றுணரார் பேதையர்கள் ஓங்கறிவாம் உள்விழியைப்
பெற்றவரே காண்பார் பெரிது. (௧0)

செல்பொழுதும் - உடலைவிட்டு நீங்கும்போதும். குணம் - ஸுக துக்க மோஹங்கள். ஒன்றைப் புசிக்கையிலும்-விஷயங்களை அறியும் போதும்.

யோகிகள் யோகமுயற்சியினால் இச் சீவனை அறிவார்கள், மூடர்கள் அறியாரெனல்.

முயன்றரிய யோகியர்கள் முன்னிஉணர் வாரால்
பயின்றிடுதம் உள்ளுறையும் பண்பால் - உயர்ந்தோனைத்
தூய்மையிலா மூடர்மிகத் துன்னி முயன்றாலும்
வாய்மையிது காணார் மதி. (௧௧)

யோகியர்கள்-நிச்சலபுத்தி யுடையவர். பண்பால் உயர்ந்தோனை - பெருமைக் குணங்களைப் பெற்ற ஜீவனை.

ஒளியெல்லாம் என்னுடையவைகளே யெனல்.

ஆதித்தன் பால்நின் றகிலவுல கும்விளக்கும்
சோதிச் சுடரும்வான் தோய்மதியின் - சீதவொளி
தானும்வளர் அக்நினியிற் றங்கொளியும் என்னவென
ஊனமற நீயுணர்வாய் உற்று. (கஉ)

சோதிச்சுடர் - மிகுந்த ஒளி. என்னவென - என்னுடைய ஒளிகளேயென்று. என் - விஷ்ணுவினுடைய. ஒளி - ப்ரபை அல்லது சைதந்யம்.

பரமாத்மா இன்னின்ன பொருள்களினின்று இன்னின்னவை செய்வனெனல்.

பூமிக்குட் புக்கிருந்து பூதங்க ளைப்பொறுப்பேன்
எமமுற என்வலியால் ஏதமறத் - தேமிரதம்
தன்மயமாம் சந்திரனுய்த் தாரணியில் எப்பயிரும்
தின்மையற வேவளர்ப்பேன் சேர்ந்து. (கங)

வலி - ஓஜஸ். இரதமயமாம் - ரஸமயமாகிய. தேம் - இனிமை.

உதராக்னியாயிருந்து உணவுகளை ஜீர்ணப்படுத்துவேன் எனல்.

ஓதும்வயிற் றுள்ளுறையும் அக்கினியா உற்றிருந்து
தீதில் உயிர்க்குலத்தின் தேகத்தில் - பேதமற
நால்வகையாம் ஊணும் நலமாக வேசமிப்பேன்
ஏனுமிரு வாயுவினோ டேய்ந்து. (கச)

அக்கினி - வைசுவாநரன் என்னும் ஜடராக்நி. நால்வகை ஊண் - உண்டல், தின்றல், நக்கல், பருகல் ஆகிய நால்வகை உணவுகள்; சோறு, கறி, தேன், நீர் என்பவை போல்வன. சமைத்தல் - ஜீர்ணிப்பித்தல். இருவாயு - பிராணவாயு, அபானவாயு.

**உள்ளத்திருப்பவன் நான், நினைவு அறிவு மறதி யெல்லாம் என்னிடத்திருந்துண்டாகும், வேதங்களைச் செய்தவனும் உரைப்பவனும் அவற்றால் உணரப்படுபவனும் நானே.**

*எல்லார்தம் உள்ளத் திருப்பேன்யான் என்னின்றும்*
*சொல்லரு நினைபபறிவு சோர்மறதி - தொல்லைமறை*
*ஓர்வானும் அத்தால் உணரப படும்பொருளும்*
*சீரினதைச செய்தோனும் நான்.* (கரு)

*உள்ளத்திருப்பேன் - புத்தியில் ஆத்மாவாக இருப்பேன்.*

**உயிர்கள் பொன்றும் பொருள், கூடஸ்தன் அழியாப் பொருள் எனல்.**

*பொன்றுவன பொன்று எனபபொருள்கள் பூவுலகில்*
*நின்றுயிரு பார்லாகத் தோன்றிடுவ - பொன்றுவன*
*எவ்வுயிரும் ஆமால் இறவாதான் யாரென்னில்*
*தவ்வுறு கூடத்தன் தான்.* (கசா)

*பொருள்கள்; புருஷர் என்று முதல்நூலில் கூறப்பட்டுள்ளது; ஆயினும் பொருளென்பதே பொருள்.*

**இவ்விரண்டிற்கும் வேறாயுள்ள உத்தமபுருஷன் பரமாத்மா, அவனே எங்கும் நிறைந்த ஈசனெனல்.**

*உத்தமனு நற்புருடன் ஓதுபர மான்மாவென்*
*றித்தரையில் மேலோா இயம்புவரால் - சொற்றஅவன்*
*மூவுலகி லும்நிறைந்து முறைமவற்றைத் தாங்கியுறும்*
*வீவில்தனி ஈசனென வேண்டு.* (கஎ)

**என்னைப் புருஷோத்தமனெனக் கூறுதற்குக் காரணம் இன்னதெனல்.**

*பொன்றுபுரு டன்றனிலும பூவுலகிற் பொன்றுது*
*நின்றபுரு டன்றனிலும நீடியர்சசி - ஒன்றலினுல்*
*என்றனைஇத் திண்புவியும் எந்தமறை யுங்கூறும்*
*ஒன்றுபுரு டோத்தமனென் றுற்று.* (கஅ)

### என்னைப் புருஷோத்தமனா யுணர்பவன் எல்லாம் அறிந்து என்னைப் பூஜிப்பனெனல்.

போதும் மயக்கமறப் பொற்பினெனை இவ்வண்ணம்
ஓதுபுரு டோத்தமனா ஓர்ந்திடுவான் - ஏதமற
எல்லாம் அறிந்தோனாய் எவ்வுயிரும் யானெனவே
எல்லாப் வணங்குவனே மற்று. (௧௯)

### இந்தப் பரம ரஹஸ்யத்தை அறிபவன் கிருதார்த்தனாய் ஞானியாவனெனல்.

ஆருமறைக் கெல்லாம் அருமறையாம் இந்நூலைத்
தேரும்வகை செப்பினேன் இங்குநீர் - பார்த்தகேள்
இன்னதனைத் தேர்வான் இயற்றுவவெல் லாம்முடித்துத்
துன்னறிஞன் ஆவன் துணி. (௨௰)

நூல் என்றது இங்கு இந்த அத்தியாயம் ஒன்றையே குறித்தது. இவ்வத்தியாயத்தில் கீதோபதேசம் முழுதுமன்றி வேதோபதேசம் முழுதும் அடங்கியுள்ளது. இயற்றுவ - செய்தற்குரிய கருமங்கள்.

### புருஷோத்தம ப்ராப்தி யோகம் முற்றிற்று.



# பதினாறும் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.



1-5. தேவாஸுர ஸம்பத்தின் ஸ்வரூபமும் அவற்றின் பயனும் கூறல்.

6-22. அஸுர ஸம்பத்தை விசேஷமாகக் கூறி அதைப் புருஷன் விடவேண்டுமெனல்.

23. சாஸ்திரவிதியை விட்டுப் பிரவிர்த்திப்பவனுக்கு ஞானம் உண்டாகாதெனல்.

24. சாஸ்திரவிஹிதமான கர்மத்தில் பகவான் அருச்சுனனைப் பிரேரேபித்தல்.



# பதினாறும் அத்தியாயம்.

## தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்.

---

### காப்பு.

கல்லினுக்கோர் பெண்ணின் கவினருளிக் காழ்மரங்கள்
வில்லுமிழ்பூண் ஆடவர்தம் மேனியுறத் - தொல்லை
இழைத்தமலர்த் தாளிணைகட் கெனவலிய நெஞ்சைக்
குழைத்தருளல் ஓர்பொருளோ கொண்டு.

### பாயிரம்.

கொள்ளுரிய தேவியலும் கொள்ளத் தகாஅசுரத்
தள்ளுமிய லும்பயனும் சாற்றிப்பின் - விள்ளுமொரு
சாத்திரத்தின் மாண்பதுவும் தாமரையாள் வாழ்மார்பன்
பார்த்தனுக்குக் கூறும் பரிந்து.

---

### நூல்.

(பின் மூன்றும் ஒருதொடர்.)
**பயமின்மை முதலியவை தெய்வஸம்பத்துடையானது குணங்களாமெனல்.**

அச்சமுறல் இன்மை மனத்தூய்மை ஆரறிவில்
நிச்சலமாம் யோகத்தில் நின்றிடுதல் - இச்சையுறு
தானம் தமம்வேள்வி சாத்திரங்கள் ஓதல்தவம்
ஊனமறு நேர்மையினம் ஓர். (௧)

அறிவில் யோகத்தில் - அறிவிலும் யோகத்திலும். தமம்-புறச் கரணங்களை அடக்குதல். நேர்மை - நல்வழியில் நிற்றல்.

உயிர்கிடர்செய் யாமையினே டுண்மைசினம் இன்மை
அயர்ச்சியுறு த்யாகம் அமைதி - கயக்கும்வசை
கூறுமை எவ்வுயிர்க்கும் கொள்ளும்அருள் ஆசைபறல்
தேறினிமை நாண்உறுதி தேர். (உ)

த்யாகம் - துறவு. அமைதி - மனச்சாந்தி. கயக்கும்வசை - மெலிவிக்கும் பழிமொழி. தேறு இனிமை - அறிதற்குரிய மார்த்தவம்; மிருதுத்தன்மை.

தேசுபொறை சிந்தை தளராமை செம்மைவிசு
வாசம்அற வஞ்சனைசெய் யாமையொடு - பேசும்
செருக்கின்மை என்னிவைகள் தெய்வசம்பத் தானுக்
கிருக்கும்இயல் ஆமெனவே எண். (௩)

தேசு - தைரியம். பொறை - பிறர் குற்றங்களைப் பொறுத்து மன்னித்தல். செம்மை - தூய்மை. தெய்வசம்பத்தான் - மேலான் ஸுகம் அடையப் பெறுவானுக்கு.

## இடம்பம் முதலியவை அஸுரஸம்பத்தானுடைய குணங்களென்ல்.

இடம்பமொடு தன்மதிப்புத் தற்புகழ்ச்சி இன்னம்
கொடுஞ்சொலொடு குற்றமுறு கோபம் - மடம்தன்னே
டுற்றஇவை யாவும் அசுரகதி உற்றிடுவான்
பெற்றிடுமோர் தீக்குணமாப் பேசு. (௪)

## தெய்வஸம்பத்தால் முக்தியும் அஸுர ஸம்பத்தால் பந்தமும் உண்டாமெனல்.

தெய்வவியல் முத்திக்கும் தீயஅசு ரத்தகைமை
எய்தும்வினைக் கட்டுக்கும் ஏதுவாச் - செய்துளவால்
ஓதுமுயர் தெய்வகதி உற்றிடற்கு நீஉரியாய்
ஆதலினுற் கொள்ளல்துயர் ஆங்கு. (௫)

வினைக்கட்டு - ஸம்ஸாரபந்தம்.

தெய்வவியலைச் சொன்னேன், அஸுரவியலையும் சொல்வேனெனல்.

*இப்புவியில் தெய்வா சுரம்என் றிருவகையாச்*
*செப்புவர்காண் பூதச் சிருட்டியினை - அப்பிரிவில்*
*தெய்வவகை வித்தரித்துச் செப்பினேன் ஆசுரமும்*
*மெய்தஉரைப் பன்கேள் இனி.*

*சிருட்டி - ஸ்ருஷ்டிக்கப்பட்ட பொருள்கள்.*

அஸுர ஸ்வபாவத்தார் நன்மை தீமைகளைப் பகுத்தறியார், ஆசாரம் சுத்தம் ஸத்யம் என்பவும் இல்லார் எனல்.

*செய்வனவாம் நல்வினையும் செய்தல் தவிர்வினையும்*
*ஐயற ஓரார்காண் அம்புவியில் - வெய்யதொரு*
*ஆசுரமாம் தன்மையினா ஆசாரம சுத்தம்மெய்*
*நேசமுமஇவ் வொன்றும்இலார் தேர்.* (எ)

உலகம் ஆண்பெண் கலப்பினால் உண்டாவது; அதற்குக் கர்த்தாவில்லை யென்பர் எனல்.

*சத்தியமும் அன்றுபுவி தன்மநிலை யும்இல்லது*
*கத்தனில தாண்பெண் கலப்பதனாலே - உற்றுளதாம்*
*காமமே அன்றிக் கருதுபிற காரணமின்*
*றாம்இதனுக் கென்பார் அவர்.* (அ)

*தன்மநிலை-தர்ம ப்ரதிஷ்டை: தர்மாதர்மங்களைச் சார்ந்திருப்பது.*

இவ்விதக் கொள்கைகளை யுடையவராய்ப் பகைவர்போல லோகநாசத்துக்காகவந்து பிறப்பார்கள் எனல்.

*கூறியவிக் கொள்கைதனைக் கொண்டழியும் தன்மையராய்*
*விறிலொரு புன்மதிசேர் வெந்தொழிலோர் - ஏறுபகை*
*யாளரென வந்துதிப்பர் அம்புவிக்கு நாசமதை*
*மூளுவித்தற் கன்னவர்தாம் முன்.* (கூ)

*அழியுந்தன்மையராய் - ஸ்வர்க்காதி மேலுலகங்களை அடையும் வழியில்லாதவராய்.*

**காமவசத்தராய்க் கெட்ட கார்யங்களை இடம்பத்தால் செய்வாரெனல்.**

*ஆரா நெடுங்காமம் ஆர்ந்தே இடம்பமதம்*
*தீராத மானத்தால் செய்திடுவர் - சீரில்லினை*
*மோகத்தால் தீயனவே முன்னினராய்த் தூய்மையில*
*தாகுமன நிச்சயத்தோ டாங்கு.* (க0)

(பின்னிரண்டும் ஒரு தொடர்.)

**காமநுகர்ச்சியே மேலென்று கருதி அதற்காகத் தீவழியால் பொருள் சம்பாதிப்பாரெனல்.**

*மண்ணொழிந்து மாளும் வரையிற் றொடர்ந்துவரும்*
*எண்ணிறந்த சிந்தையராய் இப்புவியில் - உண்ணிறைந்த*
*காமநுகர் வேஅனைத்தின் மேலென் கருத்தினராய்*
*ஆமதிதுவே யின்றென்பார் ஆய்.* (கக)

*சிந்தை - விசாரம். காமநுகர்வு - விஷய ஸுகங்களை அநுபவித்தல்.*

*ஆசைத் தளைநூற்றின் ஆர்ப்புண்டு காமமொடு*
*மாசுறுமக்கோப வயத்தராய்ப் - பேசுற்ற*
*காமநுகர் வைப்பொருதல் கண்ணிநீதி நீதியறத்*
*தீமைநெறித் தேடுவரால் சென்று.* (கஉ)

*தீமைநெறி - வழிபறித்தல் முதலிய கெட்ட வழிகளால்.*

(பின்மூன்றும் ஒரு தொடர்.)

**இன்னமும் பின்வரும் நினைப்பும் செய்கையும் உள்ளாரெனல்.**

*இதுவின்று பெற்றனன்யான் எண்ணியுறும் இச்சை*
*அதுவும் அடைந்திடுவன் ஆரும் - நிதியமிது*
*என்னுடைய தாயுளதால் இப்பொருளும் பிற்பகலில்*
*நன்னரென தாய்விடுமே நன்கு.* (கங)

அப்பகைவன் என்னால் அடப்பட்டான் ஆங்கடுவன்
இப்பரிசின் ஏனையர்தம் இன்னுயிரும் - ஒப்பரிய
ஈசனும்நான் போகியும்நான் இன்புறுவன் வென்றிடுவன்
மாசில்வலி யும்பெறுவன் மற்று. (கச)

அடப்பட்டான் - கொல்லப்பட்டான். ஈசன்-அதிபதி.

திருவும் குடிப்பிறப்பும் சேர்ந்துள்ளேன் எற்கு
மருவுநிகர் யாருளர்இம் மண்ணில் - அருமகமும்
ஆற்றுவன்யான் ஈவேன் களிப்பேனென றஞ்ஞானம்
ஏற்றுமயக் குற்றிவர்தாம் ஈங்கு. (கரு)

பன்னினைப்பால் உள்ளம் திகைப்புற்றுப் பாரிடையே
உன்னரிய மோகவலை உட்கிடந்தங் - கின்னல்தரும்
காமநுகர்ச் சிக்கட் கருத்துற்ற சிந்தையராய்த்
தீமைநர கில்விழுவர் சென்று. (கசு)

தற்புகழ்வார் ஆகித் தவிர்பவர்ாய் நல்வணக்கம்
பொற்பில் செருக்கும் பொருள்மயக்கும் - உற்றவராய்ச்
செய்வார் செருக்கதனாற் செப்பும்விதி யிற்பிறழ்ந்து
நெய்வார் மகம்பெயர்க்கு நேர்ந்து. (கஎ)

நல்வணக்கம தவிர்பவராய - வணக்கம் இல்லாதவராய்: முரட்டுத்தன முடையராய். பெயர்க்கு மகம் செயவார் என்று கூட்டுக. பெயர்க்கு - சிரத்தையில்லாமல்.

**இவர் அகந்தையினால் ஈசுவரனாகிய என்னை அவமதிப்பாரேனல்.**

ஆரும் அகங்காரம் அந்தைவலி காமமொடு
சேரும் சினத்தினராய்த் தீயரிவர் - கூருமழுக்
காறதனால் என்னை அவமதிப்பர் தம்மெயினும்
வேறுபிறர் மெய்யினிலும் மிக்கு. (கஅ)

என்னைத் தம் மெயினும்...மெய்யினிலும் அவமதிப்பர் - தங்கள் சரீரத்திலும் மற்றச் சரீரங்களிலும் நிறைந்து நிற்கும் என்னை அவமதிப்பர்,

என்னை வெறுப்பவராகிய இவரை அஸுரயோனியில் வீழ்த்துவேனெனல்.

என்னை வெறுப்பவராய் வெய்யவராய் இவ்வுலகில்
துன்னும்நர ரிற்கடையாம் தூய்மைதவிர் - இன்னவரை
என்றும் இருமபுவியில் ஆசுரமாம யோனியிலே
நன்றறவே வீழ்ததிடுவன் நான். (கசு)

ஆசுரயோனி - புலிசிங்கம் முதலிய கொடியவிலங்குகளின் வயிற்றில்.

இவர்கள் அஸுரயோனியிற் பிறந்து அநேக ஜன்மங்களில் வருந்துவாரெனல்,

ஆசுரமாம் யோனி அடைந்தபல ஜன்மத்தும்
தேசழிந்த மூடர்களா கத்திரிந்தே - மாசகல
என்னையடை யாமல் இழிபிறவி உற்றுழல்வார்
இன்னவர்தாம் என்றே அறி. (உ0)

காம க்ரோத லோபம் மூன்றும் நரகவாயிலாமெனல்,

வெந்நிரய வாயிலது விண்டுரைக்கின் மூவகையாம்
தன்னையற வேசிதைக்கும் தன்மையன - அன்னவைதாம்
காமமொடு லோபம் கடுஞ்சினமும் காணுய்நீ
தாமிவற்றைத் தள்ளல் கடன். (உக)

நிரயவாயில் - நரகத்தில் செலுத்துவது.

இம் மூன்றுவாயில் வழிச்செல்லாதவன் முக்தியடைவானெனல்,

மோகவிருள் மூடியவிம் மூவகையாம் வாயிலைவிட்
டேகினவன் தான்தற் கிதஞ்செய்து - வாகை
பெறும்அரசர் கோமானே பேரான வீடும்
உறுவன்அத னுலென் றுணர், (உஉ)

**சாஸ்திரவிதியை விட்டுத் தன்னிச்சைப்படி நடப்பவன் ஒரு நன்மையும் அடையானெனல்.**

*சாத்திரத்திற் சொற்றவிதி தன்னைத் துறந்தெவனே*
*சித்தியில்தன் இச்சைவழிச் செல்கின்றான்—சாற்றுமவன்*
*சித்திபெறல் இல்லன் சுகம்பெறலும் இல்லன்சேர்*
*முத்திபெறல் தானுமிலன் முன்.* (உங)

*சாஸ்திரம் - வேதம். சித்தி - புருஷார்த்தத்தை அடைதற்குரிய யோக்யதை.*

**சாஸ்திரமே விதி நிஷேதங்களுக்குப் பிரமாணமெனல்.**

*ஆதலினாற் செய்தல் செயாதொழிதல் ஆமிவைக்குத்*
*தீதில்பிர மாணமது சாத்திரமே - போதவிழும்*
*தார்மார்ப சாத்திரத்தில் சாற்றுநெறி தேர்ந்திங்குச்*
*சீருடன்நீ செய்தல் கடன்.* (உச)

*பிரமாணம் - தெரிவிப்பது. இங்கு - கர்மத்துக் கர்தவ்ய, இந்த நிலைமையில்.*

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம் முற்றிற்று.



## பதினேழாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

# பதினேழாம் அத்தியாயம்.

## சிரத்தா த்ரய விபாக யோகம்.



### காப்பு.

வானினிடைத் தோன்றி மறைதருமின் போலழியும்
ஊனமலி வாழ்க்கையதன் ஒண்பயனை - ஞானநெறி
பார்த்தனுக்குப போதித்த பண்ணவன்தாள் போற்றிவினை
தீர்த்தவரே பெற்றிடுவார் தேர்ந்து.

### பாயிரம்.

சிரத்தைதவம் வேள்விஉணு செபபியலவ் வொன்றும்
இருத்துகுணத் தால்மூன்றும் என்றும - கருத்துயரும்
ஓம்தத்சத் என்னும உரைபபொருளும் உற்றுரைபபான்
பூந்துளவத் தாரன்அருள் பூண்டு.

---

## நூல்.

**சாஸ்திரவிதியை விட்டுச் சிரத்தையோடு பூஜிப்பவர் நிலைமை யாதென்று அருச்சுனன் கேட்டல்.**

சாத்திரத்தில் கூறும் விதியைத் தவிர்ந்திடினும்
கீர்த்தியுற மிக்க சிரத்தையொடும் - ஏத்துபவர்
தநிலைமை சத்துவமோ ராசதமோ தாமதமோ
என்னையது கூறிடுவாய் ஈங்கு. (க)

தவிர்ந்திடினும் - அறியாமையாலே அநுஷ்டியாவிடினும். தந்நிலைமை - அவரது பூஜை.

### சிரத்தை மூவகையெனல்.

முத்திறமாம் அச்சிரத்தை முன்னின் உடல் பெற்றார்க்குத்
தத்தம் இயற்கையினால் சார்ந்திடுமே - அத்த அவை
சத்துவமும் ராசதமும் தாமதமும் ஆமவற்றின்
பெற்றியினிப் பேசக்கேள் பெட்டு. (உ)

பெட்டு - விரும்பி.

### குணத்துக்குத் தக்கபடி சிரத்தையும் சிரத்தைக்குத் தக்கபடி ஜீவனும் இருக்குமெனல்.

தத்தம இயற்கைக்குத தக்கபடி மெய்யுருக்கும
இத்தரையில அச்சிரத்தை யாவர்க்கும் - பெற்ற
சிரததைமய மேபுருடன் சேர்சிரதத்தை யாதோ
உரைத்தஅது வேஅவனும் ஓர். (௩)

புருடன் - ஜீவன்: ஸம்ஸாரி. அதுவே - அதற்குத் தக்கபடியே.

### ஸாத்விகர் தேவர்களையும், ராஜஸர் யக்ஷ ராக்ஷஸர்களையும், தாமஸர் பூத ப்ரேதங்களையும் பூஜிப்பாரெனல்.

ஏராரும் தேவர்களை ஏத்திடுவார் சாத்துவிகர்
சேராய் இராசதர்தாம் சென்றியக்கர் - போரரக்கர்ப்
போற்றிடுவார் தாமதர்தாம் போற்றுவர்பூ தங்களையும்
ஆற்றலில்ப்ரே தங்களையும் ஆங்கு. (௪)

### சாஸ்திரவிதியைத் தவறிச் செய்பவர் அஸுரஸ்வபாவ முடையவரெனல்.

சாத்திரம்அல் லாவிதத்தால் சாரும் விருப்பாசை
ஆற்றல்உள ராகி அகங்காரம் - சேர்த்த
இடம்பம்இவற் றாலே கொடுந்தவத்தை நீங்குத்
திடம்படவே செய்வர் சிலர். (௫)

ஆரறிவில் லாராகி அங்கமதிற் பூதமெலாம்
சேரமெலி வித்ததனிற் சேர்ந்துறையும் - சீருடைய
என்றனையும் உள்மெலிக்கும் இத்திறத்தார் தம்துணிபு
நன்றறுமோர் ஆசுரமாம் நாடு. (சு)

என்றனையும் உள்மெலிக்கும்; பகவானை மெலிவித்தலாவது அவரது உபதேசத்தைக் கொள்ளாது கைவிடலேயாம்.

உணவு, வேள்வி, தானம், தவம் என்பவை ஒவ்வொன்றும் மூவகையாமெனல்.

யாவுயிர்க்கும் கொள்ள இனிதாகும் ஊணாதவும்
மூவகையாம் அவ்வாறே முன்னிச்செய் - தாவிலொரு
வேள்வியொடு தானம் தவம்இவையும் மூவிதமே
கேள்அவற்றின் பேதம் கெழு. (எ)

ஸாத்விகர் விரும்பும் ஊண் இன்னதெனல்.

ஆயுள்வலி உற்சாகம் ஆரோக்கி யம்சுகமோ
டேய பிரீதியெனும் இன்னவற்றைத் - தேயாமல்
ஓங்குவிப்ப வாய்இரதம் தைலம்உரம் இன்புளஊண்,
ஆங்குவப்பாம் சாத்துவிகர்க் கார்ந்து. (அ)

ராஜஸர்க்குப் பிரியமான ஊண் இன்னதெனல்.

கைப்புப் புளிப்புக் கடுஞ்சூடு காரம்உவர்
நைப்பின்மை தாகமிக நல்குவதென் - றிப்பரிசார்
துன்புதுய ரைப்பிணியைத் துன்னுவிக்கும் உண்டியினால்
இன்புறுவர் ராசதர்தாம் ஈங்கு. (கூ)

'கடுஞ்சூடு' என்பதுபோலக் 'கடுங்கைப்பு', 'கடும்புளிப்பு', 'கடுங் காரம்' என்றும் கொள்க.

## தாமஸர் விரும்பும் உணவு இன்னதெனல்.

யாமம் கழிந்த சுவையிழந்த நிமணத்த
நேமமறு ஓரிரவு நின்றனவும் - தாமொருவர்
உண்டு மிகுந்தனவும் ஒண்மையிலா துற்றனவும்
கொண்டிடுவர் தாமதர்தாம் கூர்ந்து. (கO)

ஒண்மை - தூய்மை: சுத்தம்.

## ஸாத்விக யஜ்ஞம் இன்னதெனல்.

மேவும் பயனில் விருப்பிலராய் மாமறையின்
நாவில் விதிப்படியே தாமதனை - ஓவலறச்
செய்தல்கடன் என்னுமொரு சிந்தையினிற் செய்யுமகம்
மெய்தருமோர் சத்துவமா வேண்டு. (கக)

## ராஜஸ யஜ்ஞம் இன்னதெனல்.

நாடுபயன் ஒன்றைப் பெறவிழைந்தும் ஞாலத்தார்
பீடுறவே தற்புகழ்ந்து பேசவும் - பாடவமாய்ப்
பண்ணுகின்ற வேள்வி பரதகுலத் தார்வறே
நண்ணுகின்ற ராசதமாம் காண். (கஉ)

தற்புகழ்ந்து - தன்னைச் சிலாகித்து. பாடவம் - பெருமை.

## தாமஸ யஜ்ஞம் இன்னதெனல்.

விதிப்பிறழ்வாய் அன்னம் விருப்பினளி யாது
பதப்பிறழ்வில் மந்திரங்கள் பன்னு - திதப்படியே
தக்கிணையும் ஈயாது சார்சிரத்தை இன்றிச்செய்
அக்கிருது தாமதமாம் ஆங்கு. (கந)

காயத்தால் செய்யும் தவங்கள் இவையெனல்.

தேவர்மறை யோர்குரவர் சீர்அறிஞர்ப் பூசித்தல்
தாவிலொரு சௌசமுநேர் மைதநனமும - மேவியிடர்
செய்யாமை யும்பிறையும செப்புமிவை தேர்வேநதே
மெய்யால் இயற்றுதவம வேண்டு. (கச)

பிறை - பிரமசர்யம்.

வாக்கால் செய்யும் தவங்கள் இவையெனல்.

இன்னா இழைத்தல் இலதாகி உண்மையாய
வன்மையிலா தொண்பயனை வாய்த்தவுரை - பன்னுதலும்
வேதமுதற் பல்கலையின் வேண்டும் பயிற்சியும்
தீதறுவாக் கின்தவமாம் தேர். (கரு)

இன்னா - உயிர்களுக்குத் துன்பம். இங்குக் கூறிய குணங்க ளெல்லாம் ஒருங்கே பெற்றவழியே அவ்வுரை தவமாகும். ஒன்றிரண்டு குறையினும் ஆகாது.

மனத்தாற் செய்யும் தவங்கள் இவையெனல்.

அலையா தமர்த்துதலும் அன்புறலும் உள்ளம
உலையாத மௌனமும் ஓடா - நிலைநிறுத்தும
வன்மையும் தூய்மையும் வாய்த்திடுதல மானதமாம்
நன்மைதரு மெய்த்தவமாம் நாடு. (கசு)

உள்ளம் அலையாதமர்த்துதலும் என்று கூட்டுக.

கீழ்க் கூறிய மூவகைத் தவமும் ஸாத்விகமெனல்.

மேவும் பயனில் விருப்பிலராய் நெஞ்சம்நிலை
ஓவாமல் உற்றவரால் அன்புமிகப் - பூவில்
புரிந்திடும்இம் முத்திறத்துப் புண்ணியத்தை மேலோர்
தெரிந்திடுவர் சத்துவமாத் தேர்ந்து. (கஎ)

ராஜஸதவம் இன்னதெனல்.

புகழ்ச்சி உபசாரம் பூசனையை வேண்டித்
திகழ்ச்சியற வேசெருக்காற் செய்த - நெகிழ்ச்சியுறும்
அந்நிலைமை ஆராத் தவந்தன்னை ஆன்றோர்கள்
பன்னுவரி ராசதமாப் பார். (கஅ)

தாமஸதவம் இன்னதெனல்.

அறிவின்மையாற்றன்னை அன்பின் ஒறுத்தோ
பிறருடைய நாசனத்தைப் பெற்று - நிறைவுறவோ
செய்திடும்அச சீரில் தவம்தன்னைச் செப்புவரால்
மெய்தவிரும் தாமதமா விண்டு. (கசு)

ஸாத்விகதானம் இன்னதெனல்.

கொடுத்தல்விதி என்றுகொடை யாதொன்று கைம்மா
றடுத்துகவா தாங்குரிய காலம் - வடுத்தவிரும்
தேசமொடு பாத்திரமும் தோர்ந்துதவப் பட்டிடுமோ
மாசிலது சத்துவமாம் மற்று. (உ0)

எக்கொடைக்கும் மாறுகந்தோ எனைப் பயன்விழைந்தோ
தக்கமனம் நொந்தோ தரப்படுமால் - அக்கொடையைக்
கற்றோர் இராசதமாக் கண்டுரைபபர் காசினியில்
பற்றுருக் கேறனையாய் பார். (உக)

தாமஸதானம் இன்னதெனல்.

உரித்தல்லாக் காலத்தும் தேயத்தும் உற்றுப்
பொருத்தமிலாப் பூரியர்க்குப் பொற்பார் - திருத்தமுறு
பூசனையும் இன்றிப் புகழ்ச்சியற்ப் புக்களித்த
மாசறுதா னம்தா மதம். (உஉ)

ஓம் தத் ஸத் என்பவற்றின் மகிமைகூறல.

ஓம்தத்சத் தென்பனவாம் ஒண்பெயர்கள் பிர்மத்துக்
காம்தகைய வாய்அளிக்கப் பட்டுளவால் - போந்தனகாண்
பூவயனே டார்மறையும் புண்ணியநல் வேள்விகளும்
தாவறும்அப் பேர்களினல் தந்து. (உங)

வேள்வி தவம் தானம் எல்லாம் ஓமென்று
தொடங்கிச் செய்யப்படுமெனல்.

ஆதலினல் ஓமென் றறைந்துதொடங் கப்படுவ
சாதகமாம் வேள்விதவம் தானங்கள் - தீதறவே
எபபோதும் நூலில் விதித்தபடி யேபிரம
விற்பனரால் மேதினியில் மிகுகு. (உச)

அவை தத் என்னும் சொல்லால் மோக்ஷத்தை இச்சிப்பவரால்
செய்யப்படுமெனல்.

ஆரும் பயன்குறியா தன்பிற் றவம்தானம்
சீருறுநல் வேள்வி செயப்படுமால் - சேரரிய
முத்திதனை வேண்டுநரால் தத்தென்மொழி யாலெடுத்துப்
பத்தியொடு பாரிடத்தில் பார். (உரு)

ஸத் என்னும் சொல்லின் உபயோகம் கூறல்.

உண்மைநலன் என்னும் பொருளில் உரைத்திடுவார்
வண்மையுறு சத்ததனை வாள்வேந்தே - எண்மையறு
நற்கருமம் என்னும் பொருளினிலும் நாடியதைப
பொற்பிற் புகன்றிடுவர் போந்து, (உசு)

### ஸத் என்னும் சொல் இன்னமும் எவ்வாறு உபயோகிக்கப்படுமெனல்.

வேள்வி தவம் தானத்தில் மேவும் திரநிலையும்
அள்வினையில் வல்லாய்அச் சத்தென்ப - கேளாய்நீ
இன்னவற்றிற் காக இயற்றுமொரு கன்மமும்
பன்னுவர்சத் தென்றே பரிந்து. (உ௭)

### அஸத் கார்யங்கள் இன்னவையென்றும் அவற்றால் பயனில்லையென்றும் உணர்த்தல்.

ஆரும் சிரத்தையற அறப்புரியும் ஆகுதியும்
சேர்தவமும் தானமும் செய்வினையும் - பாரில்
அசத்தெனபார் அன்னவற்றால் ஆர்பயனென் றிங்கும்
சித்திநிலை மேலும்இலை போய். (உ௮)

சிரத்தா த்ரய விபாக யோகம் முற்றிற்று.





பதினெட்டாம் அத்தியாயத்தின்

# பொருளடக்கம்.

1. ஸந்யாஸம் த்யாகம் என்பவற்றின் தத்வத்தை அருச்சுனன் கேட்டல்.

2. ஸந்யாஸ த்யாக பதார்த்தங்களைக் கூறல்.

3. கர்மங்களை விடுதல் விடாமையைபபற்றி சாங்க்ய மீமாம்ஸகர்களின் மததனதத் தெரிவித்தல்.

4-6. பலாபேக்ஷையைவிட்டு நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்யவேண்டுமென்பது தமது அபிப்பிராயமென்று கூறல.

7-9. நித்யகர்மங்களை விட்டுவிடக்கூடாதென்றும், தாமஸாதி பேதத்தால் கர்ம த்யாகம் மூன்றுவிதமென்றும் கூறுதல்.

10. ஸர்வ கர்ம பரித்யாக ரூபமாகிய ஞானநிஷ்டையை அடைவதைக் கூறுதல்.

11. கர்மபல த்யாகம் செய்தவர்களைத் த்யாகியென்பார் எனல்.

12. ஸந்யாஸிகளுக்கு அநிஷ்டாதி திரிவித பலபாவம் சொல்லுதல்.

13-15. ஸர்வகர்மங்களுக்கும் அதிஷ்டானுதி காரணம் ஐந்தும் கூறல்.

16. கேவலம் ஆத்மாவில் கர்த்திருத்துவத்தைக் கற்பிப்பவர் துஷ்டபுத்தி யுடையாரெனல்.

17. ஆத்மாவினிடத்தில் கர்த்திருத்வாதி அபிமானம் கற்பியாதவன் ஸுமதியுள்ளவனெனல்.

18. கர்மத்தைச் செய்விக்கும் ஞானுதி த்ரயத்தையும் கரண த்ரயத்தையும கூறுதல்.

19. ஞானம், கர்மம், கர்த்தா என்பவை குணபேதத்தால் மூவகையாதல் கூறல்.

20-28. ஸாத்விகாதி பேதத்திலுலே ஞான கர்ம கர்த்தாக்கள் மூன்றுவகை யெனல்.

29. புத்தியும் திருதியும் குணபேதத்தால் மூவகையாதலைச் சொல்வேனெனல.

30-39. ஸாத்விகாதி பேதத்தினுல் புத்தி திருதி ஸுகங்களுக்கு மூன்றுவிதம் சொல்லுதல்.

40. ஸம்ஸாரத்தில் உட்பட்ட எல்லாப் பொருள்களும் மூன்று குணத்தை உடையன என்று கூறல்.

41-44. ப்ரஹ்ம க்ஷத்ரிய வைசிய சூத்திரர்களின் கர்மங்களின் வேறுபா டுணர்த்துதல்.

45-46. ப்ராஹ்மணுதி வர்ணத்தவர் தத்தம் கர்மங்களைச் செய்தலினுல் ஞானநிஷ்டையைப் பெறுவாரெனல்.

47-48. ஸ்வதர்மத்தை விட்டுவிடக் கூடாதெனல்.

49. ஆசக்தி இல்லாதவனுக்கு ஸந்யாஸத்தில் ஞானநிஷ்டா லக்ஷணமான நைஷ்கர்ம்ய ஸித்தியைச் சொல்லுதல்.

50. கேவலம் ஆத்மஞான ரூபமான நைஷ்கர்ம்ய ஸித்தி க்ரமமாகக் கிடைக்குமென்று கூறல்.

51-53. விஸ்தாரமாக, சிரேஷ்டமான ஞானநிஷ்டா ப்ராபதியைச சொல்லுதல்.

54. மேழே கூறிய முறைமைப்படி ஞானலக்ஷண பக்தி ப்ராப்தியைச் சொல்லுதல்.

55. ஞான லக்ஷணமான பக்தியினல் பகவத் தத்வ ஜ்ஞானம ஸித்திககுமெனல.

56. ஞானநிஷ்டா யோக்யதையைப் பலனாக உடைய பகவத் பக்தியோகத்தைத் துதித்தல்.

57. ஈசுவரனுகிய தம்மிடத்தில் ஸர்வ கர்ம ஸந்யாஸ பூர்வமாய் ஸமாதி புத்தியைப் பெற்று மனத்தை நிறுத்துதலை அருச்சுனனுக்கு உபதேசித்தல்.

58. தம்மிடத்தில் மனத்தை வைத்தலினுல் அஜ்ஞானத்தைக் கடத்தலாதலையும் அல்லாவிடில் நாசமடைதலையும கூறுதல்.

59-60. அஹங்காரத்தால் யுத்தம் செய்யேனென்றுகொண்டிருந்த உறுதி மித்யா நிச்சயமென்று உணர்த்தும்பொருட்டு அருச்சுனனுக்குப் பிரகிருதி பரதந்த்ரத்வம் சொல்லுதல்.

61. ஈசுவரன் ஸர்வாந்தர்யாமியாயிருத்தலினுலே ஸர்வ பூதங்களையும் பிரேரகம் செய்ய வல்லவனென்று கூறல்.

62. இதர விஷயங்களில் செலுத்தாமல் மனமுழுதும் ஈசுவரனிடத்தில் செலுத்தலால் சாசுவத பதத்தைப் பெற லாமெனல்.

63. இதுகாறும் கூறிய அதிரஹஸ்யமான ஞானவிசாரத்தாலே இச்சைக்குத் தக்கபடி செய்யலாமென்று உத்தரவு செய்தல்.

64. அருச்சுனன் தம்மிடத்தில் மிகவும் அன்புடையோனாதலின் எல்லாவற்றிலும் அதிரஹஸ்யமான விஷயங்களை அவனுக்குக் கூறுதல்.

65-66. பரம ரஹஸ்யமான சிறந்த ஞானத்தை உபதேசித்தல்.

67-69. அபாத்திரனுக்கு சாஸ்த்ரோப்தேசம் செய்யலாகாதென்றும் பாத்திரனுக்குச் செய்தலின் பலமும் கூறுதல்.

70-71. இந்த சாஸ்திரத்தைப் படித்தலாலும் கேட்டலாலும் அடையும் பலம் கூறுதல்.

72. தம்மால் கூறப்பட்ட கீதாசாஸ்திரத்தாலே உன் அஜ்ஞானமெல்லாம் போயிற்றா என்று அருச்சுனனைக் கேட்டல.

73. அஜ்ஞானம் போய் ஞானம் உண்டாயிற்றென்று அருச்சுனன் கூறுதல்.

74-78. சஞ்சயன் கூறுதல்.

# பதினெட்டாம் அத்தியாயம்.

## மோக்ஷ ஸந்யாஸ யோகம்.



### காப்பு.

ஞானத்தின் பின்னே அரிய வழிநடந்து
கானனத்தைத் தூய்மைசெயும் கண்ணன்மெய் - ஞானமருள்
தாளெனும்நற் கஞ்சம் தமியேன் உளத்தடத்தே
நாளுமலர நாட்டும் நவை.

### பாயிரம்.

சந்யாசத் தாலே தளராத ஞானத்தை
நன்மையுறப் பெற்றதனால் நாடரிய - சொன்மலியும்
முத்திதனைப் பெற்றிடலை முன்னோன் மொழிந்தகற்றுப
புத்தியுறு மோகமெலாம் புக்கு.



### நூல்.

**ஸந்யாஸம் த்யாகம் என்பவற்றின் உண்மையை உரைக்கவேண்டு மெனல்.**

செப்பரிய சந்யாசம் த்யாகமெனும் இவ்விரண்டின்
மெய்ப்பரிசிவ் வண்ணம்என, வெவ்வேறு - தப்பறவே
உய்த்துணர உள்ளம் விழைந்திட்டேன் உத்தமனே
மெய்த்துணையே நீயெனக்கு விள். (௧)

**காம்யகர்மங்களின் பயனைவிடுதல் ஸந்யாஸம்;**
**ஸர்வகர்மபலனையும் விடுதல் த்யாகம் எனல்.**

*காமியமாம் கன்மப் பயனைக் கடிநதொழித்தல்*
*ஏமமுறு சந்யாசம் என்பரே - தாமறிஞர்*
*எவ்வகையாம் கன்மத்தும் எய்தும் பயன்துறத்தல்*
*செவ்விதிகழ் த்யாகமென்ப தேர்.* (௨)

**சிலர் எல்லாக்கர்மங்களையும் துறக்கவேண்டுமென்றும், சிலர் யஜ்ஞதானதவங்களை விடக்கூடாதென்றும் சொல்வரெனல்.**

*கன்மத்தைத் தீதெனவே கண்டதனைக் கைவிடுதல்*
*தன்மமெனச் சில்லோர்கள் சாற்றுவரால் - நன்மைதரு*
*வேள்வியொடு தானம் தவமிவற்றை விட்டிடுதல்*
*சால்புடைத்தன் றென்பர்சிலர் தாம்.* (௩)

**பகவான் த்யாகத்தைப்பற்றித் தம்கொள்கையைக் கூறுவேனெனல்.**

*கூறியஅத் த்யாகம் குறித்துளதோர் உண்மையினை*
*ஏறனையாய் யானிங் கியம்பக்கேள் - வீறார்*
*பரதகுலக் கோவே பகர்தரும்அத் த்யாகம்*
*உரைபுரிவர் மூவகையென் றுற்று.* (௪)

**யஜ்ஞ தானதவங்களால் சித்த சுத்தியும் ஞானமும் உண்டாதலின் அவற்றை விடக்கூடாதெனல்.**

*விடற்பால அல்லகாண் வேள்விதவம் தானம்*
*அடுத்தவற்றை ஆக்கல்கடன் ஆமே - திடப்படுமத்*
*தானம் தவம்வேள்வி சாற்றும் விவேகிகளுக்*
*கூனம்அறுத் துள்விளக்கும் ஓர்.* (௫)

உள்விளக்கும் - சித்த சுத்தியை உண்டு பண்ணும்.

ஆயினும் இக் கர்மங்களை அபிமானமும் பலாபேக்ஷையும் விட்டுச் செய்யவேண்டும் எனல்.

இக்கருமம் எல்லாம் இயற்றல்கட னேயெனினும்
அக்கருமத் தாரும்அபி மானமும் - புகல
பயனும்அற விட்டுப பரிந்தவற்றைத் திண்ணம்
செயல்கடனென் றென்மதமாம் தேர். (௬)

விதிக்கப்பட்ட கன்மங்களை அவிவேகத்தால் விடுதல் தாமஸத்யாகமெனல்.

விதித்தவொரு கன்மத்தை விட்டிடுதல் கூடா
ததைத்தவிர்தல் ஆதருமோ கத்தால்-மதிப்பகலும்
தாமதத்தி யாகமெனச் சாற்றுவரே மேலோர்கள்
நீமதிக்க நெஞ்சுத் திரு. (௭)

துக்ககரமாகும் என்று விடப்படும் கர்மத்யாகம் ராஜஸ த்யாகமாம், அதனால் பயனில்லை யெனல்.

எவனொருவன் துன்புளதாம என்றுகரு மத்தை
அவலமொடு மெய்வருத்தம் அஞ்சித்-தவிடுவன்
அன்னான்செய் த்யாகம் இராசதமாம் ஆர்பயனைத்
துன்னானே என்று துணி. (௮)

ஆர்பயனை - மோக்ஷமாகிய பயனை.

விதிக்கப்பட்ட கர்மங்களை அபிமானமும் பலாபேக்ஷையும் விட்டுச் செய்தல் ஸாத்விக த்யாகம் எனல்.

செயற்பால தோர்கருமம் செய்தல்கடன் என்று
மயக்கொழிய மல்கும்அபி மானம் - பயக்கும்பலன்
இவ்விரண்டும் விட்டங் கியற்றுவதே சத்துவமாம்
செவ்விதிகழ் த்யாகம் தெரி. (௯)

ஸாத்விக த்யாகியானவன் துக்ககரமென்று விதிந்த்தோர் கர்மத்தை விடவும் மாட்டான்; ஸுகதகரமென்று இச்சிக்கவும் மாட்டானெனல்.

சத்துவம் விட்டுமனச் சந்தேகம் அற்றறிவால்
சித்தம் தெளிவுற்ற த்யாகியவன் - வைத்ததொழில்
தீதென்று சிந்தை வெறுத்தலுமில் நன்றென்று
மோதமுறல் தானுமிலன் முன். (கO)

கர்மத்தைவிடுதல் முடியாததாதலின் கர்மபலனை விட்டவனே த்யாகியெனல்.

உடலோடு கூடும் உயிர்க்கென்றும் கன்மம்
விடலரிதால் முற்றும் வினையின் - தொடர்பயனை
விட்டவனே தயாகி எனப்படுவான் வேல்வேந்தே
கட்டுரைத்தேன் இன்னதனைக் காண். (கக)

பலனைவேண்டுபவர்க்கு அப் பலன் ஸுகதுக்க மிச்ரமாயிருக்கும், வேண்டாதவர்க்கு அந்தஸுகதுக்கங்கள் இல்லையெனல்.

ஒண்பயனை இச்சித் துஞற்றுநர்க்குக் கன்மபலன்
துன்பம் சுகம்கலப்பாய் முத்திறமாய்ச் - சம்பவிக்கும்
அப்பயனை வேண்டாமல் ஆக்குநருக் கோர்பொழுதும்
செப்பினதுண் டாதலில்லை தேர். (கஉ)

ஒவ்வொரு கர்மத்துக்கும் ஐந்துகாரணம் உண்டெனல்.

எவ்வகையாம் கன்மமும் ஏதமற வேமுடிக்க
ஐவகையாம் காரணங்கள் ஆங்குளவாம் - செவ்விச்
செயல்முடிவாம் சாங்கியத்திற் செப்பவற்றை என்பால்
வயமுடையாய் கேளாய்நீ மற்று. (கங)

**அதிஷ்டானம், கர்த்தா, காரணம், சேஷ்டை, தெய்வம் என்பவை காரணங்களா மெனல்.**

சேரும்அதிட் டானமும் செய்பவனும் பல்வகையாத்
தேரும் கரணமும் சேட்டைகளும் - சீருடைய
தெய்வமும்என் றைவகையாம் செப்பியஅக் காரணங்கள்
நெய்தவழும் வேலாய் நினை. (கச)

அதிட்டானம் - விருப்பு வெறுப்பு முதலியவைகளுக் கிருப்பிடமாகிய தேஹம். கரணம் - செவி முதலாகிய இந்த்ரியங்கள். சேட்டைகள் - உச்சுவாசம் நிசசுவாசம் முதலிய செய்கைகள். தெய்வம் - ஆதித்யன் முதலான தேவதைகள்.

**எவ்வகையான கர்மத்துக்கும் இவ்வைந்தும் காரணமாமெனல்.**

காயமொடு வாக்குக் கருத்தென்னும் இன்னவற்றால்
ஞாயம்அநி யாயமென நண்ணுமவினை - மேயநரன்
யாதொன்றைத் தான்அங் கியற்றிடினும் இவ்வைந்தும்
ஏதுஅதற் கென்றே அறி. (கரு)

**ஆத்மாவை மாத்திரமே கர்த்தாவாக எண்ணுபவன் உண்மை அறியாதவனெனல்.**

ஏதுவிவை ஐந்துமொருங் கேய்ந்திருப்ப ஓர்செயலில்
ஓதுறுமவ் வான்மாவை ஒன்றினையே - காதலுறச்
செய்பவனா எண்ணும் திரிபுடைய துன்மதியோன்
மெய்தெரியக் காணானே மிக்கு. (கசா)

எய்ந்திருப்ப - பொருந்தியிருத்தலாலே.

**தன்னைக் கர்த்தாவாக எண்ணாதவனுக்குக் கர்மத்தால் பந்தமில்லை யெனல்.**

எவனொருவன் கர்த்தாவா எண்ணானோ தன்னை
எவனுளமோர் மாசடையா தென்றும் - அவன்இந்தப்
பேருலகைச் செற்றும் பிழையொன்றும் இல்லானே
ஆரும் தொடக்குமிலன் ஆங்கு. (கஎ)

ஒவ்வொரு தொழிலுக்குஞ் செய்விக்குங் கருவி மூன்று;
அவ்வாறே ஆதாரமும் மூன்றெனல்.

ஆராறியும் தேர்பொருளும் அன்னதறி வோனும்எனச்
சேர்தொழிற்குத் தூண்டல் திரிவிதமாம் - சார்தொழிலுக்
காதார முமகரணம் அக்கருத்தன் கன்மமென
ஓதுமொரு மூவிதமாம் ஓர். (கஅ)

ஞானமும் கர்மமும் கர்த்தாவும் குணபேதத்தால்
மும்மூன்று வகையாமெனல்.

ஞானமொடு கன்மம் நவிலும் கருத்தன்இவை
ஆனகுண பேதத்தால் ஆமேழூன் - ஞானமறப
பல்குணமும எண்ணிப பகர்நூல் உரைக்குமதைச்
சொல்லுவன்இனிக் கேட்டுத் துணி. (கசு)

பூதங்கள்தோறும் அழிவில்லாத ஒரேபதார்த்தத்தைக்காணல்
ஸாத்விக ஞானமெனல்.

வெவ்வேறாய் எங்கும் விரிகின்ற பூதமெலாம்
அவ்வேறு பாடின் றமைந்தொன்றாய் - எவ்வகைய
மாற்றமுமில் லாஅழிவில் வத்துவினைக் காண்பதுவே
சாற்றுமொரு சத்துவஞா னம். (உ0)

ஒவ்வோ ருடலிலும் உள்ள ஆத்மாவைத் தனித்தனி
யானதென்று கருதுதல் ராஜஸ ஞானமெனல்.

வெவ்வே றுடற்கண்ணும் வெவ்வே றெனக்கருத
வெவ்வே றிருத்தலினால் வெவ்வேறாய் - வெவ்வே
றிலக்கணங்கள் உள்ளனவாய் எண்ணுகின்ற ஞானம்
கலக்கமுறும ராசதமாம் காண். (உக)

ஒவ்வொரு கார்யத்தையும் அதுவே எல்லாமென்று காரணமின்றி அற்பபுத்தியால் கருதும் அறிவே தாமஸமாதும் எனல்.

ஏதுவில தாகி இலதாய்உண் மைப்பொருளும்
ஓதுமொரு சிற்றுணர்வால் ஒவ்வொன்றும் - பேதமறும்
எல்லாம் எனக்கொள்ளும் புல்லறிவை ஏதமிலார்
சொல்லுவர்காண் தாமதமாச சூழ்ந்து. (உஉ)

அபிமானமும் பலாபேக்ஷையும்-விருப்பு வெறுப்பும் இன்றிச்செய்யப்படும் விதித்த கர்மம் ஸத்வ கர்மமாமெனல்.

நியமித்த எக்கருமம் நீங்கிஅபி மானம்
பயனில் விருபமின்றிப பாங்கா - இவையும்
விருபபுவெறுப பற்றுச் செயப்படுமோ மேலோர்
உரைபபர்அதைச சத்துவமென் றுற்று. (உ௩)

பலாபேக்ஷயோடும் அஹங்காரத்தோடும் கஷ்டப்பட்டுச் செய்யும் கர்மம் ராஜஸமா மெனல்.

அரும் பயனில் விருப்பும்அகங் காரமும்
சேரும்எவ னெலாதச செய்கருமம் - பேராம்
வருத்தமுற வாய்த்துச் செயபபடுமற் றதை
உரைத்திடுவர் ராசதமென் றுற்று. (உ௪)

தாமஸகர்மம் இன்னதெனல்.

தொடரும் பயன்தனையும் மற்றவர்க்குத் துன்னும்
இடரும பொருளிழப்பும் எய்தும் - அடலினையும்
எண்ணாது மோகததா லேதொடங்கும் கன்மத்தைக்
கண்ணாத தாமதமாக் காண். (உ௫)

எய்தும் = தான்பெற்ற. கண்ணாத = கருதத்தகாத. தாமதம் - தாமஸகர்மம்.

ஸாத்விககர்த்தா இன்னவன் எனல்.

பற்றிகந்து நானெனலும் பண்பிகந்து செய்வினையில்
உற்று விடாமுயல்வும் ஊக்கமும் - முற்றுகினும்
இல்லெனினும மாற்றம் இலனும் கருத்தாவே
சொல்லுமொரு சாத்துவிகன் சூழ். (உசு)

'விடாமுயல்வும் ஊக்கமும்' உற்று என்று கூட்டுக. மாற்றம் விகாரம்: வேறுபாடு.

ராஜஸகர்த்தாவின் தன்மை கூறல்.

ஆசையுளன ஆகிப பயனில் விருப்புளனுய்த்
தேசில் உலுத்தனுய்த் தீயொழுக்கில் - நேசனுய்த்
துன்பினுமபோ னுமகிழ்வும சோகமும் கொள்கருத்தன்
அம்புவியில் ராசதனும் ஆங்கு. (உஎ)

கருத்தன் - கர்த்தா: செய்பவன்.

தாமஸகர்த்தாவின் தன்மை கூறுதல்.

கருத்தும் வணக்கமும் கல்வியுமில் லானுய்த்
திருத்தவிரும் வஞ்சகமும் தீங்கும் - பெருத்தஒரு
சோம்பும் துயரும் சுருக்கின்மை யும்முடையோன்
தேம்பலுறு தாமதனும் தேர். (உஅ)

தேம்பலுறு - பின்னுக்கு வருத்தத்தை யடைகின்ற.

புந்தியும் திடமும் மும்மூன்று வகையாமெனல்.

புத்திவகை யும்திடத்தின் பேதமும் போதியலால்
முத்திறமாம் முற்றவற்றை வெவ்வேறிங் - குற்றுனக்கு
பான்புகலக் கேளாய் இருங்கடல்சூழ் ஞாலமொடு
வான்பரவும் சீர்த்தியினுய் மற்று. (உகூ)

போதியலால்-கீழேகூறிப்போந்த ஸத்வாதி முக்குணங்களாலே. முற்று - முழுதும்; 'உம்' தொக்கது.

### ஸாத்விகபுத்தி இன்னதெனல்.

செயலோடு செய்யாமை செய்தக்க ஆகா
பயமோட டில்லாமை பந்தம் - உயவருளும்
வீடெனுமிவ் வெண்வகையும் மெய்யின்உணர் புத்திதனைக்
கூடுமொரு சாத்விகமாக் கொள். (௩௰)

### ராஜஸபுத்தி இன்னதெனல்.

சீராரும் தன்மமும் சீரில் அதன்மமும்
ஏராரச் செய்வினையும் எவ்வினையும் - நேர்மையற
ஒன்றிருக்க ஒன்று உணர்ந்திடும்அப் புத்திதனை
நன்றில் இராசதமா நாடு. (௩௧)

### தாமஸபுத்தி இன்னதெனல்.

உள்ளம்இருள் மூடுதலால் உற்றதொரு கன்மத்தைக்
கொள்ளரும்அ தன்மமாக் கொண்டுலகில் - விள்ளும
பொருளனைத்தை யும்திரிபாக் காணுவதாம் புத்தி
திருவிலொரு தாமதமாம் தேர். (௩௨)

உற்றதொருகன்மம் - தான் செய்தற்குரிய நற்கருமத்தை. திரு- மேன்மை.

### ஸாத்விக த்ருட மின்னதெனல்.

பண்ணுமொரு யோகத்தாற் பந்தித் துளம்தன்னை
எண்ணுயிர்ப்போ டிந்தியங்க ளின்செயலை - நண்ணும்
ஒருநிலையில் வைப்பதெனும் ஓர்திடத்தை ஓராய்
மருவரிய சாத்விகமா வாய்த்து. (௩௩)

உயிர்ப்பு - பிராணவாயு.

### ராஜஸ த்ருதி யின்னதெனல்.

யாதால் அறம்பொருளும் இன்பும் கடைப்பிடித்துக்
கோதார் தரும்பயனிற் கொள்பொழுது - போதும்
விருப்பொழிதல் இல்லானே அத்திடத்தை மேலோர்
உரைப்பர் இராசதமென் றற்று. (கஙச)

### தாமஸ த்ருதி யின்னதெனல்.

யாதொன்றால் நல்லறிவில் லாதொருவன் இன்துயிலும்
ஓதுபய முமதுயரும் உண்மெலிவும் - பேதைமையும்
விட்டொழிதல் இல்லானே அத்திடத்தை மேலோர்கள்
கட்டுரைப்பர் தாமதமாக் காண். (கஙரு)

(பின்னிரண்டும் ஒருதொடர்.)

### ஸுகம் மூன்றுவிதமாம் எனல்.

முத்திறமாம் இன்பும் மொழிகுவென் கேளாய்நீ
குத்திரமில் பாரதர்க்குக் கோமானே - எத்திறமாம்
இன்பிற் பழக்கத்தால் உட்களிக்கி யாதொன்றால்
துன்பத் தொடக்கறுவன் ஆங்கு. (கஙசு)

* தொடக்கறுவன் : ஒருவன் தொடக்கறுவன் என்று வருவித்து முடிக்க.

### ஸாத்விகஸுக மின்னதெனல்.

ஆரம்பத் தேவிடம்போல் தோன்றியெஃ தந்தத்தில்
பேரமுதம் போலப் பிறங்கிடுமச் - சீருடைய
நின்மலமாம் ஆத்துமஞா னத்தில்நிகழ் இன்பத்தை
நன்மைதரு சாத்விகமா நாடு. (கஙஎ)

### ராஜஸஸுகம் இன்னதெனல்.

இந்தியங்கள் தம்விடயத் தேய்ந்திடலால் எவ்வின்பம்
முந்தஅமு தமபோல் முளைத்தபின் - அந்தத்தில
வெவ்விடம்போல் தோன்றுமதை மேலோர் உரைத்திடுவா
ரெவ்வமுறு ராசதமென் றிங்கு. (௩௮)

### தாமஸஸுகம் இன்னதெனல்.

முதலும் அதன்பின்னும் மோகத்தைத் தந்து
மிதமில்துயி லால்மடியால் மேவந்தே - மதியாமை
தன்னாலும உண்டாகும இன்பதனைத் தாமதமாம்
மன்னுவின் பென்ப மதி. (௩௯)

### இந்த முக்குணங்களும் சாராதபொருள் இல்லையெனல்.

சொல்லார் பகுதிக்கட் டோன்றுகுணம் இம்மூன்றில
நில்லா தொழிந்தபொருள் நீணிலத்தும - அல்லாத
வானுலகில வாழமரர் மத்தியினும் ஒன்றிலையே
தானிதனை ஓராய் தனி. (௪௦)

### நால்வருணத்தாருக்கும் அவரவர் இயற்கைப்படி கர்யங்கள் வேறுபடுமெனல்.

வேதியர்கள் வேந்தர் வணிகரொடு சூத்திரரென்
றோதியவிந நால்வருணத் தோர்க்கும - நீதில்தொழில்
தத்தம் குணத்துதித்துச சாரும்இயற் கைப்படியே
வைத்துவகுத் துள்ளனகாண் மற்று. (௪௧)

### பிராஹ்மணர்களுடைய இயற்கைத் தொழில்கள் இவையெனல்.

உற்றசம மும்தமமும் ஒண்தவமும் தூய்மையும்
பெறறபொறை யும்நேர்மைப் பெற்றிமையும் - குற்றமிலா
ஞானமும்விஞ் ஞானமும் ஆத்திகமும் நான்மறையோர்க்
கானஇயற் கைத்தொழிலாம் ஆங்கு. (௪௨)

### க்ஷத்திரியர்களுடைய இயற்கைத்தொழில்க ளிவையெனல்.

வீரியமுந் தேசும் விறலும் திறமையும்
போரிற் புறங்கொடுத்தல் இன்மையும் - நேருமொரு
வண்மையும் மாநிலமாள் மாண்பதுவும் மன்னவருக்
கென்றுமியற் கைத்தொழிலாம் ஈங்கு. (சங)

### வைசிய சூத்திரர்களின் இயற்கைத் தொழில்கள் இவையெனல்.

உழுதல்பசு ஓம்பலோ டொண்பண்டம் மாற்றல்
வழுவில் வணிகர்க் கியற்கை யாய்ந்த - தொழிலாகும்
மற்றனைவருக் குற்றபணி வாய்த்தியற்றல் சூத்திரர்க்குப்
பற்றுமியற் கைத்தொழிலாம் பார். (சச)

### தத்தந் தொழில்களைச் செய்பவர் ஸித்தி யடைவாரெனல்.

தத்தந் தொழிலவிருப் பிற்றாமியற்று வாரடைவார்
சித்தியினி மாந்தர்கள்தம் திங்கில்தொழில் - உற்றவ
ரநுட்டித்துச் சித்தி யுடையும்நெறி தன்னை
உனக்கிசைப்பன் கேளாய் உவந்து. (சரு)

### தந்தம் தொழில்களால் ஈசனைப் பூஜித்து ஸித்தி பெறுவாரெனல்.

பரனிடை எப்பொருட்கும் எய்தும் பிறப்புளதாம்
பரனிவற் றெல்லாம் இலங்கிடுவன் - தேவனைத்
தத்தமக்காம் கன்மத்தால் சார்ந்தடைவார் மானிடர்கள்
உத்தமமாம் சித்தியினை ஊங்கு. (சஎ)

சார்ந்தடைவார் - பூஜித்துப் பெறுவார்கள். சித்தியினை அடைவார் என்று கூட்டுக.

பரதர்மத்தைச் செய்வதிலும் ஸ்வதர்மத்தைச் செய்வது
மேலாமெனல்.

நற்குணமொன் றில்லெனினும் தன்கருமம் நன்குபுரி
நிற்பதுமற் றோர்தொழிலிற் கேடறவே - நிற்பதினும்
மேலாமே தன்தொழிலை மேவிப் புரிந்திடுவோன்
யலாதோர் வெம்பவமும் ஈங்கு. (சஎ)

ஸ்வதர்மத்தைச் செய்தற்கரியதென்று
கைவிடக் கூடாதெனல்.

குற்றமயினும் கன்மத்தை யதமுள தேனும்
செயற்கரிய தென்றுவிடல் தீதாம் - நயக்கக்கேள்
செந்தழலைத் தூமம்போற் செய்தொழிலைத் தீமைபல
சந்ததமும் சூழ்ந்திருப்ப தாம். (சஅ)

ஆசை யில்லாதவனுக்கு ஸந்யாஸத்தால்
நைஷ்கர்ம்ய ஸித்தி யுண்டாமெனல்.

ஓரிடத்தும் பற்றாத புத்தியுடன் உள்ளத்தைத்
திரமுட னேசெயித்துச் சேர்பொருளில் - சாரும்
விருப்பில்லான் எய்தும் வினையொழிவாம் சித்தி
தருககலும் சந்யாசத் தாங்கு. (சகூ)

ஸித்தியைப் பெற்றவன் ப்ரஹ்மத்தை
அடைவானென்று கூறல்.

பாரரிய சித்தியினைத் தானடைந்தோன் தார்வேந்தே
தேரரிய ஞானத்தின் சென்னியுறும் - ஓர்பெருமை
உற்றபிர மத்தைச்சேர் உண்மையினைச் சில்லுரையில்
கற்றலெளி தாஉரைப்பன் காண். (ருo)

(பின் மூன்றும் ஒரு தொடர்.)

ஞானநிஷ்டையும் அதன் பயனும் கூறுதல்.

தூயதொரு புத்தியுடன் துன்னித் துணிந்துதனைத்
தீயநெறி செல்லாது தேர்ந்தடக்கி - ஏயவொரு
சத்தாதி பல்விடயம் தம்மைத் துறந்துவிருப
புற்றவெறுப் பைக்களைந்தே ஊங்கு. (ருக)

விருப்புற்ற வெறுப்பை - தன்னைவந்து பொருந்திய, தனக்குண்டாகிய விருப்பையும் வெறுப்பையும்.

ஏகாந்தம ஆரும இடத்திருந்து சிற்றுணவு
ளாகாநக் கொண்டுமனம் வாக்குடலம் - ஆருமிவை
தமமைபடக் கித்யான யோகபர னாய்ச்சமைந்து
செம்மை விராகத்தைச் சேர்ந்து. (ருஉ)

ஆரும்அகங் காரம் வலிவுசெருக் காமைசினம்
சேருடைமை யும்விடுத்துச் சிந்தைநிறை - ஓர்மமதை
அற்றுஞய்ச் சாந்தம் அடைந்தானே தான்பிரமம
மற்றுத லுக்குரியன் வாய்த்து. (ருங)

ப்ரஹ்ம ஸ்வரூபமாய் நின்றவன் எல்லா வாதனைகளும் நீங்கி பகவத் பக்தியை அடைவானெனல்.

சீரார் பிரமமாய்ச் சிந்தைதனிற் சாந்தமுளான்
ஆரான் ஒருதுயரும் அம்புவியில் - தேரின்
விருப்புமிலன் எவ்வுயிர்க்கண் ணும்சமமா மேவி
இருப்பன்உறும் என்பத் தியை. (ருச)

### பக்தியினாலே பகவானுடைய தத்வத்தை அறிந்து பகவானை அடைவானெனல்.

பத்தியினால் என்னைப் பரிபூர்ண மாஅறிவோன்
எத்தகையேன் யானென்றும் யாதெனனு - தத்துவத்தான்
மன்னவுமே உண்மையினில் இவ்வா றுணர்ந்தென்னைத்
துன்னுவனீ துள்ளம துணி. (௫௫)

### பகவத்பக்தியைப் பெற்றவன் கர்மபந்தம் நீங்கி அழியாத விஷ்ணுபதத்தை அடைவானெனல்.

எல்லாச் செயல்களையும் எப்பொழுதும் செய்திடினும்
நல்லான் எனைப்புகலா நன்குற்றுச் - சொல்லாரும்
என்னருளா லேபெறுவன் என்றுமழி யாதநிலை
மன்னுபதம் தன்னை மதி. (௫௬)

### ஸர்வ கர்மங்களையும் பகவானாகிய தம்மிடத்தில் ஸமர்ப்பித்து மனதை அசையாமல் தம்மிடத்தில் நிறுத்தவேண்டுமெனல்.

கன்மங்கள் யாவும் கருத்தால் துறந்தென்பால்
துன்னரிய ஓர்பரமாச் சூழ்ந்தென்னை - மன்னும்
நிலைபார் மனத்தனாய் நெஞ்சகத்தை என்றும்
குலையாதென் பால்நிறுத்திக் கொள். (௫௭)

### இவ்வுபதேசத்தை கொள்ளுதலின் பயனும் தள்ளுதலின் பயனும் கூறுதல்.

என்பாலுன் நெஞ்சம் இருத்துவையேல் என்னருளால்
துன்பான எல்லாம் தொலைந்திடுவாய் - வன்பார்
அகங்காரத் தாலேயென் ஆருரைகொள் ளாயேல்
நெகிழ்ந்தழிதல் திண்ணம் நினை. (௫௮)

நீ யுத்தம் செய்யேனென்றெண்ணினும் குலத்தியற்கை செய்விக்குமெனல்.

ஆனம் அகங்காரத்தால் யானிங் கமர்புரியேன்
றிலதிய றென்னாநீ சிந்திக்கின் - வீரஅது
வீணாகும நின்னை அமர் மேவப் புகுத்திடுமே
காணுங் குலத்தினியற் கை. (௫௯)

நீ பிரகிருதிக் குட்பட் டிருந்தலாலே மோஹத்தால் செய்யேனென்ற யுத்தத்தை அந்தப் பிரகிருதியின் நியோகத்தால் செய்தே தீருவாயெனல்.

நின்னியற்கை யாலுதித்த நீக்கரிய கன்மத்தால்
இன்னலுறக் கட்டுண் டிருத்தலினீ - மன்னனேகேள்
மோகத்தால் ஆங்கு முனிந்ததனை மற்றோர்நி-
யோகத்தால் செய்திடுவாய் உற்று. (௬௦)

ஸர்வாந்தர்யாமியாகிய ஈசன் ஸர்வபூதங்களையும் தன்னிச்சைப்படி நடத்துவன் எனல்.

பல்லுயிரின் உள்ளத்தும் ஈசன் பதிந்தவற்றைச்
சொல்லும கறங்கிற் சுழல்விப்பன் - வல்லதொரு
மாயையினால் எந்திரத்தின் மீதவற்றை வைத்ததனை
நீயுணர்க இன்னதனை நேர்ந்து. (௬௧)

மனமுழுதும் ஈசுவரனிடத்தில் செலுத்தலால் அழிவில்லாத மோக்ஷத்தை அடையலா மெனல்.

அன்னவனை யேமனமெய் யாலடைக ஆருயிர்க்குத்
துன்னுசர ணாயினிது தோன்றல்நீ - மன்னுமவன்
ஆரருளாற் பெற்றிடுவாய் ஆருமுயர் சாந்தியையும்
சேருமழி வில்பதமும் சென்று. (௬௨)

**இந்த அதிரஹஸ்யமான ஞானவிசாரத்தாலே உன்னிச்சைக்குத் தக்கபடி செய்யலாமெனல்.**

*மறைப்பொருளுள் எல்லாம் மறைவாமிந் ஞானம்*
*சிறக்க உனக் கீங்குரைத்தேன் செம்மால் - பெறப்படுமிந்*
*ஞானமதைச் சிந்தித்து நன்குன் மனக்கியைந்த*
*தானமறச் செய்கவினி உற்று.* (௬௩)

**நீ எனக்கு அன்பனாதலின் அதிரஹஸ்யமான விஷயங்களைக் கூறுகின்றேனெனல்.**

*இன்னம்கேள் எல்லா மறைக்கும்உயர் என்னுரையை*
*உன்னைமிக நேசிக்கும் உண்மையினால் - மன்ன*
*நினக்கிதமாம் ஒன்றை நிகழ்த்திடுவேன் அல்லால்*
*எனக்கிலைவே றெண்ணும் பயன்.* (௬௪)

**என்னை த்யானித்துப் பக்தியோடு பூஜித்தால் என்னையே நிச்சயமாய் அடைவாயெனல்.**

*என்மேல் மனத்தனாய் எற்கினிய பத்தனாய்*
*என்றனையே பூசித் திறைஞ்சிடுக - என்னிடத்துப்*
*போதருவாய் திண்ணம் புகன்றேன்ப்ர திக்ஞையாய்*
*ஏதமிலாய் எற்கினியாய் என்று.* (௬௫)

*எற்கினியாய் என்று - நீ எனக்குப் பிரியமுடையவன் ஆகையினாலே. 'என்று புகன்றேன்' எனக் கூட்டுக.*

**என்னையே சரண்புகுந்தால் உன் பாபங்களெல்லாவற்றையும் நீக்குவேனெனல்.**

*எல்லா அறங்களையும் விட்டொழிந்திங் கென்றனையே*
*நல்லாய் சரண்புகுக நானுன்னை - அல்லல்தரு*
*பாவங்க ளின்முற்றும் பற்றறவே விடுவிப்பேன்*
*மேவுதுயர் எலலாம் விடு.* (௬௬)

### இவ்வுபதேசத்தை பெறுதற் கர்ஹரல்லாதவர் இன்னின்னவரேனல்.

நற்றவமில் லார்க்கும் நவிலுமொரு பத்தியிலாச்
சிற்றறிவி னார்க்கும் செவிகொள்ள - உற்றமனம்
இல்லார்க்கும் என்னை இகழ்வார்க்கும் இன்னதனைச்
சொல்லா தறக்கடவாய் சூழ்ந்து. (கஎ)

சூழ்ந்து - அவர்களுக்கு இவ்வுபதேசம் பெறுதற்கு அதிகாரம் இல்லாமையை ஆலோசித்து.

### இதை பக்தருக்கு உபதேசித்தால் அந்தப் புண்யவிசேஷத்தால் பகவானை அடையலாகுமெனல்.

மேலாகும் இந்த மறைப்பொருளை மேவியெவன்
சீலமிகு பத்தர்க்குச் செப்புவனோ - பாலஅரிய
பத்தியினால் அன்னோன் படரொழிந்தெற் சாருவனே
இத்திறத்தில் ஐயம் இலை. (கஅ)

படர் - துன்பம். ஐயம் - ஸந்தேகம்.

### அந்த பக்தனைப்போல எனக்குப் பிரியமானவன் வேறில்லையெனல்.

அன்னவன்போல் யானுவக்கும் செய்கையினை ஆற்றுபவன்
மன்னுமுயிர் மாந்தர்களுள் மற்றிலை - பன்னுமவன்
தன்னிலுமே லாக எனக்கினியார் தாரணிமீ
துன்னின் இலர் என்றே உணர். (கக)

### இந்த சாஸ்திரத்தைக் கற்பவன் ஞான யஜ்ஞத்தாலே என்னைப் பூஜிப்பவனாவானெனல்.

புண்ணியமாம் இந்தப் பொருவருசம் வாதத்தை
எண்ணியெவன் கற்றிடுவன் எய்ந்தவனால் - நண்ணரிய
ஞானமெனும் வேள்வியினால் நன்குபர வப்படுவேன்
தானிதுவே என்துணிபு சார்ந்து. (எ0)

சார்ந்து பரவப்படுவேன் என்று கூட்டுக.

### இதை அன்போடு கேட்பவனும் பாபங்கள் நீங்கி முக்தியை அடைவானெனல்.

எவனொருவன் கேட்பான் சிரத்தையொடும் ஈதை
அவமதியா தென்னை அவனும் - பவமதனில்
விடுற்று மேலாம வினைத்தூய்மை யார் அடையும்
கேடிலவுல கங்கள்பெறும் கேள். (எக)

### இந்தக் கீதாசாஸ்த்ரத்தால் உன் அஜ்ஞானமெல்லாம் நீங்கியதா எனல்.

கேட்டனையோ இன்னதனைக் கேடிலுணர் வொன்றினனாய்
ஈட்டிய அஞ்ஞானத்தால் ஈண்டியுனை - வாட்டுமயல்
என்னே தனஞ்சயவெல் லாமொழிந்தங் கேகினவோ
பொன்னாரும் பூணாய் புகல். (எஉ)

உணர்வொன்றினனாய - ஏகாக்ர சித்தனாய்.

### அஜ்ஞானம் போய் ஞானம் உண்டாயிற்றெனல்.

மோகமெலாம் போயினவால் முன்னவனே நின்னருளால்
வாகுறுமெய்ஞ் ஞானம் மருவினனால் - ஏகினவென்
ஐயமெலாம் திண்மைநிலை ஆர்ந்தேனிங் காற்றுவனின்
செப்பவுரை யின்படியே சென்று. (எ௩)

### சஞ்சயன் கூறுதல்.

மன்னும் புகழ்வாசு தேவற்கும் மாண்பாரும்
வின்னிகரில் அர்ச்சுனற்கும் மேவியவித் - துன்னும்
வியப்பினொடு மேனிப் பொடிப்பருள் சம்வாதம்
உய்யப்பெறவே கேட்டேன் உவந்து. (எச)

வின்னிகரில் - விற்போரில் ஒப்பற்ற. உய்ப்பெறவே - நான் உஜ்ஜீவிக்கும்படி.

## வராகபுராணத்தில் கூறிய

# கீதாமான்மியம்.



### பூமிதேவி ஸ்ரீ மஹாவிஷ்ணுவைக் கேட்டல்

ஈசனே எம்மானே எவ்வா றுரித்திடுமால்
தேசுதவிர் வேறொன்றிற் செல்லாத - நேசம்
பழவினையிற் பட்டுழலும் பண்பில்லா தார்க்குக்
கழறியருள் மற்றெனக்குக் கண்டு. (க)

### ஸ்ரீ மஹாவிஷ்ணு சொல்லுதல்.

பழவினையிற் கட்டுண்டும் கீதைப் பயிற்சி
நழுவாது கைக்கொள்வான் நங்காய் - கழறரிய
முத்தனவன் இன்பம் முழுதுடையான் கன்மத்தால்
எத்தனையும் மாசடையான ஈங்கு. (உ)

கீதைதனைக் கற்றிடுமேற் கேளாய் அவன்றன்னைத்
தீதார் கரும்பவங்கள் சேராவே - போதுமலி
தாமரையின் பத்திரத்தைத் தண்புனல்சா ராததுபோல்
நீமனம்கொள் ளாயிந் நிசம். (௩)

தேசுதரும் கீதைத் திருமுறைதான் எங்குளதோ
காசகல எங்கதுகற் கப்படுமோ - பேசறுமந்
நல்லிடத்தே ஆவ நவைதீர் தலங்களெலாம்
ஒல்லைபிர யாகைமுதல் உற்று. (௪)

அவ்விடத்து வானவரும் ஆரிடரும யோகியரும்
வைவ்விடத்துப் பன்னகர்கோ பாலர்களும்-கொவ்வையிதழ்க்
கோவியரும நாரதரும கூறிடுமோர் உத்தவனும்
யாவருமே உற்றிருப்பார் வந்து. (௫)

கீதைதனை ஓதுமிடம் கேட்டிடும் பூணை விரைவில்
வதமறக் கற்றுக்கற்பிக்கவரும் - நாதம்அது
கேட்குமிடம் எல்லாமே கேளாய் புவியணங்கே
நீக்கமற நண்ணிருப்பேன் நின்று. (௬)

கீதையுறும் தானத்தைக் கிட்டியிருப் பேன் எனக்குக்
கீதையே உத்தமமாம கேகமாம - கீதையினுள்
ஞானத்தைப் பெற்றே நலமாக மூவுலகும
ஊனமறக் காப்பேன் உணர். (௭)

மேலாமென் வித்தையும கீதையே மிக்கவது
மேலாம பிரமத்தின் மெய்யுருவாம் - மேலான
ஆன்மாவின் ஓதரிய உட்பொருளாம் அப்பதத்தின்
தான்மாத் திரையரையாம தான். (௮)

சச்சிதா நந்தமும் கண்ணன் தனஞ்சயனுக்
கிசையுடன் வாயால் இசைத்ததுகாண் - விச்சைமலி
மும்மறையும் அஃதே முடிவிலவரும் இன்பமது
மெய்ம்மையறி வின்விளக்கும் வேண்டு. (௯)

மெய்ம்மை...விளக்கும் - மெய்யறிவை விளங்கப் போதிப்பதும் அது.

என்கொள்பதி னெண்உரையும் யாவனிதம் ஓதிடுவான்
உண்மெலிவில் லாமலவன் உற்றிடுவான் - பண்மலியும்
ஞானமதை மற்றதன்பின் நாடும் பரம்பதத்தை
ஊனமற வேஉறுவான் ஊங்கு. (௧௦)

முற்றுமிதை ஓதல அரிதாயின் போதமொடு
சொற்றிடுக பாதியெனும் சொலவினவன் - பெற்றியுறு
கோதானம் ஈயும் பயனைபெறுவன கோதாய்கேள்
யாதுமிலை ஐயம இதில். (கக)

மூன்றினிலோர் பங்கு முயன்றாடிக் கிற்பெறுவன்
ஆன்றபுனற் கங்கைதனில் ஆடியபன் - தோன்றுப
பெறுவான் அதிற்பாதி போதமற ஓதின்
உறுசோம யாகபலன் உளங்கு. (கஉ)

பத்தியொடும் ஓரத்தி யாயம படிக்கில்நிதம்
சித்தியுறு மன்றகனைச் செவ்வநாம - பெற்றுய
ருத்திரலோ கத்திற்சென் றமரர்தொழ வாழும
பெருந்தகநெடுங் காலமெனப் பேசு. (கங)

பாவொன்றில் நான்கிலொரு பங்கேனும் நாடோறும்
தாவின்றி ஓதுபவன் தானகேளாய் - பூவிடையோர்
மன்வந்த ரமுழுதும் மானிடனாய் வாழ்ந்திடுமே
பண்வந்த சொல்லாய்நீ பார். (கச)

பத்தேழு நாலைந்து பாவிரண்டு மூன்றொன்று
சித்திதரும கீதையினில் தேர்ந்தோதின் - பெற்றிடுவன்
சந்திரலோ கத்தினிடைச் சார்ந்துபதி னாயிரமாண்
டுந்தமுடன் வாழும் அவன். (கரு)

கீதையினை என்றும் படித்திடலாற் கேளாய்நீ
ஓதுமவன் மரணம் உற்றதன்பின் - கேதமற
இப்புவிக்கே மானிடனாய் மீளுமவன் எந்நிலையே
செப்பியமீதோர் உண்மை தெரி. (கசு)

பின்னுமுயர் கீதையினைப் பேணிப் படித்தலினால்
மன்னரிய முத்திதனைப் பாங்காகத் - துன்னுமவன்
கீதையெப்போது மொசால்லைக் கிளத்தலினுஞ் சாமொருவன்
ஏதமற் றீர்க்கும் கதி. (கஎ)

கீதையினை அன்போடு கேட்டிடலா லேகொடிய
பாதகனும் வைகுந்தம் பாங்காகத் - தீதறவே
யென்றிருந்து நாளும் திருமாலி னேடிருந்து
மன்றக் களிக்கும் மதி. (கஅ)

கீதைப் பொருள்தன்னைக் கேடின்றிச் சிந்திப்பான்
ஓதாலோ கன்மமு முஞற்றிடினும் - மாதரிலி
யென்முத்தன் என்று மதிப்புற்றுந் தீதத்தடைவன்
பொன்முற்றும் மேலாம் பரம். (க௯)

பரம் - விஷ்ணுபதம்: வைகுண்டம்.

பற்றுக்கோ டாவடைந்து கீதையினைப் பல்லரசர்
உற்றசன காதியர்கள் ஒண்புகழுடை - பெற்றவர்கள்
வெம்பவத்தில் நீங்கியுயர் மேலாம் பதந்தனைக்
கயமறக் கண்டார்நீ காண். (உ0)

கீதையினை ஓதிக் கிளத்துமதன் மான்மியமிங்
கோதிதனை ஓதாதார்க் கோர்பயனும் - போதாதே
மற்றவர்தாம் கொண்ட வருத்தமெலாம் வீணேமே
முற்றிமைநீ இன்னதனை முன். (உக)

போதாது - வாராது : உண்டாகாது.

சொற்றிடுமிக் கீதைத் துதியுடனே கீதைதனைக்
கற்றிடுவார் நற்பயனைக் காண்பாரே - பெற்றிடற்கு
மிக்கரிதாம் நற்கதியை மேவிச் சுகித்திடுவார்
தக்கவிது காணாய்நீ தான். (உஉ)

சூதமுனிவர் சொல்லியது.

யானுரைத்த என்றுமுள இக்கீதை மான்மியத்தை
ஊனமறக் கீதைதனை ஓதியபின் - தானவிலும்
பண்புடையான் கூறும் பயனெல்லாம் பெற்றிடுமே
திண்புவிமீ தென்று தெரி. (உ௬)

கீதாமான்மியம்
முற்றிற்று.

